# விற்பனைக்குத் தயாராயிருக்கும் புத்தகங்கள்.

| | | | தபால்சார்ஜு. |
|---|---|---|---|
| தேசிகர்பிரபந்தம் வ்யாக்யானம் | ... | ரூ. 4 0 0 | 0 5 0 |
| வடகலைஸம்ப்ரதாய மூவாயிரப்படி குருபரம்பரை ... ... | ... | ரூ. 1 0 0 | 0 1 0 |
| பழநடைவிளக்கம் என்னும் மூவாயிரப்படி குருபரம்பரை த்ரிம்சத் ப்ரச்நோத்தரம் ... ... | ... | ரூ. 1 0 0 | 0 1 0 |
| ப்ரதிபத த்ராவிடார்த்த யுக்தமாயும், தமிழ்த்தாற்பரிய ஸஹிதமாயுள்ள ஸ்ரீபகவத்கீதை ... ... | ... | ரூ. 1 8 0 | 0 2 0 |

வேண்டுவோர் சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன்பேட்டை போலீசு ராகவாசாரியார் தெருவு 8-வது நெம்பர் கிருஹத்தில் அடியிற்கையொப்பமிட்ட என்னிடத்திலும்,

சென்னை அடிபட்டபிள்ளையார் கோயிலுக்கடுத்த விநாயகமுதலி வீதி ஸ்ரீநிகேதன அச்சுக்கூடத்திலும்,

சென்னை முத்யாலுப்பேட்டை தம்புசெட்டி தெருவு 316-வது நெம்பர் ரிப்பன் பிரசிலும்,

திருப்பாப்புலியூரில் புத்தகஷாப்பு ஸ்ரீதரகம்பினியிலும்,

தஞ்சாவூர், திருச்சிநப்பள்ளி, புதுக்கோட்டை இவ்வூர்களிலுள்ள, கி-சபாபதிபிள்ளையவர்கள் புஸ்தகஷாப்புகளிலும், கிரயத்திற்குப் பெற்றுக்கொள்ளலாம்.

தசோபநிஷத் திராவிடபாஷ்யம் அச்சிட்டுக்கொண்டு வருகிறோம்.

இப்படிக்கு,

கு-அனந்தாசாரியார்.



    

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌨𑌮𑌃.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்.

---

## தனியன்கள்.

### நம்பெருமாளருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

ஸ்ரீசைலேஸதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரணவம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

### எம்பெருமானாரருளிச்செய்தது.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

### கூரத்தாழ்வானருளிச்செய்தது.

𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே

அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

## ஸ்ரீ ஆளவந்தாரருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑌾𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂𑌯𑌦𑍇𑌵𑌨𑌿𑌯𑌮𑍇𑌨𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 |
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯𑌨𑌃𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ||

மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய நꞏ குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

## ஸ்ரீ பராசரபட்டரருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂𑌸𑌰𑌶𑍍𑌚𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 |
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌪𑌰𑌕𑌾𑌲𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ||

பூதம் ஸரஸ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீ பக்திஸார குலசேகர யோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஸ்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

  

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# பழநடைவிளக்கம்.

---

ஸ்ரீமந்நாராயணன் ஆநந்தமயமான ஸ்ரீவைகுண்டத்திலே ஸ்ரீபூமி நீளைமுதலான பத்நிகளுடனும் அநந்தகருடஸேனைமுதலி முதலாகிய பரிஜநங்களுடனும் முக்தரோடுங்கூட பரமாநந்தத்தை யநுபவித்துக்கொண்டிருக்கச்செய்தே லீலாவிபூதியிலுள்ளாரு மிப்படியாநந்தத்தை யநுபவிக்க வேணுமென்று அவர்கள் தன்னையடையும்படி சரீரத்தை ஸ்ருஷ்டித்து வேதங்களையுங்கொடுத்து அதின்பொருளைத் தெரிகைக்காக மநுவ்யாஸ வால்மீகி முதலானோரையிட்டு தர்ம்மசாஸ்த்ரங்கள், புராணங்கள், இதிஹாஸங்கள், வ்யாகரணம் முதலானவாறங்கங்கள், இதுகளையுண்டாக்கியும், இந்த ஸம்ஸ்கிருதவேதம்போலே நித்யமாயிருக்கச்செய்தேயும் காலவிசேஷத்திலேமறைந்திருந்த தமிழ்வேதங்களை யாழ்வார்களைக்கொண்டு வெளிப்படுத்தியும், அதின்பொருள்களை நாதமுநிகள் முதலானோரைக்கொண்டு தெரிவித்தும், இப்படி யிவ்வுயிர்கள் தன்னை யறிந்து தொழுது அடையும்படி செய்தான். அதில் வேதம்முதலாகிய கீர்வாணபாஷா ப்ரமாணங்களுடைய வரவாறும் அதற்கு ப்ரவர்த்தகரான ருஷிகளுடைய சரிதங்களும் விஷ்ணுபுராணாதிகளிலே சொல்லும். தமிழ்வேதங்களுடைய வரவாறும் அதற்கு ப்ரவர்த்தகராகிய வாழ்வார்களுடைய சரிதங்களும் பார்க்கவபுராணத்திலும், மார்க்கண்டேயபுராணத்திலும், வ்ருத்தபாத்ம புராணத்திலும், சொல்லும். இந்த வாழ்வார்களை ப்ரதிமைகள்பண்ணி நித்யம் ப்ராம்மணாதிவர்ணங்கள் பூஜிக்கவேணுமென்றும் நாராயணஸம்ஹிதை வராஹஸம்ஹிதை முதலான ப்ரமாணங்களிலேசொல்லுகிறது. நாராயணனுடைய மகிமைகளைக் கரைகண்டு அதிலேமுழுகிக் கீழேகீழே ஆழ்ந்துபோருகிறா ராகையாலே யிவர்களுக்கு ஆழ்வார்களென்றுபெயர். இவர்களிலே யினிசொல்லப் போகிற கோதையும் நாயகனான நாராயணனுடைய கல்யாணகுணங்களாகிய வம்ருதக்கடலிலேமுழுகிக் கீழேகீழேயாழ்ந்து போருமவளாகையாலே யிவளுக்கு ஆண்டாளென்றுபெயர். ஆழ்வாரென்று ஆண்களைச்

சொல்லுஞ்சொல்லு. ஆண்டாளென்று பெண்ணைச் சொல்லுஞ்சொல்லு. இவர்களிலாழ்வார்கள் பதிவர், ஆண்டாளொருத்தி, மதுரகவியாழ்வார் பாஷ்யகாரர் இருவர். ஆகப்பதிமூவரும் இனிசொல்லப்போகிற தமிழ் வேதங்க ளிருபத்திநான்குஞ் செய்தவர்கள். இதிலே நூற்றந்தாதி அமுதனார்செய்ததாகிலும் உடையவரத்தை யங்கீகரித்தபடியாலே உடையவரே செய்தாரென்கிறது. இவர்களில் முதல் பொய்கையாழ்வார். இவர் பாஞ்சஜந்யாம்சம், அவதரித்தவிடம் காஞ்சீபுரத்திலே பொற்றாமரை. காலம், த்வாபரயுகத்தில் எட்டுலக்ஷத்து அருபத்தோராயிரத்துத் தொள்ளாயிரத்திரண்டாவதானஸித்தார்த்திவருஷத்தில் அற்பிசிமாசத்தில் சுக்லபக்ஷத்தில் அஷ்டமீ செவ்வாய்க்கிழமைகூடின திருவோணநக்ஷத்திரம் இவர்செய்த ப்ரபந்தம்:—வையந்தகளிநூறு. இவருக்குத் திருநாமங்கள்:—பொய்கையாழ்வார், ஸரோயோகி இத்யாதிகள். க.

இரண்டாவது. பூதத்தாழ்வார். இவருடைய வவதாரத்திய யுகவர்ஷமாஸங்கள் பூர்வம்சொன்னதுவே யாயிருக்கும். அதில் நவமி புதன்கிழமைகூடின அவிட்டநக்ஷத்திரத்திலே யவதாரம். ஸ்தலம் கடல்மல்லையென்கிற மாவலிபுரத்திலே மாதவிப்பூ. இவர்கதாம்சம். இவர் செய்த க்ரந்தம்:—அன்பேதகளி நூறு. உ.

மூன்றாவது. பேயாழ்வார். இவருக்கும் யுகவருஷமாசங்களதுவே. தசமி வியாழக்கிழமைகூடின சதய நக்ஷத்ரத்திலேஅவதாரம். ஸ்தலம்:-மயிலையில் ஆதிகேசவப்பெருமாள் கிணற்றிலே செவ்வல்லிப்பூ. இவர் நந்தகாம்சம். இவர்செய்த ப்ரபந்தம்:—திருக்கண்டேன்னூறு. இவர்கள் மூவரும் யோநிஜரல்ல. ங.

நான்காவது. திருமழிசையாழ்வார். இவர்க்குயுகவருஷமுமதுவே, தைமாசத்தில் கிருஷ்ணபக்ஷத்தில் ப்ரதமை பாநுவாரங்கூடின மகாநக்ஷத்ரத்தில் அவதாரம். இவர்சக்ராம்சம் இவருக்குபிதா பார்க்கவமுநி. ஸ்தலம் வம்சாரண்யமான மஹீஸாரம். இவர்செய்த ப்ரபந்தங்கள்:—திருச்சந்தவிருத்தம் நூற்றிருபது. நான்முகன் றிருவந்தாதி தொண்ணூத்தாறு. ச.

ஐந்தாவது. நம்மாழ்வார். கலியுகம்பிறந்து நாற்பத்துமூன்றுநாளில் பகுதாந்யவருஷத்தில் வைகாசிமாசத்தில் வெள்ளிக்கிழமையில் விசாகநக்ஷத்ரம். ஸ்தலம்:—தாம்பரபர்ணி தீரத்தில் குருகாபுரம். இவர் களஸ்துபாம்சம். ஸேநாம்சம். பகவதம்சம். இவர்செய்த ப்ரபந்தம்:—திருவிருத்தம் நூறு. ஆசிரியம் ஏழு. அந்தாதி எண்பத்தேழு. அவாவிலந்தாதியென்கிற திருவாய்மொழி ஆயிரத்துவொருநூற்றிரண்டு. இவருக்குத் தமப்பனார் பூவைச்யரானகாரியென்கிறவர். தாயார் நங்கையார். இவருக்கிருப்பிடமான புளிமரமானது சேஷாம்சம். இவர்திருநாமம்:-சடகோபன்

பராங்குசன், வகுளாபரணன், மாறன், இத்யாதி. "క్వాస్తు భూమిష్ఠంతేజః
కించిద్భూమావపాతహ।తద్రూపంభాస్వరంజాతం శఠకోపఇతిస్మృతః॥" என்கிற
மார்க்கண்டேய புராணமும், "తతఃకలియుగస్యాదౌ శాఖ్యాంవిశ్వభావనః ।
విష్ణుభక్తిప్రతిష్ఠార్థం సేనేశోవతరిష్యతి" என்கிற வ்ருத்தபாத்மபுராணமும்
'విష్ణోరంశాంశసంభూతో వేదవేదాన్తతత్వవిత్॥స్తోత్రంవేదమయంకర్తుంద్రావిడబ్రహ్మ
భాషయా" என்கிற பாத்மபுராணவசனமும் "కశ్చిన్మనుష్యరూపస్సన్నృషిత్వా
తత్రవై మునిః । ప్రయాస్యతిపునస్సోపిసాయుజ్యంపరమాత్మనః" என்கிற ப்ரம்மா
ண்ட புராணமும் "మద్భక్తశ్శఠకోపాఖ్యో భవిష్యామిమదిచ్ఛయా" என்கிற
பிராம்மபுராணமும் இவர் மூவருடைய அம்சமென்பதில் ப்ரமாணம். சக்ர
வர்த்தியானராஜா அஷ்டதிக்பாலகர்களுடைய வெட்டம்சங்களுங் கூடிப்
பிறந்தவனென்றும் பலராமன் சேஷாம்சம் பகவதம்சமென்றுஞ் சொல்லு
கிறாப்போலே இவரும் மூன்றம்சமென்று புராணங்கள் சொல்லிற்று. பக
வானுடைய பாதுகை யிவருடைய நாமத்தை வகிக்கையாலே சடகோப
மென்றப்படுகிறது. ரு.

ஆறாவது. குலசேகராழ்வார் கலியுகம்பிறந்து உஅ-வதானபராபவவரு
ஷத்தில் மாசிமாசத்தில் சுக்லபக்ஷத்தில் த்வாதசீ வ்யாழக்கிழமைகூடின
புநர்வஸு நக்ஷத்ரத்தில் அவதாரம். இடம் மலையாளதேசத்திலே கொல்லி
நகரென்கிற ஊர். இவரும்கௌஸ்துபாம்சம். இர்வசெய்த ப்ரபந்தம்:-பெரு
மாள்திருமொழி நூற்றுஞ்சு. கீர்வாணத்திலே முகுந்தமாலாஸ்தோத்ரம்.
இவர் திருநாமம் கொல்லிகாவலன்; கூடல்நாயகன்; கோழிக்கோன்;
இத்யாதி. இவர்க்ஷத்திரியர். சு.

ஏழாவது. பெரியாழ்வார். கலியுகத்தில் நாற்பத்தியேழுவதான க்ரோ
தனவருஷத்தில் ஆனி சுக்லபக்ஷத்தில் ஏகாதசி பாநுவாரங்கூடின ஸ்வாதீ
நக்ஷத்ரத்திலே இவரவதாரம். ஊர் வில்லிபுத்தூர். இவர் கருடாம்சம்.
இவர்செய்த ப்ரபந்தம் பல்லாண்டு பனிரண்டு, திருமொழி நூற்றெழுபத்
தொன்று, இவர் திருநாமம்:—பட்டநாதர்; விஷ்ணுசித்தர். இத்யாதி.
இவர் மின்குடிமி ப்ராம்மணகுலம். எ

எட்டாவது. தொண்டரடிப்பொடியாழ்வார். இவருக்குக் கலியுகத்
தில் இருநூற்றெண்பத்தொன்பதாவதான ப்ரபவவருஷம் மார்கழிமாசம்
க்ருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி செவ்வாய்க்கிழமைகூடின கேட்டை நக்ஷத்ர
த்தில் அவதாரம். ஸ்தலம்-திருமண்டங்குடியென்கிற ஊர். இவர் வநமா
லாம்சம். இவர்செய்த ப்ரபந்தம் திருப்பள்ளியெழுச்சிபத்தும் திருமாலை
நாற்பத்தைந்தும். இவர் திருநாமம்:—விப்ரநாராயணர், பக்தாங்க்ரிரேணு.
இத்யாதி, இவரும் முன்குடிமி ப்ராம்மணகுலம்,

கவிப்பெருமாள் வந்தாரென்று விருதூதக்கேட்ட சம்பந்தரென்கிற சைவ குருவினுடைய சிஷ்யர்வந்து விருதைத்தடுக்க, இவரும் சம்பந்தனிருக்கிற சீர்காழிக்குச்சென்று தாடாளப்பெருமாளென்கிறதிருக்கோலத்தைக்கூடக் கொண்டுபோய் வாக்கு மிகவுங் கிளர்ந்துவருகையாலே சம்பந்தனோடே தர்க்கித்து இவரைக்குறித்து சம்பந்தன்சொன்ன கவியைத் தூஷித்தார். சம்பந்தனு மிவரையொருகவிச் சொல்லச்சொன்னான். இவருஞ் சீர்காழியி லிருக்கிற தாடாளப்பெருமாள்மேலே இருபதுகவிச்சொல்லித் தம்முடைய பெருமைதோற்றமுடிவிலே ஆலிநாடன், அருண்மாறி, அரட்டமுக்கி, அடையார்சீயம், கொங்குமலர்க்குழலியர்வேள், மங்கைவேந்தன், கொற்ற வேற்பரகாலன், கலியன், சொன்னதமிழென்று சொன்னார். சம்பந்தனும் உத்திரஞ் சொல்லமாட்டாதே நீர் நாலுகவிப்பெருமாளென்றுசொல்ல ஜயி த்து எல்லாராலும் பூஜைகொண்டு ஆனைக்கழுத்திலேறி ஜயபேரியறைவித் துக்கொண்டு மீண்டும் ஸ்ரீரங்கத்திற்குவந்தார். இவர் மதிள் முதலானது செய்விக்கச்செய்தே சாஸ்த்ரங்களிற்சொல்லுகிறபடியேசங்கசக்ரசின்னங் களும் அடிப்பாதத்துடனேகூடின திருமண்காப்புக்குறிகளும் மதிள் முத லானவைகளிலே செய்வித்தார். அதுமுதலாக நாளதுவரைக்கு மந்தக்குறி கள் இருக்கின்றன. பின்பு திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகமென் கிற ப்ரபந்தத்தை தேவகாநத்திலே ரங்கநாதன் ஸந்நிதியிலேபாடி அவரை ஸந்தோஷிப்பித்தார். அவர் ஸந்தோஷத்தாலே உமக்கென்ன வேண்டுவ தென்று கேட்டார். திருமங்கையாழ்வாரும் தேவரீர் முன்பு சடகோபன் முகமாக வெளிப்படுத்திய தமிழ்வேதங்கள் நாலையும் திருவத்யயனத் திரு நாளிலே கீர்வாணவேதங்களுடனே பாராயணம்பண்ணும்படியாகக் கட் டளையிட வேணுமென்று கேட்டுக்கொண்டார். ரங்கநாதனு மப்படியே யாகிற தென்றுசொல்லி தேவகாநம்பாடின விவர் மிடருக்குத் தாம் சாற்றின வெண்ணெய்க்காப்பு சேஷத்தைத் தடவிவித்துத் திருக்குறுகை யினின்றுஞ் சடகோபன் ஸ்ரீரங்கத்திற் கெழுந்தருளும்படி திருமுகத்தை யும் ஸந்நிதிப்பேரையும் அனுப்பிவிக்க, சடகோபனுந் திருமுகத்தைத் திருமுடியிலே வைத்துச்கொண்டு திருநாளுக் குதவும்படி ஸ்ரீரங்கத்திற் கெழுந்தருள, திருமங்கைமன்னனுஞ் சடகோபனை யெதிர்கொண்டு திரு வடித்தொழுது ஸந்நிதியிலே யெழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோக, ரங்க நாதனுஞ் சடகோபனைக் குளிரநோக்கி நம்மாழ்வாரென்று திருநாமஞ் சாற்றித் திருமாலைமுதலான வரிசைகளைஸாதிக்க, திருமங்கைமன்னனும் மற்றைநாள் திருவேகாதசிதுடங்கிப் பத்துநாளாகப் பகலிலே கீர்வாண வேத பாராயணமும் ராத்ரிகாலத்திலே திருவாய்மொழியாகிய தமிழ்வேத பாராயணமும் நடப்பித்து பத்தாவதுநாளிராத்திரி திருவாய்மொழிசாற்றும் போது சடகோபன் ரங்கநாதனைத் திருவடிதொழும்படியனுகரித்துக்காட் டும்படிபண்ணி, யிப்படி வருஷந்தோறும் இந்தத் திருநாளுக்குத் திருநகரி யில் நின்றும் நம்மாழ்வாரெழுந்தருளுவதாகநியமித்து திருமாலைமுதலான வரிசைகளையெல்லாம் ப்ரஸாதித்து பெரியபெருமாள் விடைஸாதித்தருளி

நம்மாழ்வாருந்திருக்குறுக்கைக்கெழுந்தருளி வருஷந்தோறும் ஸ்ரீரங்கத்திற் கெழுந்தருளி திருவத்யயநத்திருநாளைப் பரிபாலித்தருளும்படி திருமங்கை மன்னன்செய்த கட்டளைப்பாடு நாளதுவரைக்கு நடந்துவருகிறது.

பின்புதிருமங்கைமன்னனுஞ் சிறிதுகாலத்திலே யொருசிந்தைசெய்து அறிவுடையார் அறிவில்லாதவர்க ளெல்லாருக்கும் பரமபதங்கிடைக்கும் படியாக ரங்கநாதனுடைய வநுமதிகொண்டு சிறிது நிலம்வாங்கி யதிலே சிற்து முதுகாடாக்கி அதிலே தகநம்பெற்ற வெப்பேர்ப்பட்டவர்களுக்கும் மோக்ஷமுண்டாம்படிசெய்த கட்டளைப்பாடு நாளதுவரைக்கும் நடந்து வருகிறது,

திருமங்கையாழ்வார் ஸ்ரீரங்கத்திலே பண்ணின கைங்கர்யங்களினுடைய துகை:-திருமடப்பள்ளி-திருநடமாளிகை-ஆலிநாடன்றிருமண்டபம் - திருக்கொட்டாரம் - அஞ்சுகளஞ்சியம்-இரண்டுதிருமதிள்கள்-திருக்கோபுரங்கள்-ஆகவிப்படி கைங்கர்யங்களைப் பண்ணிக்கொண்டு ரங்கநாதனுக்கு மிகவு மிஷ்டராயிருந்தார். பகவானுடைய கைங்கர்யத்திற்காக வழிபறிப்புமுதலான வக்ருத்யங்களெல்லாம் நல்ல க்ருத்யங்களென்று வேதஞ்சொல்லுகிறதென்றசொல்லி யதற்கு ஸம்வாதமாக வொருபாகவத சுபகதை சொல்லுகிறேனென்றுசொல்லி திருமங்கையாழ்வாருடைய சரித்தைச்சொல்லி கைங்கர்யார்த்தமாகச்செய்த செயல்களெல்லாம் மஹாபுண்யங்களாயிருக்கு மென்று வ்ருத்தபாத்மத்திலே சொல்லுகையாலே திருமங்கையாழ்வாருக்குப் பாபமுண்டென்று சொல்லுகை யஸங்கதம். திருமங்கையாழ்வார் பூர்வம் திவ்யதேசயாத்ரை செய்கிறவளவில் மஹேந்த்ரகிரிக்கருகே பத்ராச்ரமமென்று புராணங்களிற் சொல்லப்படுகிற திருக்குறுங்குடியிலேவந்து நம்பியுடைய வழகை யனுபவித்து அங்கே நித்ய வாஸம் பண்ணவேணுமென்று நினைவுபிறக்கச் செய்தேயும் மற்றுந் திவ்ய தேசங்களைத் தொழவேண்டியும் ஸ்ரீரங்கத்திலே கோபுரப்ராகாராதி கைங்கர்யங்கள் செய்யவேண்டியுமிருந்தபடியாலே திருக்குறுங்குடியை விட்டெழுந்தருளினர். பின்பு அதெல்லாந் தலைக்கட்டினவாறே திருக்குறுங்குடியில் நிதயவாஸஞ்செய்யவாஞ்சைதலையெடுத்தது, பின்புஸ்ரீரங்கநாதன் ஸன்னிதியிலே விண்ணப்பஞ்செய்து அநுமதிகொண்டு குமுதவல்லியாருந் தாமுந் திருக்குறுங்குடியிலே யெழுந்தருளி யோகநிஷ்டராய்க்கொண்டு நித்யவாஸம்பண்ணிக் கொண்டிருந்தார் பார்க்கவப்புராண ச்லோகம் "తతః పరాన్తకో భూత్వా విరక్తో భార్యయా సహ । శ్రీరంగపతినానుజ్ఞాం ప్రాప్య భద్రాశ్రమం పరం, ప్రవిశ్య తత్ర సంతస్థౌ యోగీంద్రస్స సమాధినా" இதற்குப்பொருள் அதற்குப்பின்பு பரகாலரான திருமங்கையாழ்வார் விரக்தராய்க்கொண்டு ஸ்ரீரங்கநாதன் கையிலே யநுக்ஞை நன்றாகப்பெற்று பார்யையான குமுதவல்லியாரோடேகூட பத்ராச்ரமமென்கிற திருக்குறுங்குடியிலே போயிருந்துகொண்டு யோகநிஷ்டருக்கெல்லாந் தலைவரா யிருந்துக்கொண்டு

ஸமாதியென்கிற மகாயோகத்தாலே தேஹந்யாஸத்தைப் பண்ணி மோக்ஷத்தைப் பெற்ருர். என்றுபொருள். இப்படி மஹா ப்ரபாவசாலியான திருமங்கையாழ்வாருடைய வர்ச்சாவிக்ரஹமானது பூர்வமேபிடித்து நாளதுவரைக்கும் ஸ்ரீரங்க ஸ்தலத்திலே பூஜோத்ஸவங்களுடனே யிருக்கிறது. ௰.

இனி ஆண்டாளவதார மெழுதுகிறது. அவதாரகாலங் கலியுகத்தில் தொண்ணூற்றேழுக்குமேற் செல்லாநின்ற நளவருஷம் ஆடிமாசம் சுக்லபக்ஷத்தில் சதுர்த்தி செவ்வாய்க்கிழமைகூடின பூரநக்ஷத்ரம். ஸ்தலம். ஸ்ரீவில்லிபுத்தூரிலே துளஸீவநம். இவள் பூமிதேவியம்சம். இவள் அயோநிஜையானாலும் பெரியாழ்வார் வளர்ப்பாகையாலே ப்ராம்மணவர்ணமென்னப்படும். இவள்செய்த ப்ரபந்தம்:—திருப்பாவைமுப்பது, திருமொழி ௧௪௩. பார்க்கவபுராண ச்லோகம். తులసీమూలమేదిన్యామదృశ్యత శుభావహా। బాలాభూమ్యంశజా పూర్ణచంద్రరేఖేవ శారదీ”. ௧௧.

இனி மதுரகவிகள் அவதாரம் த்வாபரயுகத்தில் எட்டுலக்ஷத்தெண்பத்துமூவாயிரத்தெண்ணூற்றெழுபத்தெட்டுக்குமேற் செல்லாநின்ற ஈச்வரவருஷம் சித்திரைமாசம் சுக்லபக்ஷம் வெள்ளிக்கிழமைகூடின சித்ராநக்ஷத்ரம் அவதாரகாலம். ஸ்தலம் பாண்ட்யதேசத்தில் திருக்கோளூர்திருப்பதி. இவர் குமுதாம்சம் கருடாம்சம். இவர்செய்த ப்ரபந்தம் கண்ணிநுண் சிறுத்தாம்பு. இவர் முன்குடுமி ப்ராம்மணர். ௧௨

இப்படி யாழ்வார்களுடைய வவதாரமெழுதப்பட்டது. பாஷ்யகாரருடைய அவதாரம் குருபரம்பரையிலே யெழுதப்படும். குருபரம்பரையாவது:—பெரியபெருமாள், பெரியபிராட்டியார், சேனைமுதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரியநம்பி, பாஷ்யகாரர், இத்யாதி. அதில் ஸகலவித்யைகளுக்கும் ப்ரதமாசார்யனான வெம்பெருமான் திருநக்ஷத்ரம்:—திருவோணம். பெரியபிராட்டியார் திருநக்ஷத்ரம்:—உத்திரபல்குநீ. சேனைமுதலியார் திருநக்ஷத்ரம்:—அற்பிசியில் பூராடம். நம்மாழ்வார் திருநக்ஷத்ரம்:—வைகாசி விசாகம். நாதமுனிகள் திருநக்ஷத்ரம்:—ஆனிமாசத்தில் அநூராதம். இவர் ப்ராம்மணவர்ணத்திலே சொட்டைக்குலம். இவர்ஸேநாபதிமந்த்ரியான கஜாநநாம்சம். இவர்செய்த ப்ரபந்தம் ஸ்ரீபுருஷநிர்ணயமும், ந்யாயதத்வமும் இவருக்குப்பிதா ஈச்வரபட்டாழ்வான். புத்ரர் புஷ்டிகர்ப்பாம்சரான ஈச்வரமுநிகள். இந்த மூவரும் வீரநாராயணபுரத்திலே மன்னனாரைஸேவித்துக்கொண்டுநித்யவாஸம்பண்ணுநிற்கச்செய்தேமன்னனாருடைய வநுமதிபெற்று மதுரை ப்ருந்தாவநம் முதலாகிய வடதேசத்திலுள்ள திவ்யதேசங்களையெல்லாம்ஸேவித்து கோவர்த்தனபுரமென்கிறக்ராமத்திலே யமுனைத்துறைவனென்கிறவெம்பெருமானைஸேவித்துக்கொண்டு

நித்யவாசம் பண்ணுகிற காலத்திலே நாதமுநிகளுடைய ஸ்வப்நத்திலே மன்னனார்வந்து இவரை வீரநாராயணபுரத்திற்கு வரவேணுமென்று நியமிக்க நாதமுநிகள் யமுனைத்துறைவரை யநுமதிகொண்டுபுறப்பட்டு வாராணஸீ வழியாகவந்து ஸ்ரீஜகந்நாதன் முதலானாரை சேவித்து சிங்ககிரி, அகோபிலம், திருவேங்கடம், முதலான திருப்பதிகளை சேவித்து ஸ்ரீரங்கநாதனைசேவித்து திருக்குடந்தையி லாராவமுதனைசேவித்து வீரநாராயணபுரத்திற்குவந்து மன்னனாரை சேவித்து அவர் நியமனத்தினாலே அங்கே திருநந்தநவனம் முதலான கைங்கர்யங்களை நடத்திக்கொண்டு சாஸ்த்ரப்ரவர்த்தநமுஞ் செய்துக்கொண் டிருக்கச்செய்தே மேல்நாட்டினின்றும் சில ஸ்ரீவைஷ்ணவர்க ளெழுந்தருளி மன்னனாரை சேவித்துஅவர்முன்னே ஆராவமுதென்கிற திருவாய்மொழியை விண்ணப்பஞ்செய்ய, நாதமுநிகள் அதைக்கேட்டருளி ஆநந்தித்து ஆயிரத்துளிப்பத்து என்றிருக்கிறதே இப்ப்ரபந்தம்உங்களுக்குமுடியவந்திருக்குமோவென்றுகேழ்க்க, இப்பத்துப்பாட்டுமேவருவதென்று அவர்கள்சொல்ல, நாதமுநிகளும்அவர்களை ஆதரித்துப் போகவிட்டருளி சடகோபனவதரித்த திருக்குருகூர் ப்ரதேசத்திலே இது இருக்கவேணுமென்று அத்தேசத்திற் கெழுந்தருளி ஆழ்வாரைஸேவித்து மதுரகவிகளுடைய சிஷ்யரான பராங்குசதாஸரைக்கண்டு சேவித்து இவ்விடத்திலே திருவாய்மொழி நடையாடுகிறதோ வென்றுகேழ்க்க, திருவாய்மொழியும் மற்றுந் திவ்யப்ரபந்தங்களும் நெடுங்காலமுண்டு விலமாய்த்து; ஆனாலுமெங்களாசார்யர் மதுரகவிகள் அடியேனுக்குக் கண்ணிநுண் சிறுத்தாம் பென்கிற திவ்யப்ரபந்தத்தைஸாதித்து இத்தை யாழ்வார் திருமுன்பே பன்னீராயிரமுருச்சொல்ல ஆழ்வார் ப்ரஸன்னராவாரென்று எங்களாசார்ய ரருளிச்செய்தாரென்றுசொல்ல, நாதமுநிகளுங் கண்ணிநுண் சிறுத்தாம்பைப் பராங்குசதாஸரிடத்திலேபெற்று ஆழ்வார் திருமுன்பே பன்னீராயிரமுரு நியமத்தோடே யநுஸந்தாநம் பண்ணினார். பின்பு ஆழ்வாரும் பெரியபிராட்டியார் நியமனத்தாலே மிகவும் ப்ரஸந்நராய் நாதமுநிகளைக்குறித்து அசரீரிவாணி சொல்லுமாப்போலே திருவாய் மலர்ந்து உமக்கென்ன வேண்டுவதென்று கேட்டருள, நாதமுநிகளும் திருவாய்மொழிமுதலான திவ்யப்ரபந்தங்களை யடியேனுக்குத் தந்தருள வேண்டுமென்ன, ஆழ்வாரும் ப்ரீதியுடனே திவ்யஜ்ஞாநக்கண்ணைக் கொடுத்தருளி ரஹஸ்யங்களையுந் திருவாய்மொழிமுதலான மற்றுமுள்ள நாலாயிர ப்ரபந்தங்களையும் அதின்தாத்பர்யங்களையும் யோகரஹஸ்யத்தையு முபதேசித்தருள, நாதமுநிகளு மத்தைப்பெற்று பக்தியுடனே யங்கே யாழ்வாரை சேவித்துக்கொண் டிருக்கச்செய்தே, மன்னனார் நாதமுநிகளுடைய ஸ்வப்நத்திலே இப் ப்ரபந்தங்களைத் தம்முடைய ஸன்னிதியிலே யொருதரம் சொல்லவேணுமென்றுசொல்ல, நாதமுநிகள் ஆழ்வாருக்குச் செய்தியை விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் நீர் வீரநாராயண புரத்திற்குப்போய் இப் ப்ரபந்தங்களை சமதமாதிகுணங்களையுடைய ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கற்பியுமென்று ஸாதித்துவிடைகொடுத்தருள,

நாதமுநிகளும் புறப்பட்டு வழியிலுள்ள திருப்பதிகளையு மந்தந்ததிருப்பதி வைபவமான திவ்யப்ரபந்தாநு ஸந்தாநத்துடனே சேவித்துக்கொண்டு வீரநாராயணபுரத்திற்குவந்து மன்னனாரை சேவிக்க, மன்னனாரும் நீர் அந்த திவ்ய ப்ரபந்தங்களை யியலுமிசையு மாக்குமென்று நியமிக்க, நாதமுநிகளுந் தம்முடைய மருமக்களான கீழையகத்தாழ்வாரையும் மேலையகத்தாழ்வாரையுங் கூட்டிக்கொண்டு இப் ப்ரபந்தங்களை திவ்யகாநத்திலே யடைத்துப் பாடிவித்தருள, இது லோகத்திலே ப்ரஸித்தமாயிற்று. அநந்தரம் அந்ததேசத்திற்கு ராஜாவான சோழன்வாசலிலே இருவர் வேசிகள் தேவகாநம் பாடுவாளொருத்தியும் மனுஷ்யகாநம் பாடுவாளொருத்தியும் தம்மிலே விவாதபபட்டு ராஜஸபையிலே வித்வான்களைத் திறட்டிப்பாட, ராஜாவும் வித்வான்களுந் தேவகாநந்தெறிந்தவரல்லாமையாலே தேவகாநம் பாடினவளைத் தள்ளிவிட, அவளுந்தேவகாநத்தை தேவதைகளறியுமாகையாலே தேவாலயங்கள்தோறும பாடிக்கொண்டுவந்து மன்னனார் கோவிலிலேபாட, நாதமுநிகளும் அத்தைக் கேட்டருளி யபிநந்தித்து அவளுக்கு ஸந்நிதியிலே வரிசைகளெல்லாம் ப்ரஸாதிப்பித்தருள, அவளும் விடைகொண்டிச்செய்தியை ராஜாவுக் கறிவிக்க, ராஜாவும் நாதமுநிகளை ராஜகோஷ்டிக் கெழுந்தருளப்பண்ண, நாதமுநிகளும் எழுந்தருளி யாசீர்வதிக்க, ராஜாவும் ஆதரத்துடனே யிந்தவேசிபாடுகிற தேவரீர் அறிவீரோ? வென்று கேழ்க்க, நாதமுநிகளும் வேசிகளிருவரையும் பாடச்சொல்லி இது மனுஷ்யகாந முங்களுக்குத்தெறியும்; இதுதேவகாநம்தேவதைகளுக்குத்தெரியுமென்ன, தேவரீர் அறிவீரென்று நாகங்ளறிவதெப்படியென்ன, நாதமுநிகளும் நூறுதாளத்தை யொருக்காலே தட்டச்சொல்லியோசையைக்கொண்டு இது யித்தனையிடை இதித்தனையிடையென்றருளிச்செய்ய, ராஜாவுந் தாளங்களைத் தநியே நிறுத்துப்பார்க்குமிடத்தில் முந்திரையேராமல் குறையாம விருந்தபடியைக் கண்டாச்சர்யப்பட்டு ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு பஹுத்ரவ்யத்தை ஸமர்ப்பிக்கத்தேட, இவர் அதை வேண்டாமென்று ராஜாவை யாசீர்வதித்து வீரநாராயணபுரத்திற் கெழுந்தருளினர். இவர் ஸ்ரீபாதத்திலே யாச்ரயித்தவர்கள்:—உய்யக்கொண்டார், குறுகைக்காவலப்பன், நம்பிகருணாகரதாஸர், ஏறுதிருவுடையார், திருக்கண்ணமங்கையாண்டான், வாநமாதேவியாண்டான், உருப்புட்டோச்சான்பிள்ளை, சோகத்தூராழ்வான், என்ற எண்வர். இவர்களுக்கு ரஹஸ்யங்களையுந் திவ்ய ப்ரபந்தங்களையும் அதிகரிப்பித்துக்கொண்டு போருகிற காலத்திலே முன்பு திருமங்கைமன்னன் பண்ணின திருவத்யயநத் திருநாள் கட்டளைப்பாட்டைத் திரும்பவும் ஜீர்ணோத்தாரணம் பண்ணும்படியாக நினைப்பிட்டு ஸ்ரீரங்கத்திற் கெழுந்தருளி திருக்குறுகையி னின்றும் நம்மாழ்வாரை ஸ்ரீரங்கத்திற் கெழுந்தருளப்பண்ணிவைத்து முன்பு திருமங்கைமன்னன் காலத்திலே நடந்தாப்போலே பகல் கிர்வாணவேதமும் இராத்ரி திருவாய்மொழியும் பாராயணம்பண்ணும்படியாகவும் திருப்பல்லாண்டு முதலாக திருநெடுந்தாண்டகமளவாக ஏகாதசிக்குமுன் பத்துநா

ளிலே பெரியபெருமாள் கேட்டருளும்படியாகவும் திருவந்தாதிமுதலாகத் திருவத்யயநத்திருநாள் சாற்றுமுறைக்கு மறுநாள் கேட்டருளும்படியாகவும் இப்படி வருஷந்தோறும் நம்மாழ்வார் எழுந்தருளும்படியாகவும் கட்டளைப்படுத்தினார். பின்பு மிப்படி ஸ்ரீவைஷ்ணவ தர்மங்களை யனேகமாகக்கட்டளைப்படுத்தி வீரநாராயணபுரத்திற் கெழுந்தருளி சிறிதுகாலம் யோகத்திலே எழுந்தருளியிருந்து குறுகைக்காவலப்பனுக்கு யோகக்ரமத்தை யருளிச்செய்தார்.

சாஸ்த்ரங்களையும் திவ்யப்ரபந்தங்களையும் ப்ரவர்த்திக்கும்படி உய்யக்கொண்டாருக்கு நியமித்தருளினார். தம்புத்ரரான ஈச்வரமுனிகளைப்பார்த்து உமக்கொருகுமாரர் உண்டாகப்போகிறார், அவருக்கு யமுனைத்துறைவரென்று திருநாமஞ்சாற்றுமென்று அருளிச்செய்து உய்யக்கொண்டாரையும் குறுகைக்காவலப்பனையுங்குறித்து உங்களுக்கு நாம்சொன்னதர்சநதாத்பர்யங்களையும் யோகக்ரமங்களையும் யமுனைத்துறைவருக்கு உபதேசியுங்களென்று நியமித்தருளி நாதமுனிகள் முன்புபோலே யோகத்திலேயெழுந்தருளியிருந்தார். பின்பு அந்தசோழராஜா பரிவாரத்துடனே வேட்டைக்குவந்து மீண்டுபோகாநிற்கச்செய்தே நாதமுனிகளுடைய பெண்பிள்ளைகள்வந்து ஐயா நம்மகத்திலே ஒருகுரங்கும் இரண்டுவில்லிகளும் ஒருபெண்பிள்ளையுமாகவந்து நாதமுனிகள் எங்கேயென்று தேடிப்போந்தார்கள் என்றவாறே, நாதமுனிகளும் அவர்கள் சக்ரவர்த்தித்திருமகனும் (லக்ஷ்மணனும் ஸீதையும்) இளையபெருமாளும் பிராட்டியுஞ் சிறுத்திருவடியுமாக வடுக்குமென்று எண்ணிக்கொண்டு பின்றொடர்ந்து வழியிலே எதிரே ஸந்தித்தவர்களை யிப்படி போகிறவர்களைக் கண்டீர்களோவென்று பலரையுங்கேட்டருளப் பலரும் போகிறார்கள் போகிறார்களென்றுசொல்ல, இப்படி கங்கைகொண்டபுரத்தின் கீழ்வாசலளவாக வெழுந்தருளி யங்குள்ளவர்களைக்கேழ்க்க, வவர்கள் கண்டிலோமென்றவாறே யங்கேவிழுந்து மோஹித்துத் திருநாட்டுக்கெழுந்தருளினார். பின்பிச்செய்தியை உய்யக்கொண்டார் குறுகைக்காவலப்பன் ஈச்வரமுதலிகள் முதலானார்கேட்டு அங்கேபோய் ஈச்வரமுனிகளைக்கொண்டு ப்ரம்மமேதம் நடத்தி வீரநாராயணபுரத்திற்குவந்து மற்றுஞ் செய்யவேண்டுவதெல்லாஞ் செய்வித்தார்கள். அநந்தரம் நாதமுனிகளுடைய சிஷ்யரான உய்யக்கொண்டார் திருநக்ஷத்ரம் சித்திரையில் க்ருத்திகை. இவர்ஸேநாம்சம். இவர் ஸ்ரீபாதத்திலே யாச்ரயித்தமுதலிகள் மணக்காலநம்பி; திருவல்லிக்கேணிப்பாண்பெருமாளரையர்; சொட்டைப்பூசி செண்டலங்காரர்; புண்டரீகதாஸர்; உலகுபெருமாள்நங்கை என்கிறவைவர். இவர்களில் மணக்கால்நம்பி உய்யக்கொண்டார் திருவடிகளிலே ஸகலவிதகைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டு இருந்து உய்யக்கொண்டார் திருநாட்டுக்கெழுந்தருளுகிறபோது இனி தர்சநப்ரவர்த்தகராவாரா ரென்று உய்யக்கொண்டாரைக் கேட்க, அவரும் இனிமேல் நீரே தர்சநம் நிர்வஹிக்கக்கடவீர், பின்பு ஈச்வரமுனிகள்

திருவயிற்றிலே சொட்டைக்குலத்திலே ஸ்ரீமந்நாதமுநிகளுக்கு ஒருதிருப் பேரனார் அவதரிப்பர், அவருக்கு யமுனைத்துறைவரென்று திருநாமஞ் சாற்றுவித்து தர்சநப்ரவர்த்தகராம்படி ஸகலரஹஸ்யங்களையு முபதேசி யும், அவர் தர்சநப்ரவர்த்தகராவரென்று நியமித்தருளி திருநாட்டிற் கெழுந்தருளினார். உய்யக்கொண்டாருக்கு ப்ரம்மமேதம்முதலான சரம கைங்கர்யத்தை மணக்கால்நம்பி செய்தருளினார்.

பின்பு மணக்கால்நம்பி திருவவதாரஞ்சொல்லுகிறது. இவர்திருநக்ஷத் ரம் மாசிமாசத்தில், மகம், இவர் குமுதாம்சம், இவர் திருநாமம் ஸ்ரீராம மிச்ரர்.

இனி ஆளவந்தார் அவதாரஞ்சொல்லுகிறது. இவர் திருநக்ஷத்ரம் ஆடிமாசத்தில் உத்ராடம். ஸ்தலம் வீரநாராயணபுரம். இவர் ஸிம்மாஸ நாம்சம். இவர்செய்தருளின ப்ரபந்தம்:—ஆத்மஸித்தி ; ஸம்வித்ஸித்தி ; மோக்ஷஸித்தி ; ஆகமப்ராமாண்யம் ; கீதார்த்தஸங்க்ரஹம் ; ஸ்தோத்ர ரத்நம் ; மாயாவதகண்டநம் ; என்றிவை. இப்படி யாளவந்தாரவ தரித்த செய்தியை மணக்கால்நம்பி கேட்டு வீரநாராயணபுரத்திற்கு வந்து ஈச்வரமுநிகளைக்கொண்டு ஜாதகர்மத்தைச் செய்வித்து, சங்கசக்ராங்கநம் முன்பாக யமுனைத்துறைவரென்று திருநாமஞ் சாற்றுவித்தார். பின்பு ஈச்வரமுநிகளும் அந்தந்த காலங்களிலே அந்நப்ராசநம் முதலானவை செய்தருளி அத்யயநம் பண்ணுவிக்கிற காலத்திலே ஸந்தைசொல்லும் போது ஓதினதையே இவர்கள் ஓதுகிறார்களென்று யமுனைத்துறைவர் தவிர்ந்துநிற்க, ஓதப்போகீரோவென்றால் ஓதினத்தையே யோதாநின்றார் கள், அங்குப் போவானேனென்று சொல்லுவர். இப்படி யொருஸந்தை யிலே வேதங்களையறிந்து தரித்து பின்பு திருக்கல்யாணமுஞ் செய்தருளி னார். சிலநாளைக்குப்பின்பு ஈச்வரமுநிகள் திருநாட்டிற் கெழுந்தருள, யமுனைத்துறைவரும் அவருக்கு ப்ரம்மமேதம் முதலான சரம கைங்கர் யத்தை நடத்தியருளினார். அநந்தரம் யமுனைத்துறைவர் மஹாபாஷ்ய பட்டருடனே சாஸ்த்ராப்யாஸம் பண்ணும்போது அந்த ராஜாவுக்கு புரோஹிதனான ஆக்கியாழ்வானுக்கு அந்த தேசத்திலுள்ள வித்வான்க ளெல்லாரும் இறையிறுத்துக்கொண்டு வருகையாலே மஹாபாஷ்யபட்ட ரிடத்திலும் இறைக்குத் தரவந்தது. அத்தைக்கண்டு மஹாபாஷ்யபட் டர் வ்யஸநப்பட்டுக்கொண்டிருக்க, யமுனைத்துறைவர் அதறிந்து அந்தத் தரவைக் கிழித்துவிட்டார். ஆக்கியாழ்வானும் இத்தைக்கேட்டு இவர் வெறுங்கவியோ? சாஸ்த்ரநிபுணரோ? என்றுகேட்டு வரவிட்டான். இவரும் நாம்வெறும்சாஸ்த்ர நிபுணருமன்று. வெறுங் கவியுமன்று. பின்னை ப்ரதிவாதிகளைப்பிளக்கும் வலியுடையோமென்று எழுதிப்போக விட, ஆக்கியாழ்வானும் இத்தை ராஜாவுக்கறிவித்து யமுனைத்துறைவரை வரும்படி சாஸநமனுப்பிவிக்க,யமுனைத்துறைவர் அந்தசாஸநத்தையுங்கிழி த்துவிட்டார். இராஜாவு மிச்செய்தியைக்கேட் டிவருக்குத் தண்டிகையும்

சிவிகையாரையும் கொடுத்துவரவிட்டான். இவரும் அதிலேயேறியருளி ராஜஸபைக்கெழுந்தருளி நாலுதிக்குக்குள்ளே யென்போலே சாஸ்த்ர நிபுணன் ஒருவனைத் தேடுவதென்று ஒருச்லோக மருளிச்செய்ய, ஆக்கியாழ்வானுங் கேட்டு கோபத்துடனே நானிவருடனே தர்க்கிக்கக்கடவேனென்ன, அப்போது ராஜமஹிஷியானவள் இவர் தோராரென்று ராஜாவுக்குச்சொல்ல, ராஜாவும் ஆக்கியாழ்வான்தோற்றானாகில் இவருக்குப்பாதி ராஜ்யம் தருகிறேனென்றுசொல்லி பின்பு இருவருந் தர்க்கித்து ஆக்கியாழ்வான்தோற்று யமுனைத்துறைவரை வீதிவலஞ்செய்வித்துக்கொண்டு எல்லாரும் வருகிறபோது ராஜமஹிஷியானவள் என்னை யாளவந்தீரோவென்று யமுனைத்துறைவரையெடுத்து அணைத்துக்கொள்ளுகையாலே இவருக்கு ஆளவந்தாரென்று திருநாமம் ஆய்த்தது. பின்பு ராஜாவும் இவருக்குப் பாதிராஜ்யமுங்கொடுத்து தேவிகளையு மழைப்பிக்க, ஆளவந்தாரும் பத்நீஸமேதராய்க்கொண்டு ராஜ்யத்துடனே ஸுகமாகவெழுந்தருளியிருக்கும்போது இவருக்கு பிள்ளைக்கரசுநம்பியென்று ஒருகுமாரருண்டானார், பின்பு மேலெழுதிய மணக்கால்நம்பி யித்தைக்கேட்டு ஆநந்தத்துடனே அங்கேவந்தவிடத்தில், அவ்விடம் ராஜஸ்தாநமாய்க் கட்டுங் காவலுமாயிருக்கையாலே ஆளவந்தாரைக் காணப்போகாமல் இவருக்குத் தளிகைக்கு சமைக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கொண்டு இவருக்குத் தூதுவளையிஷ்டமென்றறிந்து ஆறுமாசவரைக்கும் நித்யமாய்த் தூதுவளைக்கொடுத்துக்கொண்டிருந்தார். இப்படியிருந்தவிடத்திலும் ஆளவந்தாரிடத்தில் ஒருப்ரஸாதமும்பிறவாமையாலேயேங்கி நாலுநாள் அதுகொடாமலிருந்தார். பின்பு ஆளவந்தாரும் தூதுவளையில்லாமலிருப்பானேனென்று ஸ்ரீவைஷ்ணவர்களைக்கேட்க, அவர்களும் ஒரு வ்ருத்தவைஷ்ணவர் நித்யம் கொடுத்துக்கொண்டுவந்தார்; நாலுநாளாய் அவர் வரவில்லையென்று விண்ணப்பஞ்செய்ய, அவர்வந்தால் நமக்கறிவியுங்கோளென்ன, நம்பியுமின்னமும் பார்ப்போமென்று தூதுவளைக்கொண்டு வந்தவாறே அவர்களு மப்படியே யறிவிக்க, ஆளவந்தாரும் நம்பியை யெழுந்தருளப்பண்ணி தண்டன் ஸமர்பித்து இத்தனைநாள் நமக்குத் தூதுவளை யெதற்காகக் கொண்டுவந்து கொடுத்தீர், உமக்கர்த்தம்வேணுமோ? க்ஷேத்ரம்வேணுமோ? வென்று கேட்க, நம்பியும் நமக்கிதுக ளொன்றும்வேண்டா, உங்கள் பூர்வர்கள் தேடினவர்த்தம் என்கையிலே யிருக்கிறது, அத்தை நான்காட்டி நீர்கைக்கொள்ளுந்தனையும் நாம் உம்பக்கல் வந்துபோகும்படி வாசலப்பணையிடவேணுமென்ன, ஆளவந்தாரு மப்படியேசெய்ய, நம்பியும் அன்றுமுதல் ஸ்ரீகீதையின்பொருளை யாளவந்தாருக் கருளிச்செய்ய, ஆளவந்தாரும் அதுகேட்டு நாளுக்குநாள் ஆர்த்திபிறந்து விரக்தரானபடிகண்டு அவரைக் கூட்டிக்கொண்டு மணக்கால்நம்பி, கோயிலுக்கெழுந்தருளி பெரிய பெருமாள் திருவடிகளாகிற தநத்தைக்காட்ட, ஆளவந்தாரும் சேவித்து அப்போதே ஸர்வஸங்கபரித்யாகம்பண்ணி ஸந்யாஸாச்ரமத்தையடைந்து யெப்பொழுதும் பெரியபெருமாளை ஸேவித்துக்கொண்டெழுந்தருளியிருந்தார்.

இவருக்கு சிஷ்யர்கள்:—பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, பெரியதிருமலைநம்பி, மாறனேரிநம்பி, திருக்கச்சிநம்பி, ஆளவந்தாராழ்வான், திருமாலையாண்டான், வாநமாமலையாண்டான், தெய்வவாரியாண்டான், ஈசனாண்டான், திருக்குறுகூரப்பன், திருமோகூரப்பன், திருமோகூர்நின்றான், தெய்வப்பெருமாள், வகுளாபரணஸோமயாஜியார், திருக்குறுகூர்தாஸர், திருமாலிருஞ்சோலைதாஸர், வடமதுரைப்பிறந்தான், ஆள்கொண்டி, அம்மங்கி, என்றிருபதுபெயர். இவர்களிலே பெரியநம்பிகுமுதாக்ஷாம்சம், பெரியதிருமலைநம்பி ஸுமுகாம்சம், திருக்கச்சிநம்பி சங்குகர்ணாம்சம், திருக்கோட்டியூர்நம்பி புண்டரீகாம்சம், திருமலையாண்டான் வாமநாம்சம், இவர்களைவரும், பாஷ்யகாரருக்கு ஆசார்யர்கள், ஆளவந்தாருக்கு ஸகோத்ரியான திருவரங்கப் பெருமாளரையரும் பாஷ்யகாரருக்கு ஆசார்யர்.

அநந்தரம் பெரியநம்பி—இவரவதாரகாலம் மார்கழியிலேகேட்டை, இவர் ஆளவந்தாருடைய நியமனத்தாலே பாஷ்யகாரருக்கு பஞ்சஸம்ஸ்காரம் ஸாதித்தார். இவருக்குத் திருநாமம் பெரியநம்பி, மகாபூர்ணர்.

அநந்தரம் பாஷ்யகாரர்-இவருடைய திருவவதாரகாலம் கலியுகத்தில் நாலாயிரத்து நூற்றுப்பதினெட்டுக்குமேல் செல்லாநின்றுள்ள பிங்கள வருஷத்தில் சித்திரைமாசத்தில் ஸப்தமீ குருவாரங்கூடின திருவாதிரை திருநக்ஷத்ரம். ஸ்தலம் ஸ்ரீபெரும்பூதூர். இவர் பகவதம்சம்; லக்ஷ்ம்யம்சம்; சேஷாம்சம்; ஸேனைமுதலியாரம்சம்; பஞ்சாயுதாம்சம். இவருக்குப்பெரிய திருமலைநம்பி சாற்றிவித்த திருநாமம்:-இளையாழ்வார். பேரருளாளன் சாற்றின திருநாமம்:—இராமாநுஜன். பெரியபெருமாள்சாற்றின திருநாமம், உடையவர். திருக்கோட்டியூர்நம்பிசாற்றின திருநாமம்:--எம்பெருமானார். ஸரஸ்வதிசாற்றின திருநாமம்:-பாஷ்யகாரர். இன்னமிப்படி திருநாமங்களுண்டு. இவர்செய்தருளின ப்ரபந்தங்கள்:-ஸ்ரீபாஷ்யம்; வேதார்த்தஸாரம்; வேதாந்ததீபம்; வேதார்த்தஸங்க்ரஹம்; கத்யங்கள்மூன்று; கீதாபாஷ்யம், நித்யம்; ஆக ஒன்பது. இன்னுஞ்சில விடுதிச்லோகங்களும் விடுதிவார்த்தைகளுமுண்டு. இவர் ஹாரிதகுலதிலகர். இவருடையவைபவம் மிகுந்த விஸ்தாரமாகையாலே யெழுதிமுடியாது. ஆகிலும் சிறிது சுருக்கமாக வெழுதுகிறது. என்னவென்றால்:—பெரியதிருமலைநம்பிக்கு உடன்பிறந்தவர்கள் பூமிப்பிராட்டியாரென்னும் பெரியபிராட்டியாரென்று மிருவர். இவர்களிலே மூத்தபூமிப்பிராட்டியார் ஸ்ரீபெரும்பூதூர் ஆஸூரிகேசவப்பெருமாளுக்கு பத்நீ. இளையபெரியபிராட்டியார் மழலைமங்கலத்து வட்டமணிக்குலம் கமலநயநபட்டருக்குபத்நீ. இவர்களில் பூமிப்பிராட்டியாரிடத்தில் கேசவப்பெருமாளுக்கு மேலெழுதிய தேசகாலாம்சங்களிலே பாஷ்யகாரர் அவதரித்தார். இவருக்குப் பிதாவான கேசவப்பெருமாள் ஜாதகர்மமுஞ் செய்தருளினார். பின்பு பெரியதிருமலைநம்பி யெழுந்தருளி கேசவப்பெருமாளைக் கொண்டு தப்தசக்ராங்கனம் முன்பாக விளையாழ்வா

ரென்று திருநாமஞ்சாத்திவித்தார். பின்பு இளையாழ்வார் உபநயநமாய் வேதங்களை ஸாங்கமாக ஓதி பதினாலு வித்யைகளையுங்கற்று திருக்கல்யாண்மாய்ப் பெருமாள்கோவிலிலே திருப்புட்குழியிலே யாதவப்ரகாசனென்பானொரு ஏகதண்டி ஸந்யாஸியிடத்திலேவேதாந்தம் வாசித்திராநின்றார். அப்பொழுது மேலெழுதிய கமலநயநப்பட்டருக்கு அவர்பத்நீ பெரியபிராட்டியாரிடத்திலே க்ரோதநவர்ஷத்தில் தைமாசத்திலே பௌர்ணமீ ஸோமவாரங்கூடின புநர்வஸு நக்ஷத்ரத்திலே வைநதேயாம்சமாகவொரு குமாரர் அவதரித்தார். கமலநயநபட்டர் இவருக்கு ஜாதகர்மம் பண்ணினார். பெரியதிருமலைநம்பிவந்து இவருக்குக் கமலநயநபட்டரைக் கொண்டு கோவிந்தரென்று திருநாமஞ் சாற்றிவித்தார். கோவிந்தரும் உபநயநவிவாஹங்களையும்பெற்று ஸகலசாஸ்த்ரங்களையுங்கற்று இளையாழ்வார் யாதவப்ரகாசனிடத்தில் வாசிக்கிறாரென்றுகேட்டுத் தாமும் அங்கேபோய் கூடவாசித்துககொண்டிருந்தார். யாதவப்ரகாசன் இரண்டு ச்ருதிவாக்யங்களுக்கு அவப்பொருளைச்சொல்ல, இளையாழ்வாரும் அது பொறாமல் அவனுடையிலே நெருப்புப் பொரிபோலே கண்ணீர்த் துளியை யுதிர்க்க, அவனு மிதென்னென்று கேழ்க்க, இவரும் அதற்கு நற்பொருளிருக்க அவப்பொருள் சொன்னீராகையாலேயென்ன, யாதவப்ரகாசனும் ஆகில் நீரிங்கே வாசிக்கவேண்டாவென்ன, இளையாழ்வாரும்வாசிக்கைவிட்டிருந்தார். பின்பு யாதவன் தன் சிஷ்யர்களுடனே ஆலோசனை பண்ணியிவரை வஞ்சனையிலே முடிக்கும்படிதேடிக் கபடமாகவழைத்து கல்வார்தையிலேயிவரைப் படிக்கும்படிபண்ணிப் பின்பு இவரையும் கோவிந்தரையும் மற்றுஞ்சிஷ்யர்களையுங் கூட்டிக்கொண்டு கங்காயாத்ரை புறப்பட்டான். அப்போது இளையாழ்வாரும் கோவிந்தரும் இருவருஞ்சேராதபடி பண்ணிக்கொண்டுவந்தான், ஒருநாள் விந்த்யாடவியிலே வழிநடக்கும்பொழுது ஜலத்திற்குநின்றவிடத்திலே இளையாழ்வாரைப்பார்த்து கோவிந்தபட்டர் யாத்ரைக்கு நிமித்தத்தைச்சொல்ல இளையாழ்வாரும், வ்யாகுலப்பட்டு வழியைவிட்டு ஒரு மரத்தடியிலே திகைத்துக்கொண்டு நின்றார். அப்போது பெருமாளும் பிராட்டியும் ஒருவில்லியும் வேடச்சியுமாய் முன்னேவந்து தோன்றினார்கள். இவரும் அவர்களைக்கண்டு தெளிந்து நீங்கள் எங்கேபோகிறீர்கள் என்றுகேட்க, நாம் ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திற்குப்போகிறோமென்ன, இவர் என்னையுங் கூட்டிக்கொண்டு போங்களென்ன, அவர்களும் வாருமென்றிவரைக்கூட்டிக்கொண்டு நடந்து விந்த்யாடவியைக் கடந்து அன்றிராத்திரி ஒரு மரத்தின்கீழே இளையாழ்வாரும் அவர்களும் பட்டினியாகவே யிருந்தார்கள். அப்போது வேடுவச்சி வேடனைத் தண்ணீர்கேட்டாள், வேடுவனும் அருகிலே கிணற்றிலே விடிவோரே தண்ணீர்காட்டுகிறேனென்ன, இவருமதுகேட்டு ஐயோ இந்ததேசம் நிலைதெரியாமையாலே யிவர்களுக்கு தண்ணீர்கொடுக்கப் பெறுகிலேனென்று வெறுத்திருக்க, பின்பு கிழக்குவெளுத்தவாறே அவர்களைத்தேடிக் காணாமல் நாலடிநடந்து வெளிச்செரிவானவாறே அங்கே யொருதோப்பும்

கிணறும் நாலிரண்டுபேருமாக விருக்கக்கண்டு இது எவ்விடம்? எந்தவூர்? என்று அவர்களைக்கேட்க, அவர்களும் இதோபுண்யகோடிவிமானமென்று காட்ட, இளையாழ்வாருங்கண்டு ஆநந்தத்துடனே திடுக்கிட்டுநின்று வேடனையும் வேடுவச்சியும் பெருமாளும் பிராட்டியுமென்று நினைத்துக்கொண்டு பெருமாள்கோவிலிலேவந்து பேரருளாளரையும் பெருந்தேவித்தாயாரையும் சேவித்து முன்னே தண்ணீர்கேட்டதை நினைத்து அவர்களுக்கு திருவாராதநத்திற்கு சாலைக்கிணற்றிலிருந்து திருமஞ்சநம் சமர்ப்பித்துக்கொண்டிருந்தார். யாதவப்ரகாசனும் இளையாழ்வாரைத் தேடிக்காணாமல் துக்கங்காட்டி கோவிந்தபட்டருடனே கங்காஸ்நாநம் பண்ணினான். அங்கே கோவிந்தபட்டர் கையிலே யொருலிங்கஞ் சேர்ந்தது. அதினாலே அவருக்கு உள்ளங்கைகொணர்ந்த நயினாரென்று பெயராய்த்தது. பின்பு யாதவப்ரகாசன் காஞ்சிபுரத்திற்குப் போனான். கோவிந்தபட்டர் அவனநுமதிகொண்டு மழலைமங்கலத்திலேவந்து அந்த லிங்கத்தை ப்ரதிஷ்டிப்பித்திருக்கச்செய்தே காளஹஸ்திநாதன் கனவிலேவந்துகாளஹஸ்திக்கு வரச்சொன்னபடியாலே அங்கேபோய் ஸ்தானத்திற்கு வேண்டிய முத்ரைமோதிரம்பெற்றுமுக்யராயிருந்தார். யாதவப்ரகாசனும் பெருமாள்கோவிலிலே இளையாழ்வாரைக்கண்டு ஆச்சர்யப்பட்டுசந்தோஷத்துடனே இவரையுங் கூட்டிக்கொண்டு பாடத்தை நடத்திக்கொண்டிருந்தான். இச்செய்தியை ஸ்ரீரங்கத்திலே ஆளவந்தார் கேட்டருளி அப்போதே இளையாழ்வாரைக் காணவேணுமென்று புறப்பட்டு பெருமாள்கோவிலுக் கெழுந்தருளி திருக்கச்சிநம்பியைக்கூட்டிக்கொண்டு பேரருளாளரையும்பெருந்தேவித்தாயாரையும் சேவித்து ப்ரதக்ஷணமாக வெழுந்தருளச்செய்தே யாதவப்ரகாசனும் கூட்டத்துடனே ப்ரதக்ஷணமாக வாராநிற்க, ஆளவந்தாரும் இவர்களிலே இளையாழ்வாராரென்று திருக்கச்சிநம்பியைக்கேட்க, சிவந்து நெடியராய் வலியராய் ஆஜாநுபாகுவாய் நடுவே வருகிறவரென்று விண்ணப்பஞ் செய்ய, ஆளவந்தாரும் இளையாழ்வாரைக் குளிரப்பார்த்தருளி யிவர் நந்தர்சநத்திற்குமுதல்வராவரென்று கடாக்ஷம்பண்ணிபெருமாளைநோக்கி ப்ரபத்திபண்ணி ஹஸ்திகிரியின்மேலே யெழுந்தருளி பெருமாளைசேவித்துமீண்டுபுறப்பட்டு முதலிகளுந்தாமுமாக ஸ்ரீரங்கத்திற்கெழுந்தருளினார். பின்பு கச்சிநகரிலே ராஜாவின் பிள்ளையை ப்ரம்மரக்ஷஸ் பிடிக்க, அத்தை யாதவன் கேட்டு உன்னை நான் போகச்சொன்னேனென்று ப்ரம்மரக்ஷஸ்ஸிற்குச் சொல்லுங்கோளென்ன, ப்ரம்மரக்ஷஸ்ஸும் நானுன்னைப் போகச்சொன்னேனென்று யாதவனுக்குச் சொல்லுங்கோளென்ன, யாதவனு மித்தைக்கேட்டு கோபத்துடனேவந்து மந்த்ரங்களைமந்த்ரிக்க, ப்ரம்மரக்ஷஸும் உன்மந்த்ரங்களையும், உன்ஜன்மமும், என்ஜந்மமும், யான்அறிவேன்;நீபூர்வஜந்மத்திலே மதுராந்தகத்தேரியிலே புத்திலே யுடும்பாயிருந்தாய் ; அங்கே ஸ்ரீவைஷ்ணவர்கள் நீராடி யமுது செய்து சிந்தினப்ரஸாதத்தை ஸ்வீகரித்து வித்வானாய்ப்பிறந்தாய்; நானும் பூர்வஜந்மத்திலே ப்ராம்மணனாய்ப்பிறந்து யாகம்பண்ணி மந்த்ரலோபம்

க்ரியாலோபம் பிறந்து ப்ரம்மரக்ஷஸ்ஸானே னென்று ப்ரம்மரக்ஷஸ்
சொல்லிற்று. யாதவனும் ஆகில் நீ யார்சொன்னால் போவாயென்ன
ப்ரம்மரக்ஷஸ்ஸூம் இளையாழ்வாரைக்காட்டி இவர் போகச்சொன்னால்
போவேனென்ன, இளையாழ்வாரும் யாதவன் வார்த்தைகொண்டு அத்
தைப்போகச்சொல்ல, அதுவு முன் திருவடிகளை யென்தலைமேலேவைத்தால்
போகிறேனென்ன, அவரு மப்படியேசெய்ய, அதுவு மெழுந்திருந்து
கும்பிட்டு அவருடைய நியமனத்தினாலே அடையாளத்திற்காக வருகிருந்த
வரசுமரத்தைமுறித்துக்கொண்டு பிள்ளையைவிட்டுப்போய்த்தது. பின்பு
யாதவப்ரகாசனும் அதற்கு சந்தோஷப்பட்டான். பின்பு யாதவப்ரகாசன்
ஒருவாக்யத்திற்கு அவப்பொருள்சொல்ல, இளையாழ்வாரு மத்தைமறுத்து
நற்பொருள்சொல்ல, யாதவனுங்கோபத்துடனே பாடஞ்சொல்லுகைதவி
ர்ந்தான். இளையாழ்வாரும் ப்ரீதியுடனே மீண்டு திருத்தாயார் நியமனத்
தாலே திருக்கச்சிநம்பியை ஸேவித்து அவர்நியமனத்தாலே பேரருளா
ளர்க்கு முன்புபோலே திருமஞ்சனம் ஸமர்ப்பித்துக்கொண்டிருந்தார்.
இப்படி யிளையாழ்வார் யாதவனைவிட்டு நீங்கினசேதியை ஆளவந்தார்கேட்
டருளி பேரருளாளர் நம்முடைய ப்ரபத்தியை ஸபலமாக்கினாரென்று
கொண்டு ப்ரியப்பட்டு ஸ்தோத்ரரத்நத்தை பெரியநம்பி திருக்கையிலே
கொடுத்து நீரிப்போதேபோய் இளையாழ்வாரை நம்மோடே சேர்ப்பிக்க
வேணுமென்றுநியமித்துத் திருமேனியிலே நோவுசாற்றியிருந்தார். பெரிய
நம்பியும் புறப்பட்டுப் பெருமாள்கோவிலுக் கெழுந்தருளிப் பெருமாளை
ஸேவித்து ஸ்தோத்ரரத்நத்தை யநுஸந்தித்து தீர்த்த ப்ரஸாதமும் ஸ்வீகரித்
துப் புறப்பட்டு இளையாழ்வார்வருகிற சாலைக்கிணற்றுவழியிலே ஆளவந்
தார்ஸ்தோத்ரத்தை யநுஸந்தித்துக்கொண்டிராநிற்க வதிலேயொரு ச்லோ
கத்தை யிளையாழ்வார்கேட்டு இதை யருளிச்செய்தது ஆரென்று பெரிய
நம்பியைக்கேட்க, பெரியநம்பியும் ஆளவந்தார் திவ்யஸூக்தியென்ன,
இவரும் ஆளவந்தாரை யடியேன்ஸேவிக்க வேணுமென்ன, ஆகில் கூட
வாரீரென்று கூட்டிக்கொண்டு புறப்பட்டு ஸ்ரீரங்கத்தருகேசென்று திருக்
கரம்பன்றுறையிலே திரண்டகூட்டத்தைக்கண்டு ஆளவந்தார் திருநாட்
டிற் கெழுந்தருளினாரென்றுகேட்டு ஏங்கியழுது தெளிந்து சென்று ஆள
வந்தார் திருமேனியைஸேவித்து மூன்றுவிரல்கள் மடங்கியிருப்பதைக்
கண்டு முன்னுமிப்படியிவருக்குண்டோவென்றுகேட்க, வவர்களும் முன்
பில்லை யிப்போது கண்டதென்ன, இளையாழ்வாரும் இவர்திருவுள்ளத்தி
லொரு கருத்துண்டாகவேணுமென்று சிந்தித்துக்கொண்டு முன்பு இவ
ருடைய ஸல்லாபங்களைக் கேட்டவர்களுண்டோவென்ன, அவர்களும்
வ்யாஸபராசரர்களிடத்திலே உபகாரஸ்ம்ருதியும் நம்மாழ்வார் பக்கல்
ப்ரேமாதிசயமும் வ்யாஸஸூத்ரத்திற்கு விசிஷ்டாத்வைத பரமாக பாஷ்ய
வாஞ்சையும் பலகாலும் ஆளவந்தாரருளிச்செய்துக்கொண்டிருப்பரென்ன,
இளையாழ்வாரும் என்னிடத்தில் ஆசார்யக்ருபை யுண்டாகில் இம்மூன்
றையும் தீர்க்கக்கடவேனென்ன, விரல்கள் நிமிரக்கண்டு எல்லாரும்

ஆச்சர்யப்பட்டு நீர் தர்சநப்ரவர்த்தகராவீரென்று இளையாழ்வாருக்கு மங்களாசாஸநம் பண்ணினார்கள். பின்பு இளையாழ்வார் பெரியநம்பியை தண்டனிட்டு ரங்கநாதனைஸேவியாதே பெருமாள்கோவிலுக் கெழுந்தருளி திருக்கச்சிநம்பியை சேவித்துச் சேதியை விண்ணப்பஞ்செய்ய, அவரும்மிகவுங் க்லேசித்து ஸ்ரீசூர்ணபரிபாலநமும் திருவத்யயநமும் நடத்தினார். இளையாழ்வார் திருக்கச்சிநம்பி திருவடிகளிலே மிகவும்பக்தியுடையவராய்க்கொண்டு ஆச்ரயிப்பதாகவிருக்க, அதற்கு நம்பி ஸம்மதியாதிருக்க, இளையாழ்வார் திருக்கச்சிநம்பி திருமாளிகை ப்ரஸாதத்தை வாஞ்சித்து அவரைத் தம்முடைய திருமாளிகையிலே அமுதுசெய்ய வேணுமென்று விண்ணப்பஞ்செய்து நன்றாகத் தளிகைக்கு செய்வித்து தம்முடைய க்ரஹார்ச்சையான பேரருளாளரை யமுதுசெய்வித்து, நம்பியை யழைக்க தெற்குத் திருவீதியாலே நம்பி மடத்திற் கெழுந்தருளினார். நம்பியும் வடக்குத்திருவீதியாலே இளையாழ்வர் திருமாளிகைக் கெழுந்தருளி திருவாலவட்ட கைங்கர்யத்திற்குப் போகவேணுமென்று கடுக வமுது செய்து எழுந்தருளினார். இளையாழ்வார் தேவியாரும் நம்பிதளிகையைக்கோலாலே தள்ளி கோமயத்தாலே ஸ்தலசுத்திபண்ணி நீராடிநிற்கிறவளவிலே இளையாழ்வாரும் நம்பியைத்தேடிக்காணாமல் மீண்டெழுந்தருளி தேவிகள் நீராடினபடிகண்டு இதென்னென்றுகேட்க, தேவியாரும் அந்த ஸ்ரீவைஷ்ணவ ரெழுந்தருளி அமுதுசெய்து திருவாலவட்ட கைங்கர்யஞ்செய்தருள வேண்டுமென்று கடுக மீண்டெழுந்தருளினார். அவர் சாத்தாதவராகையாலே அவர் தளிகையைக் கோலாலேதள்ளி கோமயத்தாலே ஸ்தலசுத்தி பண்ணினேன்; அத்தாலே சரீரம் அலம்பவேண்டித்தென்ன, இளையாழ்வாரும் தேவியாரை மிகவுங்கோபித்து தம்முடைய இஷ்டம்ஸித்தியாமையாலேமிகவுங் க்லேசித்து சிந்தித்துக்கொண்டிருந்து நம்பியைச்சென்றுசேவித்து அடியேன் சிலநினைவுகள் நினைத்திருந்தேன், அவையெவையேதென்று தேவரீர் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து பெருமாளருளிச்செய்ததை யடியேனுக்கு அருளிச்செய்யவேணுமென்று (உடையவர்) விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் அன்றிராத்திரி பெருமாளை யநுபவித்துக்கொண்டு ஏகாந்தமாக விருக்கச்செய்தே பெருமாளும் நம்பியைநோக்கி நீர்சிலவார்த்தை சொல்வாரைப்போலே யிருக்கிறதென்ன, நம்பியும் இளையாழ்வார் விண்ணப்பப்படியைப் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, அதற்குப் பெருமாளருளிச்செய்தது;—நித்யசூரிகளிலேயொருவன் நாம் ஸாந்தீபனீயன்டையிலே வித்யாப்யாஸம் பண்ணினாப்போலே பலவிடங்களிலே ஸகல சாஸ்த்ரங்களையும் நன்றாகவறிந்திருப்பானொருவன் நம்மைக்கேட்கிறான்; அதற்கிதுவார்த்தை:—பரதத்வம் நாமே, பேததர்சநம், உபாயமும் ப்ரபத்தியே, அந்திமகாலத்தில் நினைக்கவும்வேண்டா, சரீரம்விடுமளவிலே மோக்ஷம், பெரியநம்பி திருவடிகளிலே யாச்ரயிப்பது, என் றிவ்வாறுவார்த்தையும் பேரருளாளர் அருளிச்செய்ய, நம்பியுமித்தைக்கேட்டு வெடிவோரே இளையாழ்வாருக் கருளிச்செய்து இவையோ வுமக்கு நினைவுகளென்ன, ஆமெ

ன்று இளையாழ்வாரும் மிகவும் உகந்து நம்பி ஸ்ரீபாதத்திலே தண்டனிட நம்பியும் இளையாழ்வார் நினைவும் பெருமாள் திருவுள்ளமும் ஒன்றாயிருந்ததென்று மிகவுமுகந்தருளினார். அப்போது ஸ்ரீரங்கத்திலே ஆளவந்தார் ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் திரளாகவிருந்து பெரியநம்பியுடனே இத்தர்சநத்திற்கு ப்ரவர்த்தகராவாராரென்ன, பெரியநம்பியும், ஆளவந்தார் முன்பு அநுக்ரஹம்பண்ணினதும் திருவிரல்கள் நிமிர்ந்ததும் தெரிந்திருக்குமேயென்ன, முதலிகளெல்லாரும் பெரியநம்பியைப் பார்த்து தேவரீரே இளையாழ்வாரைக் கடாக்ஷித்து தர்சநத்திற்குக் கடவராம்படி திருத்தி யழைத்துக்கொண்டு வரவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் அப்போதே குடும்ப ஸமேதமாய்ப் புறப்பட்டு பெருமாள்கோவிலுக் கெழுந்தருளச்செய்தே மதுராந்தகத்தேரிகாத்த பெருமாள்கோவிலிலே இறங்கியிருந்தவளவிலே இளையாழ்வாரும் பேரருளாளர் நியமித்தபடி பெரியநம்பி திருவடிகளிலே யாச்ரயிப்பதாகப் புறப்பட்டெழுந்தருளாநிற்க, ஸ்ரீமதுராந்தகம் வழியாகையாலே இவரும் ஏரிகாத்தபெருமாளை சேவிப்பதாக வெழுந்தருள, அங்கே பெரியநம்பியை தூரத்திலே கண்டாச்சர்யப்பட்டு மிகவும் ஆரவாரத்துடனே தண்டன்ஸமர்ப்பித்துநிற்க, நம்பியுந் தம்மபிலாஷை கடுக வெதிரேவந்ததென்று இளையாழ்வாரை வாரியெடுத்தணைத்துக்கொள்ள, இளையாழ்வாரும் அடியேனுக்கு தேவரீரிப்போதே ஹிதோபதேசஞ் செய்தருளவேணுமென்ன, நம்பியும் பேரருளாளர் சந்நிதியிலே செய்கிறோமென்ன, இளையாழ்வாரும் சரீரம்நிலையில்லாததாகையாலே இப்போதே செய்தருளவேணுமென்று திருவடிகளிலே விழுந்துகிடக்க, பெரியநம்பியும் முடிபிடித்தெடுத்து இளையாழ்வாரைக் கையைப்பிடித் தழைத்துக்கொண்டுபோய் ஏரிகாத்த பெருமாள்கோவில் திருமகிழமரத்தடியிலே எழுந்தருளியிருந்து தாபாதி பஞ்சஸம்ஸ்காரங்களையும் மந்த்ர ரத்நத்தையும் ஸாதித்தருளி இளையாழ்வாரையுங் கூட்டிக்கொண்டு பெருமாள்கோவிலுக் கெழுந்தருளி பேரருளாளரைசேவித்து இளையாழ்வார்திருமாளிகையிலே மேல்ப்பாதியிலே பெரியநம்பி குடும்ப சமேதமாக வெழுந்தளியிருந்துக்கொண்டு இளையாழ்வாருக்கு த்ராவிட வேதங்களை ப்ரஸாதித்துக்கொண்டிருந்தார்.

அப்போதொருநாள் திருமஞ்சநமுறையிலே எண்ணைக்காப்புசாத்த வந்த ஸ்ரீவைஷ்ணவருக்கு பழையது ப்ரஸாதங் கொடுக்கவேணுமென்று இளையாழ்வார் தந்தேவிகளைநியமிக்க, தேவிகளும் அல்பமும் ப்ரஸாதமில்லையென்ன, தேவிகளை யொருகார்யத்திலேயேவி உள்ளேபுகுந்து சோதித்து பாத்ரத்திலே பழைய ப்ரஸாதங்கண்டெடுத்து தேவியாரை யழைத்துக்காட்டி மிகவுங்கோபித்தார். பின்பொருநாள் கிணற்றின்கரையிலே இளையாழ்வார் தேவிகளுக்கும் பெரியநம்பிதேவிகளுக்குமொரு தோண்டிநிமித்தமாக வுண்டானசண்டையைப் பெரியநம்பி யறிந்தருளி தம்முடையதேவிகளை மிகவுங்கோபித்து இளையாழ்வாருக்கு மறியாதே

தேவிகளையழைத்துக்கொண்டு மீண்டு ஸ்ரீரங்கத்திற்கெழுந்தருளிவிட்டார். இளையாழ்வாரும் அநுஷ்டாநம்பண்ணி யெழுந்தருளி பெரியநம்பியை சேவிக்கவந்தவிடத்திலே அவரைக்காணப்பெறாமையாலே அங்கிருந்தவர்களை பெரியநம்பி யெங்கேஎன்றுகேட்க, அவர்களுந் தோண்டிச்சண்டையை யறிவிக்க, இளையாழ்வாருங்கேட்டு மிகவுந் திருவுள்ளங்கலங்கி தேவிகளைப்பார்த்து முதல் திருக்கச்சிநம்பி விஷயத்திலும் இரண்டாவது என்னைக்காப்புசாத்தவந்த ஸ்ரீவைஷ்ணவவிஷயத்திலும் மூன்றாவது பெரியநம்பி தேவிகள் விஷயத்திலும் அபசாரப்பட்டாய் இப்படிசெய்த நீ இப்போதே புறப்பட்டுப்போவென்று பயணமாக்கிப் பிறந்தகம்போகவிட்டுப் பேரருளாளனை யாசார்யராகவங்கீகரித்து முக்கோலும் முப்பிரியும் காஷாயமுஞ் சிகையும் இவைமுதலானவைகூடின வுத்தமாஸ்ரமத்தையடைந்து பேரருளாளராலே ராமாநுஜமுநியென்று திருநாமஞ்சாற்றப்பெற்றுத் திருக்கச்சிநம்பியையிட்டு மடத்திலேவைத்தருளப்பெற்று பேரருளாளராலே மிகவுமுபலாளிக்கப்பட்டிருந்தார். பின்பு ஆளவந்தார்கருத்தை நிறைவேற்றுகைக்குஸஹாயமாக ஸகலசாஸ்த்ரநிபுணரான கோவிந்தபட்டரைத் திருத்தவேணுமென்று நினைத்துப் பெரிய திருமலைநம்பிஸந்நிதிக்குத் தம்முடையநினைவை விண்ணப்பஞ்செய்தனுப்பியருளினார்.

இப்படியிவர் ஆச்ரமப்ராப்திசெய்தருளின சேதியைக்கேட்டு கந்தாடை முதலியாண்டானும் ஹரிதகுலதிலகரான கூரத்தாழ்வானும் பெருமாள்கோவிலுக்கெழுந்தருளி ராமாநுஜனைஸேவித்து அவர்திருவடிகளிலே பஞ்சஸம்ஸ்காராதிகளைப்பெற்றார்கள். முதலியாண்டான் அவதாரம் சித்திரையில் புநர்வஸுநக்ஷத்திரம். ஊர் பச்சைவாரணப்பெருமாள்கோவிலென்கிற புருஷமங்கலம். தாயார் இராமாநுஜனுக்குத் தமக்கையான பூமிதேவியாண்டாள். பிதா வாதூலகுலதிலகரான அநந்தநாராயணதீக்ஷிதர். திருநாமம்:—முதலியாண்டான், தாசரதி, வாதூலதேசிகன், ஸ்ரீவைஷ்ணவதாஸன், இராமாநுஜபாதுகை. இவர் ராமாம்சம். சக்ராம்சம் (ஸு) சுப்ரதிஷ்டாம்சம். ஆழ்வான் திருநக்ஷத்ரம் தைமாசத்தில் ஹஸ்தநக்ஷத்ரம். ஊர் கூரம். பிதா கூரத்தாழ்வாரென்கிற ராமஸோமயாஜிகள். இவரும் ராமாம்சம். சங்காம்சம். ஸர்வநேத்ராம்சம்; திருநாமம். கூரத்தாழ்வான். திருமருமார்பன். ஸ்ரீவத்ஸசிந்நன். நடையாடும்பதஞ்சலி. ஸஞ்சாரிமஹாபாஷ்யன். யதீந்த்ரசரணர். இப்படியாண்டானு மாழ்வானு மிராமாநுஜனைப்பிரியாமல் அடிமைசெய்துக்கொண்டு சேவித்துக்கொண்டிருக்கிற காலத்திலே யாதவப்ரகாசனுடைய மாதாவுக்குப் பேரருளாளர் நித்யஸேவையாலே இராமாநுஜனிடத்திலே ப்ரேமம்பிறந்து அதுவேகாரணமாக நம்தர்சநத்திலே யவளுக்கு ருசிபிறந்து இத்தர்சநத்திலே யாதவனுமிறங்கினால் நன்றாயிருக்குமென்று நினைத்துக்கொண்டு ஹஸ்திகிரிப்படியேறாநிற்க, நல்லது நல்லதென்று உபச்ருதியுண்டாக வதுகேட்டுத் தன் பிள்ளை யாதவனுக்கிச்சேதியைச்சொல்லி நீயு மிராமாநுஜனைப்போலே

சிகையுமுபவீதமும் முக்கோலுந்தரிக்கவேணுமென்ன, யாதவனும்மிளையாழ்வார் அந்நாளிலே தனக்கு ப்ரதியாகச்சொன்ன நற்பொருள்கள்நெஞ்சிலே பட்டிருக்கையாலும் கங்கையாடப்போகும்போது வேடனுகவந்த ராமஸஹாயத்தாலும், இவர்மாஹாத்ம்யத்தை ப்ரம்மரக்ஷஸ்சொல்லியிருக்கையாலும்,தாயார் வாக்யத்தாலும் சம்மதித்து"சிகையுமுபவீதமும் த்யாகம் பண்ணினதற்குப்ராயச்சித்தமாக பூப்ரதக்ஷிணஞ்சொல்லியிருந்தது அதற்கிப்போது வார்த்தகத்தாலே சக்தியில்லை"யென்று மாதாவுடனே சொல்லிக்லேசித்துக்கொண்டிருக்க, வவ்விராவிலே பேரருளாளர் யாதவன் கனவிலேவந்து நம்மிராமாநுஜனை யொருப்ரதக்ஷிணம் பண்ணி யவரிடத்தில் முக்கோல்முதலானவைதரித்து ஸந்யாஸம் பெறுயென்ன, யாதவனும் அதை நம்பாமல் திருக்கச்சிநம்பியுடனே நானொருநினைவு நினைத்திராநின்றேன், அத்தைப் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து அவர்திருவுள்ளத்தை யெனக்குத் தெறிவிக்கவேணுமென்ன, நம்பியும் யாதவனொருநினைவு நினைத்திருந்தே னென்றான் என்று பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் அவனுக்குத் தாயார்சொன்னதையும், தாயாருக்கவன்சொன்னதையும், தாமவனுக்குக் கனவிலே சொன்னதையும், நம்பிக்கருளிச்செய்ய, நம்பியும், வெடிவோறே யிச்செய்தியை யாதவனுக் கருளிச்செய்ய, யாதவனும் விச்வஸித்துவந்து இராமாநுஜனைத் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்துத் தான்கண்ட கனவை விண்ணப்பஞ்செய்து, இராமாநுஜனை வலம்வந்து முக்கோல் முப்புரி சிகாசாஷாயங்களைதரித்து இராமாநுஜனிடத்தில் ஸந்யாஸம்பெற்றான். பின்புகோவிந்தஜீயனென்று திருநாமஞ் சாற்றப்பெற்றுப் பஞ்சஸம்ஸ்காரம்பெற்றான்.பின்பு இராமாநுஜன் அவன்செய்த யதிதர்ம்மஸமுச்சயமென்கிற க்ரந்தத்தைககடாக்ஷித்து சந்தோஷித்தருளினார். கோவிந்தஜீயரும் சிறிதுநாள் ஆசார்யஸந்நிதியிலே யெழுந்தருளியிருந்து கடிகைத்திருநாட்டிற்கெழுந்தருளினார். பின்பு அரங்கநாதன் இராமாநுஜனைத் தமக்குத்தரும்படி பேரருளாளருக்கு திருமுகம் போகவிட பேரருளாளரும் அத்தைப்பார்த்துத் தனதபிமாநத்தை புறம்பே போகவிடிலன்றோ நாம் நம்மிராமாநுஜனைப் போகவிடுவதென்றருளிச்செய்துவிட, பெரியநம்பிமுதலான முதலிகள்கேட்டுத் தங்களிலே சிந்தித்துத் தேவப்பெருமாள் கான (ஜ்ஞ) ரஸிகராயும் பரமோதாரராயு மிருப்பவராகையாலே ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரை யேறவெழுந்தருளி தேவகானத்திலே பாடிதேவப்பெருமாளையுகப்பித்து இராமாநுஜனைத் தந்தருளவேணுமென்றால் தந்தருளுவரென்றுநினைத்து அரையருக்கு விண்ணப்பஞ்செய்ய, அரையருங் கோயில்நின்றும் அப்போதேபுறப்பட்டுப்பெருமாள்கோவிலுக் கெழுந்தருளா நிற்க, அவருக்குப்பந்துவான பெருமாள்கோவில் வரந்தரும்பெருமாளரையர் எதிர்கொண்டு ஆழவார் திருவரங்கப்பெருமாளரையரைத் தம்திருமாளிகையில் அமுதுசெய்யப் பண்ணிவித்து மற்றைநாள் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு அழைத்துக் கொண்டுபோக, அரையரும் தேவப்பெருமாளைஸேவித்து தேவகானத்திலேபாடி யுகப்பிக்க

பெருமாளுமுகந்து நீர் வேண்டினதைத் தருகிறோம் அத்தைச் சொல்லு மென்ன. அரையரும் இராமாநுஜனைத் தந்தருளவேணுமென்ன, பெருமாளும் வருத்தத்துடனே இராமாநுஜனைத் தந்தருள, இராமாநுஜனும் பெருமாளைத் தண்டன்சமர்ப்பித்து அரையருடனே ஸ்ரீரங்கத்திற் கெழுந்தருள, நம்பெருமாளும், சேனைமுதலியாரையும் பெரியநம்பி யுள்ளிட்ட முதலிகளையும் மற்றுமனைத்துக் கொத்துப்பரிஜநங்களையு மெதிரே தூரத்திலே யநுப்பியருளித் தாமும் திருக்கைத்தலத்திலே புறப்பட்டு அழகிய மணவாளன் திருமண்டபத்தளவு மெழுந்தருள, இராமாநுஜனும் விழுந்தெழுந்து தொழுது திருப்பள்ளியறையிலேபுகுந்து பெரியபெருமாளை சேவித்து ஸகலபரிசுகளையு முபயவிபூத் யைச்வரியதனையும்பெற்று, கோயிற்காரியத்தையுமாராய்ந்து நடத்தும்படி பெருமாள் நியமநம்பெற்று, அவை யெல்லாவற்றையுமாராய்ந்து நன்றாக நடத்திக்கொண்டு அகளங்கநாட்டாழ்வானைச் சிஷ்யனாக்கிக் கோயிலுக்கு மேற்காவலாகவைத்து கோயில்கைங்கர்யங் குறைவற நடத்திக்கொண்டு வருகிறகாலத்திலே கோவிந்தபட்டர் திருந்தி பெரிய திருமலைநம்பி திருவடிகளையாச்ரயித்துப் பஞ்சஸம்ஸ்காரங்களைப் பெற்றதுகேட்டு மிகவுமுகந்தருளி பெரியதிருமலைநம்பியை தண்டன் சமர்ப்பித்து தேவரீர் திருவுள்ளத்திலுண்டான வர்த்தங்களை யடியேனுக்கு ஸாதித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் பலவர்த்தங்களையும் சாதித்து சிலவர்த்தங்களைத் திருக்கோட்டியூர்நம்பி சந்நிதியிலே கேளுமென்று நியமிக்க, இராமாநுஜனும் திருக்கோட்டியூருக்கெழுந்தருளி நம்பியை சேவித்து அடியேனுக்கு ரஹஸ்யார்த்தங்களை யருளிச்செய்ய வேணுமென்றுவிண்ணப்பஞ்செய்ய,நம்பியுமிவருடைய அத்யவஸாயத்தை யறியவேணுமென் றிடங்கொடாமலிருக்க உடையவருங் கோயிலுக்கெழுந்தருளினர். பின்பு திருநாள் சேவிக்கவந்து மீண்டெழுந்தருளும்போது நம்பெருமாள் நம்பிக்கருளப்பாடிட்டு நம்மிராமாநுஜனுக்கு ரஹஸ்யார்த்தங்களை யுபதேசியுமென்று நியமிக்க, நம்பியும் ஒருவர்ஷம் சோதியாமல் உபதேசிக்கவேண்டாவென்று சாஸ்த்ரமுகத்தாலே தேவரீர் நியமித்ததே என்ன, பெருமாளும் இங்கப்படியன்று; சிஷ்யபூர்த்தியுள்ள ராமாநுஜனுக்குச் சொல்லலாமென்று அருளிச்செய்ய, நம்பியு முடையவரைக்குறித்து ஊரே வாருமென்றுசொல்லி யெழுந்தருளினர். பின்பு உடையவருந்திருக்கோட்டியூருக்குச்செல்ல, நம்பியுமிப்போது போய்வாருமென்ன, இவருங் கோயிலுக் கெழுந்தருளினர். இப்படி பதினெட்டு நடையாச்சுது. பின்பு உடையவருங்கோயிலுக்குவந்த நம்பிசிஷ்யரொருவர்முகமாகத்தம்முடைய வார்த்தியைவிண்ணப்பஞ்செய்துப்போகவிட நம்பியுமத்தைக்கேட்டு உகந்தருளிதண்டும்பவித்ரமாகத்தாமொருவருமேவருவதென்றுசொல்லிப்போகவிட, உடையவரும் அதுகேட்டு மிகவுமுகப்போடே கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையுங்கூட்டிக்கொண்டு நம்பிஸந்நிதியிலேசென்று தண்டனிட்டுநிற்க, நம்பியும் உம்மையொருவனாயன்றோ வரச்சொன்னோம்; இவர்களைக்கூட்டிக்கொண்டு வருவானேனென்ன, உடையவரும் தேவரீர்

தண்டும் பவித்ரமுமாக வரச்சொல்லுகையாலே தண்டும் பவித்ரமுமான விவர்களைக் கூட்டிக்கொண்டு வந்தேனென்ன, நம்பியும் தண்டார், பவித்ரமார், என்றுகேட்க, உடையவரும் முதலியாண்டானை தண்டென்றும் கூரத்தாழ்வானைப் பவித்ரமென்றும் விண்ணப்பஞ்செய்ய, நம்பியுமிவர்களை விருவாக மற்றொருவருகருஞ்சொல்ல வேண்டாவென்று நியமித்து உடையவருக்குத் திருமந்த்ரார்த்தத்தை ஸாதித்தருளினார். இராமாநுஜனும் அதுகேட்டு இனியராய் பராநர்த்தம் பொறுக்கமாட்டாதவராகையாலே திருவோலக்கத்தில் அனேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அந்த ரஹஸ்யார்த்தத்தை ஸாதித்தருள, நம்பியு மித்தைக்கேட்டு உடையவரை யழைத்து என் நியமனத்தைமறந்தத வுமக்குப்பலமேதென்ன, உடையவரும் எனக்கு நரகமே பலமென்ன, நம்பியும் நீரறிந்து மிப்படிசெய்வானென்னென்ன, உடையவரும் நானொருவன்போனாலும் தேவரீர் திருவடிஸம்பந்தத்தினாலே இவ்வாத்மாக்களுஞ்ஜீவிப்பார்களென்று சொன்னேனென்ன. நம்பியும் மிகவுமுகந்து எம்பெருமானாரோ வாருமென்றெடுத்தணைத்துக் கொண்டு அவரோ நீரென்றருளிச்செய்து இன்னமுமக்கோ ரர்த்தஞ்சொல்லுகிறோம் இப்போதுபோய் நீரொருவருமேவாருமென்ன, உடையவரும் கோயிலுக்கெழுந்தருளி பின்பு திருக்கோட்டியூருக்கெழுந்தருள, நம்பியுமுகந்து ச்லோகார்த்தத்தையருளிச்செய்யக்கேட்டு உடையவர்கோயிலுக்கெழுந்தருளி நம்பிநியமநத்தாலே ஆழ்வானைமாஸோபவாஸங்கொண்டு இவ்வர்த்தங்களை யாழ்வானுக்கருளிச்செய்ய, முதலியாண்டானும் தண்டனிட்டு அடியேனுக்கு மருளிச்செய்ய வேணுமென்று கேட்க, உடையவரும் ஆழ்வானொருவனுக்குமே நம்பி நியமனமானபடியால் நீர் நம்பி சந்நிதிக்குப் போய்க் கேளுமென்ன, ஆண்டானும் திருக்கோட்டியூரிலே நம்பியை ஆறுமாசம்சேவித்துநின்றார். பின்பொருநாள் நம்பி ஆண்டானைப்பார்த்து முக்குறும்பு போனால் எம்பெருமானார் தாமே அருளிச்செய்வர் அஞ்சாதே போமென்று தம்முடைய திருவடிகளை ஆண்டான் திருமுடியிலே வைத்து விடைகொடுத்தருள, ஆண்டானும் உடையவர் சந்நிதியிலே வந்து தண்டனிட்டு நிற்க, உடையவர் உகப்புடனே ஆண்டானுக்கும் ச்லோகார்த்தத்தை யருளிச்செய்து இப்போது தமக்கு தண்டும் பவித்ரமுங் கைபுகுந்ததென்று அருளிச்செய்தார். பின்பு சிலகாலையிலே திருக்கோட்டியூர் நம்பி கோயிலுக் கெழுந்தருளி திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்தங்கேளுமென்று உடையவரைநியமித்து நம்பி திருக்கோட்டியூருக் கெழுந்தருளினார். பின்பு திருமாலையாண்டான் திருவாய்மொழி தொடங்கி நடவாநிற்க, உடையவர் சிலபாட்டுகளுக்கு நன்றான வர்த்தங்களைச்சொல்ல. திருமாலையாண்டான் "இது ஆளவந்தார்பக்கல் கேட்டதல்ல, விச்வாமித்ரஸ்ருஷ்டி" என்றுசொல்லி திருவாய்மொழிசொல்லுகை தவிர்ந்தார். பின்பு இத்தைத் திருக்கோட்டியூர் நம்பி கேட்டருளிகோயிலுக்குவந்து திருவாய்மொழிநடக்கிறதோவென்றுகேட்டருள, திருமாலையாண்டானும் நடந்த செய்தியை அறிவிக்க, நம்பியு முடையவர் சொன்னவார்

த்தை ஆளவந்தாரருளிச்செய்ய நாம் கேட்டிருந்தோம் என்று சொல்லி, திருமாலையாண்டானையும்பெரியநம்பியையுங்கூட்டிக்கொண்டு உடையவர் மடத்திற்கெழுந்தருளி முன்புபோலேதிருவாய்மொழி நடக்கும்படிபண்ணி யெழுந்தருளினார். பின்னையும் திருவாய்மொழி நடக்கச்செய்தே ஒரு ப்ரஸ்தாவத்திலே ஆண்டான்சொன்னவர்த்தங்கேட்டு ஆளவந்தார் இப்படி யருளிச்செய்யாரென்று உடையவர் விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும் நீர் ஆளவந்தாரைக்காணாதிருக்க இப்படி சொல்லுகைக்கு மூலமேதென்ன, உடையவரும்நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்யனென்ன (அதாவது ஏகலவ்ய னென்பானுக்கு குருவைக்காணாதிருக்கச்செய்தேயும் குருபக்தியாலே அஸ் த்ரவித்யை கைபுகுந்தாப்போலே அடியேனுக்கும் ஆளவந்தாரைக் காணா திருந்தாலும் அவர்திருவடிகளிலே பரமபக்தியாலே திருவாய்மொழி யர்த் தங்கள்தானே தோற்றுமென்னபடி) இத்தையாண்டான் கேட்டருளி இதுவுமோரவதாரமென்று உடையவரை தண்டனிட்டருளி பின்பு சில நாளிலே திருவாய்மொழி சாத்தினபோது பெரியநம்பி உடையவரைப் பார்த்து ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் பக்கலிலே இன்னமு மொருபொருளுண்டு அத்தை அவர்பக்கலிலே கேளுமென்றருளிச்செய்ய, உடையவரும் அரையர் ஸந்நிதியிலே ஆறுமாஸமடிமைசெய்து அரைய ரிடத்திலே சரமார்த்தங்கேட்டருளினார். பின்பொருநாள் உடையவர்மாதூ கரம் பண்ணுகிறபோது ஸ்தாநத்தொரையாரிலே யொருவன், மாதூகரத் திலே விஷத்தைக்கலந்துகொடுக்கச்சொல்லி ஒருபெண்பிள்ளையை புருஷ னைக்கொண்டிருக்க, அவளும் விஷங்கலந்த மாதூகரத்தையிட்டு தண்ட னிட்டுப்போக, உடையவருங் கருத்தறிந்து அத்தைப்புகட்டு உபவாஸமா யிருந்தார். இத்தைத் திருக்கோட்டியூர்நம்பி கேட்டெழுந்தருளி நல்ல வெய் யலிலே திருக்காவேரியிலே எழுந்தருளாநிற்க, உடையவரும் முதலிகளோட னே எழுந்தருளி தண்டனிட்டுக்கொண்டுகிடக்க, நம்பியுமெழுந்திருக்கச் சொல்லாமலிருக்க, கிடாம்பியாச்சானும் இதென்ன சிஷ்யாசார்யக்ரமம் புமாலையைவெய்யலிலே கலைவார்களோவென்றுசொல்லி உடையவரைப் பரிந்தெடுக்க, நம்பியு மாச்சானைப்பார்த்து உம்மை காணுந்தேடுகிறோம், இன்றுமுதல் நீர் தளிகைக்குப்பண்ணி இவர்க்கு ஏகமாதூகரமாக ப்ர ஸாதியுமென்று நியமிக்க, கிடாம்பியாச்சானும் அப்படியே பண்ணிக் கொண்டு வந்தார். பின்பு யக்ஞமூர்த்தி என்கிற மகாவித்வான் கங்கை யாடப்போய் அங்குள்ள வித்வான்களை ஜயித்து மாயாவாத ஸந்யாஸியாய் வித்தையினாலும் சிஷ்யஸம்பத்தினாலும் மிகுந்தவனாய் அங்கே உடையவ ருடைய வைபவத்தைக்கேட்டுக் கோயிலுக்குவந்து உடையவரைப் பார் த்து என்னுடன் தர்க்கிக்க வேணுமென்ன, இவரும் அப்படியே செய்கி றோம் நீ தோற்றால் என்செய்கிறா யென்ன, அவனும் நான் தோற்றே னாகில், உம்முடையபாதரக்ஷையைச்சுமந்து உம்முடையபேரையுமிட்டுக் கொண்டு உம்முடைய ஸித்தாந்தத்திலே புகுரக்கடவே னென்ன, உடை யவரும் நாம் தோற்றோமாகில் க்ரந்தஸந்யாஸம்பண்ணி தோற்றனென்கி

ரேென்ன, அவனும் சம்மதித்து பதினெட்டுநாள்வரை யவதியிட்டு வாதம்பண்ணுகிற்கப், பதினேழாகுள் அவனுடையகக்ஷி ப்ரபலமானவள விலே நாளைக்கு வருவதாக வெழுந்திருந்து அனுப்பிப்போக, உடையவரும் வ்யாகுலராய் மடத்திற்செழுந்தருளி பேரருளாளரை ஆராதித்து அமுது செய்யப்பண்ணி ப்ரபத்திபண்ணித் தாமமுதுசெய்யாதே வெறுப்புடனே கண்வளர்ந்தருள, பேரருளாளர் ஸ்வப்நத்தி லெழுந்தருளி "இராமாநுஜ முனியே உமக்குப் பெரியசிஷ்யனைத் தந்தோம், ஆளவந்தார் செய்தரு ளின மாயாவாதகண்டனத்தைச்சொல்லி அவனை ஜயிப்பீ ரென்ன" உடையவரும் விடிவோரே எழுந்திருந்து நித்யாநுஷ்டாநஞ் செய்தருளி பேரருளாளரை சேவித்துக் கடுகவெழுந்தருளும்போது யக்ஞமூர்த்தி இவருடைய காம்பீர்யத்தைக்கண்டு இவர்நம்மை ஜயிப்பரென்றுநினைத்து எழுந்திருந்து உடையவர் திருவடிகளிலே சேவித்து தேவரீருக்குத்தோற் றேனென்று ஸ்ரீபாதரக்ஷையை யெடுத்துக்கொண்டு அடியேனை இரங்கி யருளவேணுமென்ன, உடையவரும் இதென்னென்று நினைத்துத் தர்க் கிக்கலாகாதோவென்ன, அவனும் பெரியபெருமாளே தேவரீராகையாலே தேவர்முன்னே வாய்திறக்க வழியில்லை என்ன, ஆகிலுங் கேளீரென்று மாயாவாதகண்டனத்தை யுபந்யஸித்துக்காட்ட, அவனுமிசைந்து ஏகதண் டத்தை முறித்தெறிய, உடையவரும் அவனுக்கு முக்கோல் முப்புரிநூல் திகோபவீதங்களை தரிப்பித்து தாபாதி பஞ்சஸம்ஸ்காரங்களைப்பண்ணி அரு ளாளப்பெருமானென்று திருநாமஞ்சாத்தியருளி பெரியபெருமாளையும் பே ரருளாளரையும் ஸேவிக்கப்பண்ணிவித்துத்தாமும் அமுதுசெய்து இவருக் குத் தளிகைப்ரஸாதம் ஸாதித்து திவ்யப்ரபந்தங்களையும்ஓதுவித்து தத்வ சிக்ஷைஸாதித்து அனந்தாழ்வானையும் எச்சானையும் தொண்டனூர்நம்பி யையும் மருதூர்நம்பியையும்அவர் (அருளாளப்பெருமானெம்பெருமானார்) ஸ்ரீபாதத்திலேயாச்ரயிப்பித்தருளி அநந்தாழ்வானைதிருமலைக்கனுப்பியருளி பின்பு சிலநாளிலே கோயில்நின்றும் புறப்பட்டருளித் திருக்கோவலூருக் கெழுந்தருளி நயினாரைசேவித்து பெருமாள்கோவிலுக் கெழுந்தருளிதிருக் கச்சிநம்பியை சேவித்து அவர்புருஷகாரமாகி பேரருளாளரைசேவித்து அங்குநின்றும்புறப்பட்டு வடக்குத் திருமலைக்கெழுந்தருளச்செய்தே வழி காட்டின யெத்தமிறைப்பானைத் தண்டனிட்டுத் திருமலைத்தாழ்வரையிலே எழுந்தருளியிருக்கிற பராங்குசபரகாலாதியான ஆழ்வார் பதிவரையும் ஜீர்ணோத்தாரணஞ்செய்வித்து திருப்பதியிலே யெழுந்தருளியிருந்து விட் டளதேவனையுஞ் சிஷ்யனாக்கிக்கொண்டு அங்கேதம்முடைய சிஷ்யர்களை முப்பது திருநாமத்திற்குக் குடியேற்றி இளமண்டியமென்கிற க்ராமத்தை விடுவித்து முதலிகள் வேண்டிக்கொள்ளுகையாலே திருமலையேறித் திரு வேங்கடமுடையானைசேவித்து இறங்கியருளி பெரியதிருமலைநம்பி ஸந்நிதி யிலே யொருவருஷம் ஸ்ரீராமாயணார்த்தங்கேட்டருளி யவரிடத்தில் கோ விந்தப்பெருமானை வாங்கிக்கொண்டு திருப்புள்குழிவழியாலே யெழுந்தரு ளிக் கச்சிநகர் திருப்பதிகளைசேவித்து திருக்கச்சிநம்பிஸந்நிதியிலே யெழுந்

தருளியிருந்தார். அப்போது பெரியதிருமலைநம்பியை விட்டுவந்த க்லேசத்
தாலே கோவிந்தப்பெருமாளுக்கு உடம்புவெளுக்க உடையவரும் அவர்
கருத்தறிந்து அவரைத்திருமலைக்குப்போகவிட, திருமலைநம்பியுங் கூட்டிக்
கொள்ளாமல் தள்ளிவிட, கோவிந்தபட்டரும் உடையவர்ஸந்நிதியிலே
வந்து தண்டனிட, உடையவரும் அங்கீகரித்துத் தம்முடைய கல்யாண
குணங்களை யநுபவிப்பித்துத் தேற்றித்தெளிவித்து கோவிந்தபட்டரையுங்
கூட்டிக்கொண்டு கோயிலுக்கெழுந்தருளி யிருக்கிறநாளிலே கோவிந்த
பட்டருடைய விரக்தியைக்கண்டு ஸந்யாஸாச்ரமத்தைக் கொடுத்தருளி
எம்பெருமானென்று திருநாமஞ்சாற்ற, அவரும் தேவரீருக்கு பாதச்
சாயையாயிருக்கிற வடியேனுக்குப் பொருச்கும்படி திருநாமம் ஸாதிக்க
வேணுமென்ன, உடையவரும் இடையைக்கழித்துத் தலையையுங்கடை
யையுங்கூட்டி யெம்பாரென்று திருநாமஞ்சாற்றினார். பின்பு சிலதேசாந்த
ரஸ்தர்வந்து எம்பெருமானார் மடமெங்கென்றுகேட்க, இருந்தவர்கள் எந்த
வெம்பெருமானார் மடமென்றுகேட்க, அவர்களும் இரண்டெம்பெருமானு
ருண்டோவென்ன, இருந்தவர்களும் அருளாளப்பெருமாளெம்பெருமானார்
ஒருவருண்டென்ன, இப்படி சிலவார்த்தைநடந்துக்கொண்டிருக்க, இத்
தை யருளாளப்பெருமா ளெம்பெருமானார்கேட்டு நாம் வேறுமடத்திலே
யிருக்கையாலே இப்படிவந்ததென்று மடத்தை யிடிசதுப்புகட்டு உடை
யவர் திருவடிகளைக்கட்டிக்கொண்டு இச்செய்தியை விண்ணப்பஞ்செய்து
க்லேசிக்க, உடையவரும் அவரைப்பிரியாமல் அடிமை செய்யும்படித்
தம்முடைய மடத்திலே வைத்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார். அருளா
ளப்பெருமாளெம்பெருமானாரும் உடையவர் ஸந்நிதியிலே பிரியாமல்
அடிமைசெய்துக்கொண்டிருந்து ஞானஸாரம் ப்ரமேயஸாரம் என்கிற
விரண்டு ப்ரபந்தங்களைச் செய்தருளினார். பின்பு கூரத்தாழ்வான். அருளா
ளப்பெருமாளெம்பெருமானா. முதலியாண்டான். இவர்களைக் கூட்டிக்
கொண்டு ஸ்ரீபாஷ்யஞ்செய்தருளுவதாகத் திருவுள்ளம்பற்றினார். அதற்கு
போதாயனவ்ருத்தி கிரந்தம் வேணுமென்று விசாரித்து அது வடக்கே
யிருக்கிறதென்றுகேட்டு ஆழ்வானுடனே உடையவர் அங்கேயெழுந்தருளி
உபாயத்திலே அந்தகோசத்தைவாங்கி ஆழ்வானுந்தாமும் திருக்கண்மலர்
சாற்றிக் கோசத்தைக்கொண்டுவருகிறதாக விருக்கச்செய்தே அங்கே
சிலர் கோசத்தை யெடுத்துக்கொண்டுபோக உடையவரும் கோசம்
போனதற்கு வ்யாகூலப்பட்டிருக்க, ஆழ்வானும் தேவரீர் கடாக்ஷத்தி
னாலே வ்ருத்திக்ரந்தமெல்லாம் அடியேனுடைய சித்தபித்தியில் லிகிதமா
யிருக்கிறதென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் மிகவும் உகந்தருளி
ஆழ்வானுடனே கோயிலுக்கெழுந்தருளி முதலியாண்டானையுங்கூட்டிக்
கொண்டு ஸ்ரீபாஷ்யந்தலைக்கட்டியருளி ஆளவந்தாருடைய முதல்நினை
வைப் பூரித்தருளினார்.

பின்பு முதலிகளெல்லாரும் உடையவரைத்தண்டனிட்டுதேவரீர்திக்
விஜய யாத்ரைசெய்தருளி அங்குள்ள திவ்யதேசங்களையும் ஸேவித்தெழுந்

தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரு மங்கீகரித்து நம் பெருமாளநுமதிகொண்டு முதலிகளுடனே புறப்பட்டுச் சோழமண்டலத் திற் கெழுந்தருளி திருக்குடந்தை முதலான திருப்பதிகளை ஸேவித்து அங்குள்ள புறச்சமயிகளை ஜயித்து தெற்கே புறப்பட்டு அழகர் திருமலை முதலான திருப்பதிகளை ஸேவித்து பாண்டியமண்டலத்திலுண்டான புறச் சமயிகளை ஜயித்து ஸேதுதர்சநம்பண்ணி திருநகரிக்கெழுந்தருளி ஆழ்வாரை ஸேவித்து ஒரு ச்லோகம் விண்ணப்பஞ்செய்து ஆதிப்பிரானையும் ஸேவித்து சுற்றிலுள்ள திருப்பதிகளையும் ஸேவித்து அங்குள்ள புறச்சமயிகளையும் ஜயித்து திருக்குறுங்குடிக் கெழுந்தருளி நம்பியை ஸேவித்து அவர் திருவுள்ளப்படியே அவரை ராமாநுஜமுடையராக்கி ஸ்ரீவைஷ்ணவ நம்பி என்று தாஸ்யநாமம் ஸாதித்து அங்குநின்றும் புறப்பட்டு திருவண் பரிசாரம் திருவாட்டாறு ஸேவித்து திருவநந்தபுறத்தை ஸேவித்து அங்கே ராமாநுஜமடத்தை யுண்டாக்கி மற்றும் மலையாளதேசத்தி லுண்டான திருப்பதிகளை ஸேவித்து அங்குள்ள புறச்சமயிகளை ஜயித்து மேற்கு ஸமுத்ரக்கரை வழியாக உத்தரதேசத்திற்கெழுந்தருளி வடமதுரை, ஸாளக்ராமம், த்வாரகை,பதரிகாச்ரமம், நைமிசம், கோகுலம், கோவர்த்தநம், ப்ருந்தாவனம், திருக்கண்டம் முதலான திருப்பதிகளையும்ஸேவித்து அங்குள்ள புறச்சமயிகளையும் ஜயித்து ப(ஷ்)ட்டிமண்டபத்திற்குவந்து ஸரஸ்வதீபீடத் திற்கெழுந்தருளினார் அப்போது ஸரஸ்வதி தானே வாசலைத்திறந்துகொண்டு எதிரே புறப்பட்டுவந்து உடையவரைப்பார்த்து ஒரு ச்ருதிக்குப்பொருள் சொல்லச்சொல்ல இவருமசொல்ல, அவளும் சந்தோஷத்துடனே ஸ்ரீ பாஷ்யகோசத்தைத் தன்முடியிலே வைத்துக்கொண்டு ஸ்ரீபாஷ்யகாரனென்று திருநாமம்சாற்றி ஹயக்ரீவனையுங்கொடுத்து முன்வந்த சங்கரன் என்கருத்தறிந்து சொல்லமாட்டாதேபோனான். நீர் அதறிந்து சொன்னீரென்று ஸரஸ்வதியானவள் மிகவுங்கொண்டாடினாள். உடையவரும் அங்குள்ள புறச்சமயிகளைஜயித்து அந்த நாட்டுக்குராஜாவையும் சிஷ்யனாக்கிக் கொண்டு அங்கேதம்மேலே மந்த்ரப்ரயோகம்பண்ணின வித்வான்களைப் பிச்சேறும்படிபண்ணி அந்தராஜாவுக்காக வவர்களைப் பிச்சுத்தெளிவித்து சிஷ்யர்களாக்கிக்கொண்டு புறப்பட்டு வாராணஸீவழியாகவந்து கங்கை நேர்பட்டவாறே அதிலே நீராடிபுறப்பட்டு ஸ்ரீஜகந்நாதத்திலேவந்து ஜகந்நாதனைஸேவித்து அங்குள்ள புறச்சமயயிகளைஜயித்து அங்கேராமாநுஜ மடமுண்டாக்கிப்புறப்பட்டு ஸ்ரீகூர்மம் ஸிம்ஹகிரி அஹோபிலம் ஸேவித்துக்கொண்டு திருமலையிலே வந்தவளவிலே அங்கேசைவர்வந்து திருவேங்கடமுடையானைத் தங்கள் தைவமென்றுவழக்குப்பேச, உடையவரும் சூலடமருகங்களையும் சங்கசக்ரங்களையும் திருமுன்பேவைப்பது அவர் எத்தைதரிக்கிறாரோ அத்தைக்கொண்டு இவரை இன்னாரென்றுகொள்ளுவதென்றருளிச்செய்ய,எல்லாரும்சம்மதித்து அப்படியேசெய்ய, பின்பு திருவேங்கடமுடையான் திருவாழிதிருச்சங்கை தரித்தபடிகண்டு எல்லாரும் ஆனந்தித்து சைவரை அடித்தோட்டிவிட்டார்கள். அத்தாலே அப்பனுக்

குச் சங்காழி யளித்தருளும் பெருமாளென்று உடையவருக்குத் திருநாம முண்டாயிற்று. பின்பு புறப்பட்டு மற்றுள்ள திருப்பதிகளை ஸேவித்துக் கொண்டு கோயிலுக்கெழுந்தருளி முதலிகளுடனே ஸுகமாக வெழுந் தருளியிருந்தார். பின்பொருக்கால் மழைகாலத்திலே பகலளவும் வர்ஷம் வர்ஷிக்க உபாதாநகாலம் தப்பிப்போகையாலே ஆழ்வான் அன்றைக்குப் பட்டினியாக வெழுந்தருளியிருக்க, அன்றிராத்ரி பெரியபெருமாள்பெரிய வவஸரம் அமுதுசெய்கிறபோது திருச்சின்னநாதங்கேட்டு ஆண்டாள் பெருமாளை நோக்கி உம்முடைய அடியவர் பட்டினியிருக்க நீரமுதுசெய் கிறீரென்று நினைக்க, பெரியபெருமாளும் உத்தம நம்பிக்கு நியமித்து அக்காரவடிசில் தளிகைவரிசைகளுடனே உத்தம நம்பி திருமுடியிலே வரவிட, ஆழ்வானும் மகா ப்ரஸாதமென்றங்கீகரித்து ஆண்டாள்நினைவைக் கேட்டு வெறுத்து தாமொருதிரளை யமுதுசெய்து ஆண்டாளுக் கொருதிர ளையும் ஸாதித்தருளினார் பட்டரும் சிராமப்பிள்ளையும் அவதரிக்கைக்கு மூலம் இத்திரளைகளாயிருக்கும். பின்பு நம்பெருமாளனுக்ரகத்தாலே வைகாசி அனுராதத்திலே ஆழ்வானுக்கொரு குமாரர் அவதரித்தார். உடையவர் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளி எம்பாரைக் குழந்தை யை யெடுத்துவரச்சொல்லிக் குளிரநோக்கி எம்பாரைப் பார்த்து நீரே இவருக் காசார்யராகக்கடவீரென்று நியமித்துக் குழந்தைக்குப் பஞ்ஜாரம் தந்திருக்கையாலே சாத்தியருளி நாமகரணத்தினன்று எம்பாரைக்கொ ண்டு சங்கசக்ராங்கனஞ் செய்வித்து ஸ்ரீபராசரபட்டரென்று திருநாமஞ் சாற்றி ஆளவந்தாருடைய விரண்டாவது நினைவைப் பூரித்தருளினார். பட்டர் ஸ்ரீரங்கநாதாம்சம். (ச்லோகம்) శ్రీపరాశరభట్టార్యంభూయోభూ యోనమామ్యహమ్। యదాత్మనాస్వయంరంగీభేజేశేశపుత్రతామ్॥ இது அக் காலத்திலுள்ள பெரியோர்க ளருளிச்செய்தது. பின்பு எம்பார் திருத் தம்பியார் சிறிய கோவிந்தப்பெருமாளுக்கு ஒரு குமாரர் அவதரித்தருள, உடையவர் கடாக்ஷித்தருளி பராங்குசநம்பி யென்று திருநாமஞ்சாற்றி ஆளவந்தாருடைய மூன்றுநினைவைப் பூரித்தருளினார். பின்பு நம்பெரு மாள் பசுங்குழந்தையான பட்டரை மஞ்சநீர் குடிப்பித்து தம்முடைய ஸந்நிதியிலே திருமணத்தூண் சமீபத்திலே தொட்டிலிட்டு நாச்சியார் சீராட்டிவளர்க்க வளர்ந்த விக்குழந்தைப், பெருமாளுக்குத்தளிகை ஸமர்ப் பித்திருக்கச்செய்தே அதிலே தம்திருக்கையாலே அள்ளிக்கொண்டு அமுது செய்தருள, பெருமாளதுகண் டுகந்தருளி பின்பு தாமு மமுதுசெய்தருளி னார். பின்பொருக்கால் உடையவர் பாலராயிருக்கிறபட்டர் திருக் கையிலே யொரு ச்லோகத்தைச்கொடுத்து வாசிக்கச்சொல்ல பட்டருமழ கியதாகவாசிக்க உடையவரும் மிகவு முகந்தருளி முதலிக ளெல்லாரையு மழைத்து நம்மிடத்திலே யிருக்குமாப்போலே இவரிடத்திலே யிருங்கோ ளென்றுநியமித்து அருளினார். எம்பாருமொருக்கால் பட்டர் வாசுக்கக்கே ட்டு இக்குழந்தை நந்தரிசனத்திற்குக் கீர்த்திகொண்டு வருமென்றருளிச் செய்தார். பின்பொருநாள் ஆழ்வான்திருவாய்மொழிய நுஸந்திக்கும்போது

"சிறுமாமனிசரா" யென்கிறவித்தை ஐந்துவயஸ்ஸிலேபட்டர்கேட்டுசிறுமைபெருமை யொன்றிலேகூடுமோவென்றுகேட்க, ஆழ்வானுமுகந்தருளி சிறியாச்சானையும் அருளாளப்பெருமா ளெம்பெருமானாரையுங் காட்டித் திருமேனிசிறுத்து ஜ்ஞாநம்பெருத்து இருக்குமிவர்களைக்கண்டீர்! சிறுமாமனிசரென்கிறது என்று ஸமாதானம் பண்ணியருளினார். பின்பொருநாள் பட்டர் ஐந்துவயஸ்ஸிலே திருவீதியிலே புழுதியளைந்து விளையாடுகிறபோது ஸர்வஜ்ஞபட்டரென்று (ஒருவித்வான்) காஹளமூதிவர, குழந்தையான பட்டரிருந்து உடையவர்முதலானாரிருந்த விடத்திலே இவனாரடா காஹளமூதிக்கொண்டு வருகிறானென்று பார்த்து இரண்டுகையாலும் புழுதியையள்ளிக்கொண்டு அவனைப்பார்த்து நீ ஸர்வஜ்ஞனாச்சுதே இதெத்தனை சொல்லென்றுகேட்க, அவனுமொன்றுஞ்சொல்லமாட்டாதே தலைவணங்கிக்கொண்டிருக்க, பட்டரும் அவனைப்பார்த்துகெடுவாய்? இதொருகைப் புழுதியென்றுசொல்லி விருதூதித்திரியமாட்டாதே அஞ்ஞனாயிருந்தாயேயென்றுசொல்லிக்காஹளத்தைப்பறியுங்கோளென்ன, ஸம்மழலைச்சொல்லையவன்கேட்டு இவராருடையபுத்திரர் என்றுகேட்க, ஆழ்வான்குமாரரென்று அங்குள்ளார்சொல்ல, வதைக்கேட்டுப் பிறப்பதின்குட்டித்தவிழுமோவென்றுசொல்லி ஆச்சர்யப்பட்டுக் குழந்தையைத் தன்தண்டிகையிலேவைத்துக்கொண்டு ஆழ்வான் திருமாளிகைவாசலிலே சென்றவாறே பொன்னாய்ச்சியார்வாரியெடுத்துக்கொண்டு ஆண்டாள்கையிலே கொடுத்து ஸ்ரீபாததீர்த்தத்தைத் தெளித்துக் கண்ணெச்சில்படாதபடி ரக்ஷையிட்டாள். பட்டர் உபநயநமானபின்பு வேதமோதும்போது உபாத்யாயர் ஸந்தையிடாநிற்க, பட்டர் ஒருநாள் ஒருக்கால்சந்தைசொல்லிக்கொண்டு மற்றைநாள் உபாத்தியன்டைக்குப்போக, அவரும்நேற்றயதினம் ஸந்தையிட்டதை யன்றைக்கும் ஸந்தையிட, பட்டர் அத்தைக்கேட்டு ஓதினத்தையோதுகிறார்களென்று வந்துவிட்டு விளையாடிக்கொண்டுவர, ஆண்டாளும் ஆழ்வானுங்கண்டு பிள்ளாய் ஏன் ஓதவதைவிட்டு விளையாடுகிறாய்? என்ன, அவர்க ளோதினத்தையே யோதுகிறார்கள் ஆகையாலே விட்டுவந்தேனென்ன, ஆகில் நேற்றோதினத்தைச் சொல்லா யென்ன, பட்டர் அத்தை யொன்றுதப்பாமல்சொல்ல, ஆழ்வானு மாண்டாளுங் கேட்டு பயப்பட்டு இனி ஓதவிடவொண்ணாதென்று சங்கித்திருந்தார்கள். பின்பு பட்டருக்கு விவாஹகாலம் வந்தவாறே கன்னிகை இசையாதிருக்க, பெரியபெருமாள் கன்னிகையுடையவர்கள் ஸ்வப்நத்திலே யெழுந்தருளி பட்டருக்கு கன்னிகையைக்கொண்டு கொடுத்து பெருக்கக் கல்லியாணஞ் செய்யுங்கோளென்று நியமித்தருள, அவர்களும் மற்றைநாள் அப்படியே கல்லியாணஞ் செய்துக்கொடுத்தார்கள். இன்னும் பட்டர் வைபவம் மேலே யெழுதப்படுகிறது,

பின்பொருநாள் உடையவர் முதலிகளைப்பார்த்து நம் முதலியாண்டானை யொழிய ஸர்வஸங்கபரித்யாகம் பண்ணினோமென் றருளிச்செய்ய,

முதலிகள் அப்படி யருளிச்செய்யலாமோவென்று கேழ்க்க, நங்கையில் முக்கோலைவிடி லன்றோ நம்முதலியாண்டானை விடுவதென்று அருளிச் செய்தார். இப்படி முதலியாண்டான் ஆழ்வான் மற்றுமுண்டான முதலிகளுக்கு உடையவர் ஸ்ரீபாஷ்யம் வ்யாக்யானித்துக்கொண்டு ஸுகமாக வெழுந்தருளியிருக்கிற காலத்திலே சோழராஜா சிவபாரம்யத்திற்குக்கையெழுத்துஇடச்சொல்லி பாஷ்யகாரரை நெருக்கநினைக்க, பாஷ்யகாரரும்ஒருகாரணத்தினாலே அவனை நிராகரியாமல் அவ்விடத்தைவிட்டுப் போவதாக நினைத்துப் பெரிய பெருமாளுடனே விண்ணப்பஞ்செய்து ஆழ்வானுடைய வெள்ளை வஸ்திரத்தை தரித்துக்கொண்டு முதலியாண்டான் முதலான முதலிகளுடனே புறப்பட்டு மேற்கே யெழுந்தருளும்போது ராஜாவின் சேவகர் பின்றுடர, முதலிகளையிட்டு மணலைத்தூவி, சேவகரை வரவொட்டாமல் தடுத்து மேற்கே யெழுந்தருளி நல்லானுடைய சிஷ்யரான வேடக்குடியிலே புக்கு அங்கு நாலுநாளிருந்து காஷாயவஸ்த்ரம் முதலானதை ஸம்பாதித்துக்கொண்டு வன்னிபுஷ்கரணி யென்கிற க்ராமத்திற் கெழுந்தருளி சிறிதுகாலமிருந்து அங்குநின்றும் புறப்பட்டு மிதிலைசாலிக் கிருமத்திற் கெழுந்தருளி அங்கிருக்கிற விரோதிகளை முதலியாண்டானுடைய ஸ்ரீபாததீர்த்த வைபவத்தாலே திருத்தி சிஷ்யனாக்கிக்கொண்டு சிங்கிரிகோயிலிலே சிறிது நாளிருந்து விஷ்ணுவைஷ்ணவ விரோதியான சோழன்க்ரிமிகண்டனாய் நசிக்கும்படி மந்த்ரவாதம்பண்ணித் தொண்டனூருக்கெழுந்தருளி அந்த தேசத்திற் கதிபதியான விட்டலதேவராஜன் மகளைப்பிடித்திருந்த பிசாசத்தைத் தொண்டனூர்நம்பி முகமாக ராஜக்ருஹத்திற் கெழுந்தருளி ஸ்ரீபாததீர்த்தத்தை யவன்மகள்தலையிலேதெளித்து உச்சாடனம்பண்ணிவித்து விட்டலதேவராஜனை சிஷ்யனாக்கி அங்கே எதிரிட்டகூபணரைத் திரைக்குள்ளேயிருந்து திருவநந்தாழ்வானாய் ஆயிரம் பணாமுகத்தாலே ஒருத்தருக்குப் பதிலாயிரம்முகமாகவுத்தரஞ்சொல்லி ஜயித்து அவர்களிலே அனுகூலித்தார் சிலரைச் சிஷ்யராக்கிக்கொண்டு விட்டலதேவராஜனுயிருந்த விஷ்ணுவர்த்தனராயன் மிகவுமுபசரிக்கவெழுந்தருளியிருந்து தொண்டனூரிலே நம்பியபிமானித்திருக்கிற வெமபெருமானுக்கு நம்பிதம்பிரானென்று திருநாமஞ்சாற்றிச் சிங்கிரிகோயிலிலே ஸ்ரீபாஷ்யம் வ்யாக்யானித்துக்கொண்டிருக்க, கையில் திருமண்சிலவழிந்துபோனபடியாலே சிந்தித்துக்கொண்டு கண்வளர வன்றிராத்திரி திருநாராயணபுரப் பெருமாள், பாஷ்யகாரர் ஸ்வப்நத்திலே வந்து ஸமீபத்திலே யதுகிரியிலேயும்முடைய வரவுபார்த்துக்கொண் டிருக்கிறோம்; உமக்கிஷ்டமான திருமண்காப்பு மங்கேயுண்டு; வருக வாரீரென்றருளிச்செய்ய, இவரும் வெடிவு காலத்திலே விஷ்ணுவர்த்தநராயனை யழைப்பித்து அவனையிட்டுக் காடு வெட்டிவித்து பகுதான்ய ஸம்வத்ஸரத்திலே தைமாசத்திலேயதுகிரியேறி, திரும்பவும் ஸ்வப்னங்கண்டபடியே திருத்துழாய் மரத்தின்கீழே புற்றிலேயிருந்த திருநாராயணப்பெருமாளை சகவர்ஷம் ஆயிரத்திற்குமேல் பனிரெண்டுசென்ற பகுதான்ய வருஷத்தில் தைமாசத்திலே சுக்லபக்ஷத்

திலே சதுர்த்தசி வ்யாழக்கிழமை கூடின புனர்வசு நக்ஷத்ரத்தில் ஜீர்ணோத்தாரணம் பண்ணியருளி பாலாலே திருமஞ்சனஞ் செய்தருளித் தந் திருக்கையாலே மூன்றுநாள் திருவாராதனஞ் செய்தருளி "ஒருநாயகமாய்" என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்துத் திருக்கல்யாணி வடமேற்கு மூலையிலே த்ரிதண்டத்தினாலேகீறி திருமண்கூவையைக் கண்டுகொண்டு யதுகிரியிலே ஊருங்கோவிலுங் கட்டுவைத்துத் திருநாராயணப் பெருமாளுக்குப் பாஞ்சராத்ர ஸாத்வதஸம்ஹிதையாலே ஸம்ப்ரோக்ஷணம் பண்ணிவைத்து உத்ஸவபேரமில்லையென்று சிந்தித்திருக்க, திருநாராயணன் இவர் ஸ்வப்நத்திலேவந்து நம்முத்ஸவபேரமான ராமப்ரியர் டில்லியிலேயிருக்கிறார் அங்கே போய்க்கொண்டுவாருமென்று நியமிக்க, பாஷ்யகாரரும் டில்லிக்கெழுந்தருளி டில்லிராஜன் மகள் படுக்கை வீட்டிலேசெல்ல, ராமப்ரியருங் கிங்கிணி சதங்கை யோசையுடன் எல்லாருங்காணும்படியோடிவந்து உடையவர் மடியிலேயிருக்க, உடையவரும் ஆனந்தத்துடனே யணைத்துக்கொண்டு என்செல்வப்பிள்ளையோவென்று சொல்லுகையாலே ராமப்ரியருக்கு செல்வப்பிள்ளையென்று திருநாமமுமுண்டாய்த்து.

பின்பு பாஷ்யகாரர் செல்வப்பிள்ளையை யதுகிரியிலே ப்ரதிஷ்டை பண்ணி யங்கே யதிராஜமடங் கட்டுவைத்து ஐம்பத்திருவருக்கு ஊழியங் கற்பித்து ஊருக்குத்திருநாராயணபுரமென்று திருநாமஞ்சாற்றினார் இப்படி யதிராஜர் ஜீர்ணோத்தாரணம் பண்ணியபடியாலே அதற்கு யதுகிரியென்று திருநாமமுமுண்டாய்த்து.

இப்படி பனிரெண்டுவருஷம் மேனாட்டிலெழுந்தருளியிருந்து இவ்விடத்தில் ஆழ்வான்முதலானோர் சேதியைக்கேட்டுக், கோயிலுக்கெழுந்தருளுவதாகநினைத்துத் திருநாரயணப்பெருமாளை யநுமதிகொண்டு ஐம்பத்திருவருக்குத் தம்முடையவர்ச்சாரூபத்தை யெழுவித்துக்கொடுத்து ஊழியகைங்கர்யங்களைக் கட்டளைப்படுத்தி அங்குநின்றும் புறப்பட்டு கோயிலுக்கெழுந்தருளி நம்பெருமாளையும்சேவித்து ஆழ்வானையுங்கடாக்ஷித்து அவரையிட்டு வரதராஜஸ்தவத்தைச்செய்வித்துத் தில்லைநகர்திருச்சித்திரகூடத்தெம்பெருமானைத் திருப்பதியிலே ப்ரதிஷ்டைபண்ணியருளித் திருவேங்கடமுடையானைசேவித்து அங்குநின்றும்புறப்பட்டுகோயிலுக் கெழுந்தருளிவியாக்யாசித்துக்கொண்டிருந்துநாச்சியார்திருமொழிப்ரஸ்தாவத்திலே அழகர்திருமலைக்கெழுந்தருளி நாச்சியார்சொல்லியிருந்தபடி நூறுகுடம் அக்காரவடிசில் அமுதுசெய்வித்து ஸ்ரீவில்லிபுத்தூருக் கெழுந்தருளி கோதையாலே நங்கோயிலண்ணனென்று திருநாமம்பெற்று திருநகரிக்கெழுந்தருளி யாழ்வாரை சேவித்து மீண்டு கோயிலுக்கெழுந்தருளி நம்பெருமாளை சேவித்து ஸ்ரீபாஷ்யம் வ்யக்யானித்துக்கொண்டெழுந்தருளி யிருக்கச்செய்தே ஒருநாள் பட்டருடைய உபந்யாஸ வைபவத்தைக்கேட்டருளி யுகந்து பட்டருக்கு வேதாந்தாசாரியபதம் கொடுத்தருளினார். அன்றுமுதல் பட்ட

ருக்கு வேதாந்தாசார்ய ரென்றும் திருநாமமுண்டாய்த்து. ஒருக்கால் திருவத்யயனோத்ஸவத்திற்காக நம்மாழ்வார் திருநகரியில்நின்றும் கோயிலுக்கெழுந்தருளச்செய்தே வழியிலே கள்ளர்வந்து விழுந்து உபத்திரவம் பண்ணினபடியினாலே ஆழ்வாருடைய திருவடிநிலையான மதுரகவிகள் கைதப்பிப்போச்சுது. ஆழ்வார்மாத்திரம் தங்கி திருநகரிக் கெழுந்தருளிவிட்டார். உடையவர் இந்த சேதியைக்கேட்டு திருநகரிக்கெழுந்தருளி ஆழ்வார் திருவடிநிலையான ராமாநுஜனைப் பண்ணிவித்து இன்று முதல் ஆழ்வார் திருநகரியைவிட்டுப் புறப்படவேண்டாவென்றுநியமித்துக்கோயிலுக்கெழுந்தருளி, நம்மாழ்வார் விக்ரஹத்தை யேறியருளப்பண்ணிவித்துத் திருவத்யயனோத்ஸவத்தை நடத்தியருளினார். முன்னாலே திருமங்கையாழ்வாரைப் பண்ணிவித் திருகையாலே திருமங்கையாழ்வா ரொழிந்த மற்றையாழ்வார் விக்ரஹங்களையும் ஏறியருளப்பண்ணிவைத்தார்.

இப்படி பாஷ்யகாரர்வைபவங்கள் அநந்தமுண்டு. இப்படிப்பட்ட பாஷியகாரர் திருவடிகளிலே ஆஶ்ரயித்தவர்கள்; கூரத்தாழ்வான், மாடப்பூசையாழ்வான், சேட்டலூர்சிரியாழ்வான், அனந்தாழ்வான், நடாதூராழ்வான், எங்களாழ்வான் அரணைப்புறத்தாழ்வான், நெய்யுண்டாழ்வான், உக்கலாழ்வான், கோமடத்தாழ்வான், வேதாந்தியாழ்வான், திருக்கோவலூராழ்வான், திருமோகூராழ்வான், நடுவிலாழ்வான், பிள்ளையாழ்வான், மிளகாழ்வான், காராஞ்சியாழ்வான், ஈயுண்ணியாழ்வான், கோயிலாழ்வான், அகளங்கநாட்டாழ்வான், முதலியாண்டான், பெரியாண்டான் சிறியாண்டான், ஈயுண்ணிப்பிள்ளையாண்டான், அம்மங்கியாண்டான் மாருதிப்பெரியாண்டான், மாறொன்றில்லாமாருதியாண்டான், சோமாசியாண்டான், குஞ்சிப்பூர் சிறியாண்டான், ஆளவந்தாராண்டான், ஆய்யராண்டான், டொம்பியாச்சான், அருளாளப்பெருமா னெம்பெருமானார், ஆச்சி எச்சான், சிறியாச்சான், கணியனூர்சிறியாச்சான், கொங்கிலாச்சான், ஈச்சம்பாடியாச்சான், பொன்னாச்சான், அய்யாபிள்ளையாச்சான் தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி மழலூர்நம்பி, சொட்டைநம்பி, குரவிநம்பி, திருக்குருங்குடிநம்பி வங்கிப்புரத்துநம்பி, மும்பைநம்பி, ஸ்ரீபராங்குசநம்பி, ஸ்ரீவில்லிபுத்தூர்நம்பி திருக்குருகூர்நம்பி, ஸ்ரீபராங்குசபட்டர், ஸ்ரீவேதவ்யாஸபட்டர், செருப்பள்ளிதேவராஜபட்டர், கோவிந்தபட்டர், திருவரங்கபட்டர், நம்பியூரில் ஸ்ரீரங்கராஜபட்டர், உள்ளூரில்பெரியபெருமாள்பட்டர், வரந்தரும் பெரியபெருமாள்பட்டர், அழகியமணவாளபட்டர், சட்டம்பள்ளிஜீயர், ஈச்சம்பாடிஜீயர், குலசேகரஜீயர், ஸ்ரீகோவிந்தராஜஜீயர், திருவெள்ளறைஜீயர், ஆள்கொண்டவில்லிஜீயர், திருமழிசைஜீயர், திருநாராயணபுரஜீயர், ஸ்ரீசாளக்கிராமஜீயர், திருப்புட்குழிஜீயர், திருமாலிருஞ்சோலைஜீயர், திருநாராயணபுரத்தையர், திருவரங்கமாளிகையையர், திருவாய்மொழியையர், பெருமாளையர், பிள்ளைதிருநறையூரையர், திருக்குருங்குடியையர், திருநகரியையர், திருக்கண்ணபுரத்தையர்,

திருமாலிருஞ்சோலையனையர். திருவனந்தபுரத்தனையர். ராஜமஹேந்திரப் பெருமாளனையர். ராஜநாராயணப்பெருமாளனையர். திருவரங்கமாளிகையனையர். பிள்ளைவிழுப்புத்தூரனையர். ஆள்கொண்டார். அம்மங்கியம்மாள். முடும்பையம்மாள். பருத்திக்கொல்லையம்மாள் உக்கலம்மாள். சொட்டையம்மாள். ஆசூரிப்பெருமாள். கிடாம்பிப்பெருமாள். அம்மங்கிப்பெருமாள். முனிப்பெருமாள். பட்டினிப்பெருமாள். திருமலைநல்லான். எம்பார். காராஞ்சிஸோமயாஜியார். பெரியகோயில்வெள்ளையார். அலங்காரவேங்கடவர். திருக்குறுகைப்பிரான்பிள்ளான். ஆர்க்காட்டுப்பிள்ளான். இராமாநுஜப்பிள்ளான். திருநகரிப்பிள்ளான். சோமடத்தையன். வைத்தமாநிதி. சிரியய்யர். பெரியய்யர். அணியரங்கத்தமுதனார். திருவரங்கத்தமுதனார். குமாண்டூர் இளையவில்லி. குமாண்டூரில்பிள்ளை. நம்பிசருந்தேவர். (ஐம்பத்திருவர்.) எம்பெருமானார்செல்வப்பிள்ளை.

சாத்தாதமுதலிகள்:- ஸ்ரீகுலசேகரப்பெருமாள்தாஸர். பட்டர்பிரான்தாஸர். பகைவில்லிதாஸர். ஸ்ரீவில்லிபுத்தூர்தாஸர். ஸ்ரீநாராயணதாஸர். ஸ்ரீகோவர்த்தனதாஸர். திருவழுதிவளநாடுதாஸர். ஸ்ரீராமாநுஜதாஸர். பிள்ளையரங்காவில்லிதாஸர். வண்டர். சொண்டர். இராமாநுஜவேளைக்காரர். மழலைக்கூத்தமுதலிகள்:-மூவர். திருநாமம்:-யதிவரசூடாமணிதாசர். யதிசேகரதாஸர். யதிராஜதாஸர். பாண்டியனாட்டில் முதலிகள்:—மூவர். திருநாமம்:-மகிழலங்காரதாஸர். சடகோபதாஸர். வானமாமலைதாஸர். கொங்கில்முதலிகள் மூவர் திருநாமம்:-அழகியமணவாளதாஸர். திருவேங்கடதாஸர். பேரருளாளதாஸர். ஸ்தானத்தாரில் சேனைதப்ரம்மராயர். வீரசுந்தரப்ரம்மராயர். ஜகந்நாதப்ரம்மராயர். வீரராகவப்ரம்மராயர். பிள்ளைதேவராஜர். பிள்ளையுரந்தையுடையார். திருமஞ்சனமெடுக்கும் தூயமுனிவேழம். ஸ்ரீபண்டாரம்நோக்கும் திருவரங்கமாளிகையார். ஆண்டவர் அரியவர். ஆ கருசு.

அம்மையாரில்-திருவநந்தபுரத்தம்மை. திருவாட்டாற்றம்மை. திருவண்பரிசாரத்தம்மை. மன்னார்கோயில்போரேற்றம்மை. திருநறையூரம்மை. திருக்கண்ணபுரத்தம்மை. திருப்பதி ஸ்ரீகாரியஞ்செய்யுமம்மை. ஆண்டாளம்மை நாயகத்தேவியார். உய்யபெருந்தேவியார். பெரியபெருந்தேவியார். சிறியபெருந்தேவியார். ஸ்ரீபெரும்பூதூர் திருவரங்கம். திருக்குடந்தையில் தூயவாயிரம். கொங்கில்பெரியபிராட்டியார். அத்துழாய். அம்மங்கி. கூரத்தாண்டாள். தேவகிப்பிராட்டியார். யதிராஜவல்லியார். (உ௰) பங்கயச்செல்வியார். பொன்னாச்சியார். இன்னிளவஞ்சியார். சூடிக்கொடுத்தாள். திருப்பாவைபாடினாள். (௫) உடையவர் திருவடிகளை யாஸ்ரயித்தமுதலிகளில் எழுபத்துநாலுஸிம்ஹாசநாதிபதிகள்:-ஆளவந்தார்குமாரர். சொட்டைநம்பி. அவர்குமாரர்-எச்சான். அவர்குமாரர்பிள்ளையப்பன். க. பெரியநம்பிகுமாரர்-புண்டரீகதாஸர். உ. திருக்கோட்டியூர்நம்பிகுமாரர்-தெக்காழ்வான். ௩. திரு

மாலையாண்டான்குமாரர்-சுந்தரத்தோளிளையான். ௪. திருமலைநம்பிகுமாரர்களில் ராமானுஜப்பிள்ளையுந் திருமலைநம்பியும். ௫. கூரத்தாழ்வான் குமாரர் பட்டரும் சிராமப்பிள்ளையும். ௬. முதலியாண்டான் அவர்குமாரர் கந்தாடையாண்டான். ௭. நடுவிலாழ்வான். ௮. கோமடத்தாழ்வான். ௯. திருக்கோவலூராழ்வான். ௰. திருமோகூராழ்வான். ௧௧. பிள்ளைப்பிள்ளையாழ்வான். ௧௨. நடாதூராழ்வான். ௧௩. எங்களாழ்வான். ௧௪. அநந்தாழ்வான். ௧௫. மிளகாழ்வான். ௧௬. செய்யுண்டாழ்வான். ௧௭. சேட்டலூர் சிறியாழ்வான். ௧௮. வேதாந்தியாழ்வான். ௧௯ கோயிலாழ்வான். ௨௰. உக்கலாழ்வான். ௨௧. அரணபுரத்தாழ்வான். ௨௨. எம்பார். ௨௩. கிடாம்பியாச்சான் ௨௪. கணியனூர்சிறியாச்சான். ௨௫. கொங்கிலாச்சான். ௨௬. ஈச்சம்பாடியாச்சான். ௨௭. திருமலைநல்லான். ௨௮ சட்டம்பள்ளி ஜீயர். ௨௯. ஈச்சம்பாடி ஜீயர். ௩௰. திருவெள்ளறை ஜீயர். ௩௧ ஆள்கொண்டவில்லி ஜீயர் ௩௨. திருநகரிப்பிள்ளை. ௩௩. காராஞ்சிஸோமயாஜியார். ௩௪. அலங்காரவெங்கடவர். ௩௫. நம்பிகருந்தேவர். ௩௬. செருப்பள்ளிதேவராஜபட்டர். ௩௭. பிள்ளையுரந்தையுடையார். ௩௮. திருக்குருகைப்பிரான்பிள்ளான் ௩௯ பெரியகோயில்வெள்ளலார். ௪௰. திருக்கண்ணபுரத்தெச்சான். ௪௧. ஆசூரிப்பெருமாள். ௪௨. முனிப்பெருமாள். ௪௩ அம்மங்கிப்பெருமாள். ௪௪. மாருதிப்பெரியாண்டான். ௪௫ மாறொன்றில்லாமாருதியாண்டான். ௪௬. ஸோமயாஜியாண்டான். ௪௭. ஜீயராண்டான். ௪௮. ஈசாண்டான். ௪௯. ஈயுண்ணிப்பிள்ளையாண்டான். ௫௰. பெரியாண்டான். ௫௧. சிறியாண்டான். ௫௨. குஞ்சிப்பூர்சிறியாண்டான். ௫௩ அம்மங்கியாண்டான். ௫௪. ஆளவந்தாராண்டான். ௫௫ அருளாளப்பெருமாள் எம்பெருமானார் ௫௬. தொண்டனூர்நம்பி. ௫௭. மருதூர்நம்பி ௫௮. மழலூர்நம்பி. ௫௯. திருக்குருங்குடிநம்பி. ௬௦. குரவிநம்பி. ௬௧. முடும்பைநம்பி. ௬௨. வடுகநம்பி. ௬௩. வங்கிப்புரத்துநம்பி. ௬௪. ஸ்ரீபராங்குசநம்பி ௬௫. அம்மங்கியம்மாள். ௬௬. பருத்திக்கொல்லையம்மாள். ௬௭ உக்கலம்மாள் ௬௮. சொட்டையம்மாள். ௬௯ முடும்பையம்மாள். ௭௦. குமாண்டூர்பிள்ளை. ௭௧. குமாண்டூர் இளைவில்லி, ௭௨. கிடாம்பிப்பெருமாள். ௭௩. ஆர்க்காட்டுப்பிள்ளை. ௭௪. "రామానుజార్యాచ్ఛ్రుతిమౌళిభాష్య మర్థంరహస్యంద్రమిడశ్రుతేశ్చ సంప్రాప్యతేనైవగురూకృతాంస్తాన్ భజేచతుస్సప్తతిపీఠసంస్థాన్" என்றெல்லாரும் ஸ்ரீபாஷ்யப்ரவர்த்தகராயிருப்பர்.

(இவ்வளவே வினவாக இந்த எழுபத்திநாலுபேரிலே எழுபத்துமூவர் உடையவருக்குமுன்னே பாஷ்யஞ்செய்தவர்களென்றும் எழுபத்திரண்டாவர்தாமென்றும் எழுதிவைத்தது மிகவும் பொய்யென்று கொள்ளவேண்டியது.) இன்னும் பதினோராயிரம் உபவீததாரிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள், பன்னீராயிரம் திருநாமம் உபவீதமில்லாத ஸ்ரீவைஷ்ணவர்கள். எழுநூறு திருநாமம் உத்தமாச்ரமிகள். எழுநூறுதிருநாமம் அம்மையார்கள். இன்னுமிப்படி அநேக திருநாமங்களுமுண்டு.

இவர்கள் உடையவர் திருவடிகளிலேசெய்யும் அடிமைகள்வகை. கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் நடாதூராழ்வானும் பட்டவர்சகமும், ஸ்ரீபாஷ்யத்திற்கு உசாத்துணையாயிருப்பார்கள். அருளாளப் பெருமாளெம்பெருமானார் போருளாளருக்கு திருவாராதநம் பண்ணிக்கொண்டிருப்பர், கிடாம்பிப்பெருமாளும் கிடாம்பியாச்சானும் திருமடைப்பள்ளிக்குக் கடவராயிருப்பார்கள்.

வடுகநம்பி என்னைக்காப்பு சாத்தியருளுவர். கோமடத்துச்சிறியாழ்வான் கலசப்பானையையும் ஸ்ரீபாதரக்ஷையையுமெடுப்பர், பிள்ளையுறங்காவில்லிதாஸர் குருகூலம்நோக்குவர். அம்மங்கி, பாலமுதுகாய்ச்சுவர். உக்கலாழ்வான் ப்ரஸாதக்கலமெடுப்பர். உக்கலம்மாள், திருவாலவட்டம் பணியாருவர். மாறுதிப்பெரியாண்டான், திருக்கைச்சொம்புபிடிப்பர் மாறொன்றில்லாமாறுதிச் சிறியாண்டான், மடத்திற்கு அமுதுபடி சாற்றமுது பாலமுது நெய்யமுது முதலானவை நடத்திப்போருவர், தூயமுனிவேழம் திருமஞ்சநமெடுப்பர் திருவரங்கமாளிகையார் ஸ்ரீபண்டாரம்நோக்குவர், வண்டரும், சொண்டரும் கைக்காயிரம்பொன்னுக்கு ராஜஸேவைபண்ணி மடத்திற்குத் திருச்செவழுக்காக்கியருளுவர். ராமாநுஜவேளைக்காரர் திருமேனிக்காவலாய்ப் போருவர். அகளங்கநாட்டாழ்வான் ப்ரதிபக்ஷநிரஸநம்பண்ணிப்போருவர், அனந்தாழ்வான் உடையவர்நியமனப்படி திருமலையிலே திருநந்தவன கைங்கர்யம் செய்துகொண்டிருப்பர்,

பின்பொருநாள் முதலிகளெல்லாரும் பாஷ்யகாரர் புத்திரரான திருக்குருகைப்பிரான் பிள்ளானையனுவர்த்தித்து ஆழ்வார்களருளிச்செயல்களில் வரும்பொருள்கள் தெறியும்படி வ்யாக்யாநஞ் செய்தருளவேணுமென்று உடையவரை வேண்டிக்கொள்ள வேணுமென்று பிள்ளானுக்கு விண்ணப்பஞ்செய்ய, பிள்ளானும் உடையவர் திருவோலக்கத்திலே யெழுந்தருளியிருக்கச்செய்தே தண்டம்ஸமர்ப்பித்து உடையவருக்கு இத்தை விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் திருவுள்ளத்திலே விசாரித்தருளி நாமே வ்யாக்யாநம்பண்ணினால் மந்தமதிகளுக்கு இதற்கு இவ்வளவே அர்த்தமுள்ளதென்று தோற்றுமாகில் நாமொரு வரம்புகட்டினதாமாகையாலே அபசாரமாம். ஆகையாலே நீரொருபடி திருவாய்மொழிக்கு வ்யாக்யாநம்பண்ணுமென்று நியமிக்க, திருக்குருகைப்பிரான்பிள்ளானும் யதிராஜ ரநுமதி கொண்டு திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி யுரைத்தருளினார். பின்பு சிறிதுநாளிலே ஆழ்வான் திருநாட்டிற் கெழுந்தருளினார். உடையவரும் மிகவுங் க்லேசித்து பட்டரையுஞ் சீராமப்பிள்ளையையுங் கொண்டு ஆழ்வானுக்கு சரமகைங்கரியம் நடத்தியருளி பட்டரைக் கையைப்பிடித்துக் கொண்டுபோய் பெரியபெருமாள் திருவடிகளைக் காட்டிக்கொடுக்க, பெருமாளுந் திரும்பவும் பட்டரை மஞ்சள்நீருகுப்பித்து புத்ரஸ்வீகாரம்பண்ணியருளி பட்டரைப்பார்த்து நம்மையாழ்வானாக நினைத்திருமென்றருளிச் செய்தார்.

பின்பு சிலநாளிலே முதலியாண்டான் குமாரரான கந்தாடையாண்டான் பாஷ்யகாரரை மிகவுமுகப்பித்து தேவரீரவதரித்தருளின ஸ்ரீபெரும் பூதூரிலே யெல்லாக்காலத்திலும் யெல்லாருக்கும் சேவிக்கும்படி தேவரீருடைய வர்ச்சாவிக்ரஹ மேறியருளப்பண்ணவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, பாஷியகாரரும் அதற்கனுமதிபண்ணியருள, கந்தாடையாண்டானும் அப்பொழுதே அனுகூலனான ஸ்தபதியை யழைப்பித்து உடையவருடைய திருமேனியை சேவிக்கப்பண்ணி அப்போதிருந்த வார்த்திக்ய வடிவை நன்றாக ஒருவிக்ரஹமாக வெழுந்தருளப்பண்ணி உடையவா ஸன்னிதியிலே கொண்டுவந்துவைக்க, உடையவருங் கடாக்ஷித்து மிகவுமுகந்தருளி அந்தவிக்ரஹத்தை யாலிங்கனம்பண்ணி தம்முடைய ஸகலசக்தியையு மதிலேவைத்து புஷ்யமாஸத்தில் குருபுஷ்யத்திலே ப்ரதிஷ்டைபண்ணுவதாக நாளிட்டுத் திருமுகத்தைக்கொடுத்தருள ஆண்டானும் அத்தைப்பெற்று ஆதரத்துடனே அந்தவிக்ரஹத்தை ஸ்ரீபெரும் பூதூருக் கெழுந்தருளப் பண்ணிவித்துக்கொண்டுவந்து மூலவிக்ரஹத்தையு மேறியருளப்பண்ணிவித்து திருமுகப்படியே குருபுஷ்யத்திலே ப்ரதிஷ்டைபண்ணினபோது, அந்ததினத்திலே கோயிலிலே உடையவர் திருமேனியிலே மிகவுந்தளர்த்தியுண்டாக உடையவருமிதேதென்று நினைத்துப்பார்த்தவிடத்தில் கந்தாடையாண்டானுக்குத் திருமுகமிட்டுக் கொடுத்தநாள் அந்நாளாயிருக்கையாலே மிகவும் ஆச்சர்யப்பட்டு ஆண்டானுக்குக் கடுகக் கோயிலுக்கு வருவதென்று திருமுகம் அனுப்பியருள, கந்தாடையாண்டானும் அத்தைக்கண்டு கடுகக்கோயிலுக்கெழுந்தருளி உடையவரைஸேவித்துக்கொண்டிருந்தார். இப்படி பாஷ்யகாரர் அதிமாநுஷ சரிதங்களைச் செய்துகொண்டு நூற்றிருபது திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்தார். இப்படி அவதரித்தருளின காரியந் தலைக்கட்டினவாறே உடையவருக்குப் பரமபதத்திலே திருவுள்ளஞ்சென்று முதலிகளெல்லாரையு மழைத்து பட்டரைக்காட்டிக்கொடுத்து இவரை நம்மைப்போலே பார்த்துக்கொள்ளுங்கோளென்று நியமித்து பட்டரைப் பெரியபெருமாள் ஸன்னிதிக்குக் கூட்டிக்கொண்டுபோய் முன்னாக பட்டருக்குத் தீர்த்தப்பிரஸாதங்களைப் பிரஸாதிப்பித்து பின்பு தாமுந் தீர்த்தப்ரஸாத ஸ்வீகாரஞ்செய்து பட்டரைப்பார்த்து மேல்நாட்டிலே வேதாந்தியென்றொரு பெரியவித்வானிருக்கிறான் என்று கேட்டோம்; நீரங்கே போய் அவனைத் திருத்தி தர்சநப்ரவார்த்தகராக்கு மென்றருளிச்செய்து, பட்டரைக் கூட்டிக்கொண்டு மடத்திற்கெழுந்தருளி, முதலிகளெல்லாரையும் பார்த்து அருளிச்செய்தபடி:—இங்கிருக்குநாள் பண்ணுங் கைங்கரியமாறுண்டு. அதாவது ஸ்ரீபாஷ்யத்தை வாசித்தும் வாசிப்பித்தும் போருவது (௧). திவ்யப்ரபந்தங்களையோதியு மோதிவித்தும் போருவது (௨). திவ்யதேசங்களிலே அமுதுபடிசாத்துப்படி முதலானவை நடத்திப்போருவது (௩). திருநாராயணபுரத்திலே ஒரு குடிசையாகிலுங் கட்டிக்கொண்டிருப்பது (௪). த்வயத்தை அர்த்தத்துடனே யநுஸந்தித்துப்

பொருவது (௫). ஒருபாகவதன் அபிமானத்திலே ஒதுங்கியிருப்பது (௬). இப்படி ஆறுகைங்கரியங்களிலே கிடைத்தபடிசெய்துகொண்டு மூன்றப சாரமுங் கிட்டாதபடி யிருங்கோளென்று நியமித்தருளி, நடாதூராழ்வானைக் கடாக்ஷித்தருளி அவருக்கு ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸநத்தைக் கொடுத்தருளி ப்ரபத்திபரராய், முக்ய ப்ரமாணமான ஆழ்வார்களுடைய ஸ்ரீ ஸூக்தி ஸிம்ஹாஸனத்தை பட்டருக்குக் கொடுத்தருளி, கந்தாடையாண்டானுக்குத் தஞ்சரமகைங்கரியத்தையும், தம்மைத் திருப்பள்ளிபடுக்குமிடத்திலே அர்ச்சா விக்ரஹத்தையேறியருளப்பண்ணும்படியையுமநியமித்துத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலானமுதலிகளைப்பார்த்து பட்டருக்கு இஷ்டமாக விருங்கோளென் றருளிச்செய்து, கோயில் ஸ்தாநஸமயத்திலுண்டானவர்களை யழைத்தருளி பட்டர்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி, இன்னுமிப்படி யனேகஞ் சொல்லவேண்டுவதெல்லாஞ் சொல்லியருளி, எழுபத்திரண்டு ஸிம்ஹாஸநாதிபதிகளைப் பார்த்தருளி, ஸ்ரீபாஷ்யம் வாசித்தும் வாசிப்பித்தும், திருவாய்மொழி வ்யாக்யாநம் வாசித்தும் வாசிப்பித்தும் போருங்கோளென்று நியமித்தருளி விசேஷித்து நடாதூராழ்வானுக்கு ஸ்ரீபாஷ்யப்ரவர்த்தனமும் பட்டருக்கு ஸ்ரீஸூக்திப்ரவர்த்தனமும் நியமித்து பெரியபெருமாளுடைய தீர்த்த ப்ரஸாதங்களை ஸ்வீகரித்து ஆளவந்தார் திருவடிகளை த்யானித்துக்கொண்டு சகவர்ஷம் ஆயிரத்தொன்பதாவதிலே பிங்களவர்ஷம் மாசமாஸத்திலே சுக்லபக்ஷதசமி திருவாதிரையில் மத்தியானத்தில் (ஸ்ரீசேஷாவதாரமானபாஷ்யகாரர்) சேஷனுடனே சேர்ந்தருளினார். (பரமபதத்திற் கெழுந்தருளினார்) பின்பு பட்டர் கந்தாடையாண்டான்முதலான முதலிகளெல்லாரும் மிகவும் க்லேசித்துத் தெளிந்து பெரியபெருமாள் நியமனத்தினாலே ஆவரணத்திற்குள்ளே திருப்பள்ளி படுத்துச் சரமகைங்கர்யம் செய்தார்கள். பெரியபெருமாளும் நாச்சிமாருடனே திருமஞ்ஜனங் கண்டருளி சுருளமுதுந் தவிர்ந்தருளினார். பின்பு கந்தாடையாண்டான் நம்பெருமாள் நியமனத்துடனே திருப்பள்ளிபடுத்தவிடத்திலே எம்பெருமானாருடைய அர்ச்சாவதாரத்திருமேனியை யேறியருளப்பண்ணி ப்ரதிஷ்டைசெய்தருளினார். முற்காலத்திலே நம்மாழ்வார் நாதமுனிகளுக்கு உடையவருடைய பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைக் கொடுத்தருள, அந்த விக்ரஹம் உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி ஆளவந்தார் திருக்கோட்டியூர் நம்பி அவர் குமாரத்தி அத்துழாயம்மன் இவர்களிடங்களிலே இருந்தது. பின்பு அத்துழாயம்மனை யநுவர்த்தித்துக் கிடாம்பியாச்சான் அந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைப் பெற்றிருந்தார். ஆகநம்மாழ்வார் நாதமுனிகளுக்காக எறி யருளப்பண்ணின விக்ரஹம். (௧) உடையவர்தாமே திருநாராயணபுரத்திலே ஐம்பத்திருவருக்காக எறியருளப்பண்ணின விக்ரஹம். (௧) கந்தாடையாண்டான் ஸ்ரீபெரும்பூதூரிலே ப்ரதிஷ்டைபண்ணின உடையவர் ஆலிங்கன விக்ரஹம் (௧) பின்பு கந்தாடையாண்டான் முன்பு உடையவர் நியமனத்தினாலும் பின்பு நம்பெருமாள் நியமனத்தினாலும் திருப்பள்ளி படுத்தவிடத்

திலே ஏறி யருளப்பண்ணின விக்ரஹம் (க) ஆகவிக்ரஹங்கள் நாலும் ஆதியிலே யுண்டானது. பின்பு கந்தாடையாண்டானும் பட்டரும் உடையவருடைய திருவாதிரை திருநக்ஷத்திரத்தை மாஸந்தோறும் மஹோத்ஸவமாக நடத்திக்கொண்டிருந்தார்கள்.

பின்பு திருவேங்கடநாட்டிலிருந்த அனந்தாழ்வான் முதலானோரும், கிழக்குதிக்கி லிருந்த எச்சான்முதலானோரும், தெற்குதிக்கான பாண்டிய நாட்டிலிருந்த திருக்கோட்டியூர்நம்பி குமாரர் யாமுனாசார்யரும், சொக்கத்தேவர் திருமாலையாண்டான குமாரரான சுந்திரத்தோளுடையார் முதலானோரும், மேல்நாட்டிலிருந்த சோமாசியாண்டான் மருதூர்நம்பி தொண்டனூர்நம்பி முதலானோரும், மற்றுந் தேசாந்தரத்திலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாரும், திரண்டு பெருங்கூட்டமாகக் கோயிலிலே வந்து உடையவருடைய பிரிவாலே மிகவுங் க்லேசித்து பின்பு பட்டரை ஸேவித்து தங்கள் க்லேசமெல்லாந் தீர்ந்து பட்டரையே எம்பெருமானாராகக்கண்டு தங்களுக்கு வேண்டுமிஷ்டார்த்தங்களையும் கேட்டுக்கொண்டு அந்த உகப்பாலே "ప్రమాణనఖనిర్భిన్నదుర్వాదిమత్తేభమస్తకః । భ్రాజతేనిగమారణ్యే శ్రీపరాశరకేసరీ" என்றித்யாதியான ச்லோகங்களையும் பட்டர் திருமுன்பே விண்ணப்பஞ்செய்து, அவரநுமதிகொண்டெல்லாருந் தங்களூருக்கெழுந்தருளினார்கள்.

இந்த ச்லோகத்திற் கர்த்தமென்னென்றில்:-ப்ரத்யக்ஷப்ரமாணம், அநுமான ப்ரமாணம், வேதாதியான சாஸ்த்ரப்ரமாணம், இதுகளாகிற நகங்களாலே நன்றாகப் பிளக்கப்பட்ட ப்ரதிவாதிகளாகிற யானைகளுடைய மஸ்தகத்தை யுடையவராய், வேதாந்தங்களைச்சொல்லி கர்ஜித்துக்கொண்டு ஸ்ரீபராசரபட்டரென்றுஞ்சிங்கமானதுவிளங்குகிறது. என்று. இன்னுபடி ச்லோகங்களுக்கு அர்த்தங்கண்டுகொள்வது.

முன்புடையவர் நியமனத்தாலே திக்விஜய யாத்ரைபண்ணி சாரதாபீடத்திற்குப்போய் சாரதாதேவிக்கு ஸ்ரீபாஷ்யத்தைக் காண்பித்து அவளாலே ச்லாகிக்கப்பட்டு அவளநுமதிகொண்டு மீண்டுவருகிறபோது திருவேங்கடமுடையானை சேவித்து வழியில் வருகிறபோது, ஓரிடைச்சிக்கு மோக்ஷங்கொடுத்துகோயிலுக்கெழுந்தருளி உடையவரை சேவித்துநிற்க, உடையவருமுகந்தருளி வேதாந்தோதயனாசாரயரென்று திருநாமஞ் சாற்றப்பட்டிருக்கிற கிடாம்பியாச்சான், ஒருநாள்பட்டர் ஆளவந்தார் ஸ்தோத்திரத்தி லொருச்லோகத்திற்கு நன்றாகப்பொருள்சாதிக்கக் கேட்டருளி பட்டரிடத்திலே ஆசார்ய ப்ரதிபத்திபண்ணியருளினார்.

அப்போது கிடாம்பியாச்சானுடைய சிஷ்யர்கள் ஏதிப்படி செய்கிறீரென்றுகேட்க, அப்போதுகிடாம்பியாச்சான் சொன்னவார்த்தை:-பிள்ளை

காள் நீரறிந்திரீரோ! உடையவரெங்களையெல்லாம் அழைத்தருளி நம்பிடத்திலே இருக்குமாப்போலே நீங்களெல்லாரும் பட்டரிடத்தி லிருங்கோளென்று நியமித்தா ராகையால் நானிப்படிசெய்தேனென் றருளிச்செய்தார். பின்பொருநாள் பட்டர் திருநெடுன்றாண்டகத்திலேயொருபாட்டிற்கு இனிதாகப்பொருளுரைக்கக் கேட்டருளி திருவரங்கப்பெருமாளரையர் முன்பெ ராசார்யரிடத்திலும் இப்படி பொருள்கேழ்க்கப்பெற்றதில்லை; இப்பொழுது பட்டரிடத்திலே இது கேட்கப்பெற்றேனென்றருளிச்செய்து பட்டரிடத்திலே ஆசார்யப்ரதிபத்திபண்ணியருளினார். பின்பொருநாள் பட்டருடனே அனேகவித்வான்கள் வந்துதர்க்கிக்க, பட்டரும் அவர்களையெல்லாரையும் ஜயித்தருளினார். பின்னையுமவர்கள் பட்டருடைய ஸர்வக்ஞதையைப் பரீக்ஷைபண்ணவேணுமென்று நினைத்து ஒருகுடத்திலேயொருபாம்பை யடக்கிக்கட்டி இக்குடத்திலேயிருக்கிற வஸ்துவென்னென்றுகேட்டார்கள். பட்டரும் இதிலேபெருமாளுடைய திருவெண்குடையிருக்கிறதென்ன, அவர்களுஞ்சிரித்து குடத்துக்கட்டை விட்டவளவிலே பாம்புபுறப்பட்டது. இதுகுடையோவென்றுகேட்டார்கள். பட்டரும், சென்றாற் குடையாமென்றாழ்வாரருளிச்செய்கையாலே குடையன்றோவென்ன, அவர்களும் பட்டர் ஸர்வக்ஞரென்று ஆச்சர்யப்பட்டுப் போனார்கள்.

பட்டர் சப்தாதிவிஷயங்களிலே அத்யந்தம் விரக்தரா யிருக்கிறபடி கண்டு இதை நன்றாகத் தெரிவிக்கைக்காகச் சிலர் பட்ட ரமுதுசெய்கிறபோது செய்யமுதென்று வேப்பெண்ணையைப் பரிமாற, பட்டரும் ஒரு விகாரமின்றிக்கே முகமலர்த்தியோடே அமுதுசெய்தருள, எல்லாரும் அதுகண்டு இவர் ஜிதேந்திரியரென்று ஆச்சர்யப்பட்டார்கள்.

பின்பு பட்டர் ஸ்ரீ பாதத்துமுதலிகளுடன் பெருங்கூட்டமாக வெழுந்தருளி யிருந்து தர்சநம் நிர்வஹிக்கிறபோது ஒரு தீர்த்தவாஸி ப்ராம்மணன் வந்து பட்டரை ஸேவித்து இவர் வேதாந்தப் பொருளுரைக்கிற சாதுர்யத்தையும், கோஷ்டியில் வைபவத்தையுங் கண்டு, பட்டரே? மேல்நாட்டில் வேதாந்தியென்றொரு பெரிய வித்வானிருக்கிறான். அவனுடைய வித்யையுங் கோஷ்டியும்போலே நுமக்குமிருந்ததென்ன; பட்டரும் அது கேட்டு அப்படியுமொரு வித்வானுண்டோவென்ன உண்டென்றுசொல்லி, அந்த ப்ராம்மணன் மேல்நாட்டிற்குப்போய் "வேதாந்திகளே? உம்முடைய வித்யைக்கும் கோஷ்டிக்கு மீடாயிருப்பா ரொருவர் ஸ்ரீரங்கத்திலே பட்டரென்றிருக்கிறாரென்ன, வேதாந்திகளும் பட்டர் நமக்கீடோவென்ன, அவரும் பட்டர் உம்மிலும் எடுப்பாயிருப்பரென்ன, வேதாந்திகளும் பட்டருக்கு எந்த சாஸ்த்ரம்வருமென்ன, ப்ராம்மணனும் சப்ததர்க்கம்முதலான ஸகல சாஸ்த்ரங்களும் வருமென்ன, வேதாந்திகளுங் கேட்டு இந்த உலகத்தில் நமக்கொருவருமெதிரில்லையென்று ஆறுசாஸ்த்ரங்களுக்கு

மாருஸகமிட்டு, அதின்மேலே உன்னதமாக விருந்தோம்; பட்டர்நம்மிலும் அதிகரென்று ப்ராம்மணன் சொன்னானென்று அன்றுதுடங்கி வேதாந்தி நிஸகிட்டிருந்தான். பின்பந்த ப்ராம்மணன் கோயிலுக்குவந்து பட்டர் ஸந்நிதியிலே நின்று பட்டரே? உம்முடைய வைபவங்களையெல்லாம் வேதாந்திகளுக்குச் சொன்னேனென்று சொன்னான். பட்டரும் ப்ராம்மணனைக் குறித்து அதற்கு வேதாந்திகள் என்சொன்னானென்று கேழ்க்க, வேதாந்திகள் பட்டருக்கு எந்த சாஸ்த்ரம் வருமென்று கேட்டான்; பட்டருக்கு சப்ததர்க்க முதலான ஸகலசாஸ்த்ரங்களும்வருமென்று சொன்னேனென்று ப்ராம்மணன் சொல்ல, பட்டரும், ப்ராம்மணா? நீ குறையச் சொன்னாய்; பட்டருக்குத் திருநெடுந்தாண்டகம் வருமென்று வேதாந்திகளுக்குச் சொல்லாதிருந்தா யென்று சொல்லிப்போகவிட, ப்ராம்மணனும்போய் வேதாந்திகளுடனே இச்செய்தியைச்சொன்னான். வேதாந்திகளும் திருநெடுந்தாண்டகமென்கிற சொல்லுக்கே பொருள்தெரிகிறதில்லை; அவரெப்படிப்பட்டவரோ வென்று ஆச்சர்யப்பட்டுக்கொண்டிருந்தான்.

பின்பு பட்டரும், உடையவர் நியமித்தபடி வேதாந்திகளைத் திருத்த வேணுமென்று நினைத்தருளி பெரியபெருமாளைசேவித்துத் தம் நினைவை விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் திருவுள்ளமுகந்து கடுகப்போய் வேதாந்தியைத் திருத்திக்கொண்டு வாருமென்று அருளிச்செய்து தமக்கு பட்டர் குமாரராகையாலே எல்லாருக்கு மிவர் ராஜகுமாரரென்று தோற்றும்படியாக ஆபரண வஸ்த்ராதிகளையும் ந்ருத்த (ஸ்ரீ) கீதவாத்யங்களையும் தம்முடைய ஸகல பரிகரங்களையுங் கூட்டி விடைகொடுத்தருளினார். பட்டரும்புறப்பட்டு திருக்காவேரிக்கரையிலே சிறுப்பத்தூரண்டையிலே நின்ற போது அவ்வூரி லெழுந்தருளியிருக்கிற அனந்தாழ்வான் இதுகேட்டுப் புறப்பட்டுத் திருக்காவேரிக் கரையிலே பட்டரைக் கண்டு ஸேவித்து, ஐயோ! சு(ஸ்ரீ)குமாரரான நீர் காட்டிலும் மலையிலும் இத்தனைதூர மெழுந்தருளலாமோவென்ன, பட்டரும் அனந்தாழ்வான் திருவடிகளிலே விழுந்து ஸேவித்து எம்பெருமானார் நியமித்தருளினபடியே நம்பெருமாளும் விடைஸாதித்து வேதாந்தியைத் திருத்திவைப்பதாக அடியேனை யனுப்பி யருளினாரென்று விண்ணப்பஞ்செய்தார்.

அனந்தாழ்வானும் மிகவுமுகந்து எங்கள் குடிக்கரசே! வாருமென்று பட்டரையெடுத்து அணைத்துக்கொண்டார். ஆகையாலே பட்டருக்கு எங்கள் குடிக்கரசென்று திருநாமமுண்டாயிற்று. பின்பு அநந்தாழ்வான் பட்டருடனே கூடப்புறப்பட்டு பட்டரை யதுகிரிக்கு எழுந்தருளவித்துக் கொண்டுபோய் திருக்கல்யாணியிலே நித்யங்களைச்செய்தருள, அங்கிருக்கிற வைம்பத்திருவர் முதலான வெல்லாரும் ஸ்ரீசடகோப மெழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு எதிர்கொள்ள, பட்டரும் ஸேவித்துக் கோயிலுக்குள் ளெழுந்தருளி உடையவரை ஸேவித்து ஆழ்வார்களையும் ஸேவித்து,

செல்வப்பிள்ளையையும் ஸேவித்துப் பின்புள்ளேசென்று திருநாரணனை ஸேவித்து ஸகலவரிசைகளையும் பெற்று, அவரனுமதிகொண்டனந்தாழ்வானுடனே புறப்பட்டு வேதாந்தி யிருக்கிறவூருக்கருகேவந்தவாறே ஆழ்வான் குமாரர் பட்டர்வந்தார், அணியரங்கன் குமாரர் பட்டர்வந்தார், வேதாந்தாசார்யர் பட்டர்வந்தார், வேதியர்கள் தனித்தலைவன் வந்தார், பராசரபட்டர்வந்தார, பரவாதி மதஹஸ்தி பஞ்சானனன் வந்தார், என்று பலவிருதுகளூ மூதிக்கொண்டு பெரியவாரவாரத்துடனே எழுந்தருளிக்கொண்டிராநின்றார்.

அப்போ இரண்டு ப்ராம்மணரெதிரேவந்து பட்டரைப்பார்த்து, பட்டரே? நீர் அனேகசம்ப்ரமத்துடனே எங்கே எழுந்தருளுகிறீரென்ன, பட்டரும் நாம் ஸ்ரீரங்கபட்டர், வேதாந்திகளுடனே தர்க்கிக்கபோகிறோமென்ன, அந்த ப்ராம்மணர் சொன்னது:—நீரிப்படி ஸம்ப்ரமத்துடனே எழுந்தருளினால் வேதாந்திகளை யுமக்குக்காணப்போகாது; அவர் கிருஹத்திற்குள்ளே யிருந்துவிடுவர்; அவருடைய சிஷ்யரும் ப்ரசிஷ்யரும் தலைவாசலிலே யிருந்து நாலாறுமாஸம் தர்க்கித்து வந்தவர்களையுள்ளேபோகவொட்டார்களென்று சொல்ல, பட்டரும், அந்த ப்ராம்மணரைப்பார்த்து ஆகில் நாம் வேதாந்திகளைக் காணுமுபாயமென்னென்ன, அதற்கு ப்ராம்மணர் சொன்னது:—வேதாந்திகள் அபாரமாக ஸத்ரபோஜனம் பண்ணிவைப்பர். அந்த ஸத்திரத்திலே புசிக்கும் ப்ராம்மணர்களோடே கலசி, அந்த ப்ராம்மணவேஷத்தையும் தரித்துக்கொண்டு உள்ளேசென்றால் வேதாந்திகள் அங்கே புசிக்கிறவர்களைப் பார்த்துக்கொண்டிருப்பர். அங்கே வேதாந்திகளைக் காணலாமென்று சொன்னார்கள். பட்டரும் அத்தைக்கேட்டு இவர்கள்சொன்னது கார்யமாயிருந்ததென்று திருவுள்ளம்பற்றி தம்முடைய பரிகரத்தையெல்லாம் ஊருக்கு தூரே நிறுத்தி திருவாபரணங்களையுங் களைந்துவைத்து (அரசிலையின்சொத்தை யிடுக்கிக்கொண்டு) காவிவேஷ்டியுந்தரித்து ஒருகமண்டலுவையுந் தூக்கிக்கொண்டு அநந்தாழ்வானுந் தாமுமாய் உள்ளேபுகுர, வேதாந்திகளும் ப்ராம்மணர்புசிக்கையைப் பார்த்துக்கொண்டு ஒருமண்டபத்திலே ஆஸனமிட்டு அதின் மேலேயிருக்க, ப்ராம்மணரெல்லாரும் ஸத்ரசாலையிலேபுகுர, பட்டர் அங்கே போகாமல் வேதாந்திகளைநோக்கி யெழுந்தருள, வேதாந்திகளும் பிள்ளாய் இங்கென் வருகிறீரென்ன? பட்டரும் பிக்ஷைக்கு வருகிறேனென்ன, வேதாந்தியும் எல்லாருமுண்கிறவிடத்தே பிக்ஷைக்குப் போமென்ன, எனக்கு அன்னபிக்ஷையன்றென்ன, வேதாந்திகளும் இவர் ஸத்திரபோஜியானாலும் சிறிது வித்வானாக்க கூடுமென்று நினைத்து "காபிக்ஷா" ([illegible]) வென்ன பட்டரும் தர்க்கபிக்ஷாவென்ன, வேதாந்திகளும் இத்தைக் கேட்டு திடுக்கிட்டு முன்பு தீர்த்தவாஸி ப்ராம்மணன் சொல்லியிருந்த பட்டரல்லது நம்முன்னே யொருவரு மிப்படிதர்க்கபிக்ஷை கேட்க்கமாட்டார்கள், ஆகையால் இந்த வேஷம் கார்ப்பண்யமாக யிருந்ததேயாகிலும் இவர்

பட்டராகவேணுமென்று நிச்சயித்து நீர்பட்டரோவென்று கேழ்க்க, இவரும் ஆமென்று அந்தவேஷத்தைக் குலைத்துக்கொண்டு மஹாவேகத்திலே உபந்யஸித்தருள, வேதாந்திகளும் பட்டர் வைபவங் கேட்டிருந்தும் இவர் வித்யாமாஹாத்ம்யங் காணவேணுமென்று இவருடனே தர்க்கிக்க, இப்படியொருவர்க்கொருவர் மதயானைகள் போர்செய்யுமாப்போலே தர்க்கிக்க, இப்படி ஒன்பதுநாள்சென்றபின்பு பத்தாவதுநாள் பட்டர் மாயாவாதஸித்தாந்தத்தைப் பலமுகமாகக் கண்டித்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்க, இதைக்கண்டு வேதாந்திக ளெழுந்திருந்து நின்று நடுங்கி வேறொன்றுஞ் சொல்லாதே "மனுஷ்யமாத்ரமோ வென்றிருந்தேன் நம்பெருமாளே நீர்" என்றுசொல்லி பட்டர் திருவடிகளிலே அடவுகெட விழுந்து ஸேவித்து அடியேனை யிரங்கியருள வேணுமென்று மிகவும் வேண்டிக்கொண்டான். பட்டரும் தாமெண்ணினகாரியம் சடிகபலிக்கை யாலே மிகவுமுகந்து வேதாந்திகளுக்குத் தப்தாதி பஞ்சஸம்ஸ்காரங்களைப் பண்ணி பாகவதோத்தமராக்கி வேதாந்திகளைப்பார்த் தருளிச்செய்தது:— வேதாந்திகளே ? நீர் ஸர்வக்ஞராயிருந்தீர் ; நாமுமக்கு விஸ்தரித்துச் சொல்லவேண்டியதில்லை; விசிஷ்டாத்வைதமேபொருள். நீர் மாயாவாத வாஸனையைவிட்டு திருமால் திருவடிகளைப்பற்றி ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தையே நிர்வஹித்துக்கொண்டிருமென் றருளிச்செய்து ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்கள் நாலாயிரமும் ஓதும்படி நியமித்தருளிப் புறப்படுகிறபோது பட்டருடைய பரிகரமெல்லாம்வந்து பட்டரைச்சூழ்ந்துக்கொண்டு ஸர்வாபரணங்களாலும் பூஷித்து உபயசாமரம் முதலானது பணிமாறி ஸகலவாத்யங்களும் முழங்கி திருச்சின்னம் பணிமாறப் புறப்படக்கண்டு வேதாந்திகள் பட்டர் திருவடிகளிலே விழுந்து ஸ்ரீமானுன தேவரீர் எனக்காக கார்ப்பண்ய வேஷத்தைக்கொண்ட விந்தக்லேசம் அடியேனுக்குப்பொறுக்கப்போகிறதில்லை யென்று சொல்லி வாய்விட்டழுதுகொண்டு கிடக்க, பட்டரும் வேதாந்திகளை முடிபிடித்தெடுத்துநிறுத்தித் தேற்றி நீரிங்கே ததியரை ஆராதித்துக்கொண் டிருமென்றருளிச்செய்து கோயிலுக்கெழுந்தருளி பெரியபெருமாளை ஸேவிக்க, பெரியபெருமாளும் பட்டருக்கு ஸகலவரிசைகளையும் தீர்த்தமும் சடகோபனும் ப்ரஸாதித்து திருமாளிகையிலே போகவிட்டருளினர்.

பின்பு பட்டரும் திருமாளிகையிலே யெழுந்தருளியிருந்து தர்சந நிர்வாஹஞ் செய்துக்கொண்டு ஸுகமாக வெழுந்தருளியிருந்தார். இப்படி மஹாவாதிகளா யிருக்கிற அந்ய ஸித்தாந்தாதிபதிகளை வாதத்திலேஜயித்து திருத்தி தர்சநப்ரவர்த்தகராம்படி பண்ணுகிற மாஹாத்மயம் பாஷ்யகாரருக்கும் பட்டருக்குமே யுண்டு ; மற்றொருவருக்குமில்லை.

பின்பு மேல்நாட்டிலே வேதாந்திகள் தெண்கரை யென்கிறவூரிலே ததியாராதனம் பண்ணிக்கொண்டிருக்கிறநாளிலே இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமாளிகைக் கெழுந்தருளி பசிநலியா நிற்கிறதென் றுகேழ்க்க,

வேதாந்திகளுடைய தேவிகளிருவரும் உங்கள் வேதாந்திகள் தீர்த்தமாடப் போனார்; இங்கேயொன்றுமில்லை, நீங்களெங்கே போங்கோ வென்று சொல்லி யநாதரணை பண்ணினார்கள். அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் வேதாந்திகளண்டையிலே வந்து இத்தை யறிவித்தார்கள். வேதாந்திகளு மது கேட்டு வெறுத்துக்கொண்டு திருமாளிகைக் கெழுந்தருளி தேவிகளிருவரையுங் கோபித்துக்கொண்டு அப்போதே கோயிலுக்குப் புறப்பட நினைத்தார். அங்குள்ளவர்கள் வேதாந்திகளைப்போகவொண்ணாதென்று தகைந்தார்கள். வேதாந்திகளுந் தமக்குண்டான வஸ்துக்களை மூன்று கூறிட்டு இரண்டுகூறு இரண்டு தேவிகளுக்குங் கொடுத்து மற்றொரு கூறைத் தம்முடைய வாசார்யருக்காக வெடுப்பித்துக்கொண்டு தம்முடைய தேசத்தை விட்டு வந்து உத்தமாச்ரமத்தைப்பெற்று திருக்காவேரிக்கரையிலே திருப்பத்தூரிலேவந்து அநந்தாழ்வானை வைத்து அவரருளிசெய்த ஸூக்தத்தை யநுஸந்தித்துக்கொண்டுகோயிலுக்கெழுந்தருளிபட்டர்திருவடிகளை சேவித்தார். பட்டரும் மிகவுமுகந்தருளி நம்முடைய ஜீயர் வந்தாரென்று வாரியெடுத்தணைத்துக் கொள்ளுகையாலே வேதாந்திகளுக் கன்றுமுதல் நஞ்சீயரென்று திருநாம முண்டாயிற்று. முன்பு மாதவாசார்யரென்று நாமதேயம். பின்பு வேதாந்திகளென்று நாமதேயம். இப்போது நஞ்சீயரென்று திருநாமம். நஞ்சீயரும் பட்டரை சேவித்துக் கொண்டுவந்த தநங்களைத் திருவடிகளிலே ஸமர்ப்பித்து பட்டரைப்பிரியாமல் ஸேவைசெய்துக்கொண்டு பட்டருளிச்செய்த தர்சனார்த்தங்களைக் கேட்டுக்கொண்டெழுந்தருளி யிருந்தார். பின்பு சிலநாளிலே பட்டர் நஞ்சீயர் முதலான முதலிகளுடனே கூடப்புறப்பட்டருளி திருவணையாடித்திரும்பி யெழுந்தருளுகிறபோது சாயங்காலமானவாறே பாதிரி யென்கிறவூரிலே ஒரு வேடன்வீட்டிலே இராத்திரி தங்கியிருக்கிறபோது பட்டர் அந்தவேடனை இங்கு விசேஷமென்னென்று கேட்டருள, அதற்கு வேடன் விண்ணப்பம்:—நாயனேன் காட்டிலே வேட்டைக்குப்போனேன்; அங்கேயொரு முசற்குட்டியைக் கண்டுபிடித்தேன்; அதில் தாயானது என் முன்னே வந்து வழியிலே எதிரே கும்பிட்டுக்கொண்டு கிடந்தது. அத்தைக்கண்டெனக் கிறக்கம்பிறந்து அதின் குட்டியை விட்டுவந்தேன் என்றுசொன்னான். அத்தை பட்டர்கேட்டருளி இந்தவேடனுக்கிப்படி சரணாகதியிலே யிரக்கம்பிறந்தபடி கண்டபடியால் எம்பெருமானுக்குச் சரணாகதனிடத்திலே இரக்கம் பிறக்கைக்கொரு சாஸ்த்ரம் தேடவேண்டுவதில்லை யென்றருளிச்செய்து பொழுதுவிடிந்து புறப்பட்டு கோயிலுக் கெழுந்தருளினார்.

பின்பொருநாள் பட்டர் நஞ்சீயரை யழைத்துத் திருவாய்மொழியிலொருபாட்டிற்கு இயல் சொல்லச்சொல்ல, நஞ்சீயருந் தாம் த்ராவிடராய் த்ராவிடபாஷையிலே நிபுணரா யிருக்கையாலே இனிதாக வியல்சொல்ல, பட்டர் அத்தைக்கேட்டருளி மூர்ச்சித்தார். நஞ்சீயரும்பயப்பட்டு இயலை நிறுத்தி பட்டருக்கு மூர்ச்சைதெளிந்தவாறே இப்படி கோமளமான திரு

வுள்ளத்திற்கு இயல்கேழ்க்கக்கூடுமோவென்று விண்ணப்பஞ் செய்தார். அக்காலத்திலே ஆழ்வான் சிஷ்யனான வீரசுந்திர ப்ரம்மராயன் பெருமாளுக்குத் திருமதிள் கட்டிவைக்கிற நேரிலே ஆழ்வானுடைய சிஷ்யரான பிள்ளையாழ்வானுடைய திருமாளிகை அகப்பட, அத்தையிடித்து மதிள் கட்டவேணுமென்று வீரசுந்திரன் சொல்ல, பட்டரும் வீரசுந்திரனுக்குச் சொன்னது:—உன் திருமதிளோ பெருமாளுக்கு ரக்ஷகம்? பிள்ளைப்பிள்ளையாழ்வான் மாஹாநுபாவனாகையாலே அவர் மங்களாசாஸநமே ரக்ஷகம்; ஆகையால வர்திருமாளிகை தப்ப ஒதுங்கவிட்டு மதிள் கட்டிவைக்கவேணும். முன்பு திருமங்கையாழ்வார் மதில்கட்டிவைக்கும்போது தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலைகட்டிவைக்கிற விடத்தைத்தப்ப ஒதுங்கவிட்டுத் திருமதிள்கட்டினரே, நீயுமப்படியே செய்யவேணுமென் றருளிச்செய்தார். வீரசுந்திரனும் பாகவதவிரோதமென்றுபாராதே ஆசார்யபுத்ரரென்றுமஞ்சாதே அவர்வார்த்தையை அதிக்ரமித்துப்பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகையை யிடித்துத் திருமதிள்கட்டிவைத்து அதுமூலமாக பட்டரையுங் கோயிலிலே யிருக்கவொட்டாதபடி நலிய, பட்டர்கோயில் நின்றும்புறப்பட்டு திருக்கோட்டியூருக் கெழுந்தருளுகிறபோது நஞ்சீயருந் தொடர்ந்து தேடிக்கொண்டுபோய் பட்டரைக்கண்டு அடிமைசெய்ய, நஞ்சீயருடனேகூடத் திருக்கோட்டியூருக் கெழுந்தருளி யிருக்கிறபோது ஒரு ஸ்ரீவைஷ்ணவர்பட்டரைசேவித்து அடியேனுக்குத் திருவிருத்தமென்கிற திவ்ய ப்ரபந்தத்திற்கு அர்த்தமருளிச்செய்ய வேணுமென்று மிகவும்வேண்டிக்கொண்டார். பட்டரும் நஞ்சீயரைப்பார்த்து ஜீயரே! எனக்குக்கோயிலையும் பெருமாளையும் விட்டுப்பிரிந்த க்லேசாதிசயத்தாலே செவிகள் சீபாயாணின்றது; ஆகையாலே எனக்கு வாய்திறந்து ஒருவார்த்தை சொல்லப்போகிறதில்லை, நீரிவருக்குத் திருவிருத்தத்திற்கோருரு அர்த்தஞ் சொல்லுமென்று நியமிக்க, ஜீயரும் அப்படி நடத்திக்கொண்டு வருகிற வளவிலே பட்டர் திருவுள்ளத்தைக் கலக்கின வீரசுந்திரன் மறித்தானென்று பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருக்கோட்டியூருக்குவந் தருளிச்செய்ய, பட்டருங்கேட்டு ஸந்துஷ்டராய் பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருவடிகளை அடிக்கடிக்குவணங்கி, அவருடனேகூட திருக்கோட்டியூரில்நின்றும் புறப்பட்டருளி கோயிலுக்கெழுந்தருளி, பெருமாளையும்ஸேவித்து தர்சநத்தையும் நிர்வஹித்துக்கொண்டெழுந்தருளியிருந்தார். பின்பொருநாள் பட்டர் பெரியபெருமாளை ஸேவித்துநிற்க, பெரியபெருமாள் பட்டருக்கருளப்பாடிட்டு, உடையவர் ஸ்ரீபாஷ்யமும் கீதாபாஷ்யமுஞ் செய்தருளினர். நீர் நம்முடைய ஸஹஸ்ரநாமத்திற்கு பாஷ்யஞ்செய்யுமென்று நியமித்தருள பட்டரும் பெரியபெருமாள் நியமித்தபடியை அகப்பிலே தோற்றுவித்து மிகவுஞ் சதிருடனே ஸஹஸ்ரநாமபாஷ்யத்தைச் செய்தருளினர்.

பின்பொருநாள் பட்டர் உடையவருக்குப் பின்புள்ளராய் வசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ப்ரவர்த்தகரான நிகில பூர்வாசார்யர்களுக்கும்

தாம் ஆசார்யராகையாலே அஷ்டச்லோகியென்று முதலிலே மந்த்ரவ்யாக்யானத்தை யருளிச்செய்தார். இந்தவ்யாக்யாநமே யெல்லாருஞ் செய்த மந்த்ரவ்யாக்யாநங்களுக்கு மூர்நூலாயிருக்கும். முன்பு உடையவரிவருக்குச்சாத்தியிருந்த வேதாந்தாசார்யனென்கிற திருநாமத்தை யிவருடைய சாயையைச் சிறிதுபெற்றிருக்கிற தூப்பில்பிள்ளைக்குப் பெருமாள் ஸாதிக்கையாலே அவர்க்கு வேதாந்தாசார்யனென்கிற திருநாமமுண்டாகப் போகிறது.

தூப்பில்பிள்ளை பட்டருடைய சாயையைச் சிறிது அநுஸரித்திருக்குமென்கிறத்தில் ப்ரமாணம்:—தூப்பில்பிள்ளை விஷயமான எழுபது ச்லோகத்திலேயிருக்கிற "వేదాన్తదేశికోయం సూక్తైరనుసరతి కూరనాథసుతమ్." என்கிற ச்லோகம். இதற்குப்பொருள்:—தூப்பில்பிள்ளையான வேதாந்தாசார்யரானவர் நல்லகவிகள் சொல்லுமிடத்தில் கூறத்தாழ்வான்மகனான பட்டரைச் சிறிதநுஸரித்திருக்கிறாரென்று. ஆகவிப்படி ஸகலபூர்வாசார்யர்களைக்காட்டிலும் மிகவும் மாஹாத்மயத்தையுடைய பட்டருளிச்செய்த ப்ரபந்தங்கள்:—ஸஹஸ்ரநாமபாஷ்யம், அஷ்டச்லோகியென்கிற மந்த்ரவ்யாக்யாநம், தத்வரத்நாகரம், ப்ரணவவிவரணம், ஸ்ரீகுணரத்நகோசம், ஸ்ரீரங்கராஜஸ்தவம், க்ரியாதீபம், தத்வத்ரயச்லோகம் இத்யாதி. பட்டருடையவைபவம் ரகுநாதசரிதம்போலே மிகவும் பரந்திருக்கும். ஆகிலும் சிறிதெழுதிற்று.

பட்டர், நஞ்சீயருக்குப் பிள்ளானாறாயிரமும் நன்றாகப்ரஸாதித்தருளினார். நஞ்சீயருமதை நன்றாகவதிகரித்துபட்டரனுமதிகொண்டு ஆறாயிரப்படிக்கு விவரணரூபமாய் ஒன்பதினாயிரப்படியாகத் திருவாய்மொழிக்கொரு வ்யாக்யாநஞ் செய்தருளினார். பின்பொருநாள் பட்டருக்கு இருபத்தெட்டாவது திருநக்ஷத்ரத்திலே கார்த்திகைமாசத்திலே சுக்லபக்ஷத்தில் த்வாதசியி னன்று வராஹபுராணத்திலே கைசிகமாஹாத்மயமென்கிற வத்யாயத்தை பட்டர் வாசித்தருளாநிற்கச் செய்தே என்னையும்போலன்றியே ஒருபதத்திலே நின்று பலமுகமாக தாத்பர்யங்களை யருளிச்செய்கிற படிகளைக்கண்டு பெரியபெருமாள் மிகவுமுகந்துதாம்சாற்றியிருந்ததிருமாலை திருப்பரியட்டம், திருவாபரணம்முதலானதையும், தாமெழுந்தருளியிருக்கும் திவ்யஸிம்மாஸனத்தையும் பட்டருக்கு ஸம்மானமாகக் கொடுத்தருளி, பின்னையும் ஸந்தோஷாதிசயத்தாலே கொடுப்பது தெரியாமைபட்டு, பட்டரே? உமக்கு மேல்வீடுதந்தோமென்று அருளிச்செய்ய, பட்டரும் மஹாப்ரஸாதமென் றங்கீகரித்தருளினார். அப்போதிருந்த பெருங்கூட்டத்திருவோலக்கமானதுகடல்குழம்பினாப்போலேகுழம்பித்திடுக்கிட்டு நின்றது. பட்டரும் ஆனந்தத்துடனே பெருமாளை ஸேவித்துப் புறப்பட பெருமாள் தம்விரிசைகளெல்லாவற்றுடன் ப்ரம்மரதம் பண்ணிவைத்து கோயிலனைத்துக் கொத்தும் அகில ஸ்ரீ வைஷ்ணவர்களும் எல்லாவாசாரி

யர்களும் மற்றுமுள்ள விப்ரவர்க்கமுந் திரண்டு சூழ்ந்து ஸேவித்துக்கொண்டிவர, திருமாளிகையிலேயெழுந்தருளி தாயாரானவாண்டாளைஸேவிக்க, ஆண்டாளும் "கலமுந்தமில்லாதோர் நாடுபுகுவீரென்று" ஆசீர்வதித்தாள். அதாவது:—எல்லையில்லாத ஆனந்தத்தையுடைய பரமபதமாகிற நாட்டிலே புகப்பெறுவீரென்றபடி. பட்டரும் அதற்கு "அம்மா வடியேன்வேண்டுவதிதே" என்று உகந்தருளி திருப்பதிகளுள்ளவர்களெல்லாரும் திருமாளிகையிலே அமுதுசெய்தருளின பின்பு பெருங்கூட்டமாக வெழுந்தருளியிருந்து என்றையும்போலே திருநெடுந்தாண்டகத்திற்கு அர்த்தமருளிச்செய்யாநிற்கச்செய்தே ஸ்ரீ வைகுண்டநாதன் பெரியதிருவடிமேலே எழுந்தருளக் கண்டு அத்தைத் திருப்பவளத்தாலே அருளிச்செய்து திருக்கண்களைமலர விழித்து திருமேனிபுளகிதமாய் முறுவல்செய்து திருமுடியிலே அஞ்சலி செய்துக்கொண்டு சிர: கபாலம் வெடித்து திருநாட்டிற் கெழுந்தருளினார். முதலிகளும் பட்டர் இளைத்தெழுந்தருளி யிருக்கிறாரென்று உள்ளே சென்று ஆண்டாளுக்கறிவிக்க, ஆண்டாளுங் கடுகவந்து பட்டரைவாரியெடுத்து மார்பிலே யணைத்துக்கொண்டு திருவுள்ளங்கலங்காமல்திருமுகங் கன்றாமல் கண்ணீர்புறப்படாமலிருந்து உடையவர் உடைமையைக் கைக்கொண்டால் நாமவெறுக்கக்கூடாது என்று சொல்லிக்கொண்டிருந்தாள். அப்போது கோயிலுள்ளாரெல்லாரும் கடல்கலங்கினாப்போலே கிடந்துதுடித்தார்கள். வேதாந்திகளும் வேரற்றமரம்போலே விழுந்து கோஷித்துக்கொண்டு பலபலவாகப் புலம்பியழுதார். பெருமாளும் நாச்சிமாரும் திருமுகத்தின்பணி, காளாஞ்சி, திருவெண்சாமரம், திருவாலவட்டம், திருவெண்குடை, திருவெண்முத்தின்கலசம், திருமேற்கட்டி, முத்துத்தாமந் துடக்கமான தம்முடையஸர்வபரிகரங்களையுங்கொடுத்துவிட்டருளி, நம்முடைய அவப்ருதோத்ஸவங் கொண்டாடுமாப்போலே பட்டருக்கு அவப்ருதங்கொண்டாடுங்கோளென்றருளிச்செய்து திருமுகங்கன்றி திருக்கண்ணீருமுதிர்த்தார்கள். பின்பு பெருமாளும் நாச்சிமாரும் திருவுள்ளம் நொந்துசுருளமுதும் அமுதுசெய்யாதே நாம்புத்ரனையிழந்தோமே!யென்று மிகவுங் க்லேசித்தார்கள். பின்பு வேதாந்திகள்முதலான முதலிகளும் சீராமப்பிள்ளையைக்கொண்டு பட்டருக்கு சரமகைங்கரியத்தை நடத்தினார்கள்.

பின்பு சீராமப்பிள்ளை பெருமாளைஸேவித்துநிற்கப், பெருமாளுஞ் சீராமப்பிள்ளையை யருளப்பாடிட்டு பட்டரையிழந்தோம்நாம், உமக்குநாமிருக்கிறோம், நீர் க்லேசிக்கவேண்டாவென்றருளிச்செய்து பட்டருடைய வரிசைகளெல்லாங் கொடுத்தருளி ப்ரம்மரதம்பண்ணுவித்து சீராமப்பிள்ளையைத் திருமாளிகைக்குப் போகவிட்டார். பின்பு சீராமப்பிள்ளையுங் க்லேசந்தீர்ந்து தர்சநம் நிர்வஹித்துக்கொண்டெழுந்தருளியிருந்தார்.

பின்பு நஞ்சீயரும் பட்டர் அனுமதிகொண்டு ஸ்ரீபாஷ்யக்கணக்கிலே செய்த ஒன்பதினாயிரப்படியை முட்டபட்டோலைகொண்டு தாம் த்ரவிடரு

மாய் த்ரவிடபாஷாநிபுணருமாயிருந்தாலும் நன்றாகவெழுதுவாரைக் கொண்டு எழுதுவிக்கவேணுமென்று நினைத்தருளி ஸ்ரீபாதத்துமுதலிகளையழைத்து நன்றாகவெழுதுவாருண்டோவென்று கேழ்க்க, அவர்களுந்திருக்காவிரித் தெற்குக்கரையினின்றும் நம்பூர் வரதராஜனென்பாரொருவர் பலகாலும் இங்கேவருவர், அவர் நன்றாகவெழுதுவாரென்று விண்ணப்பஞ்செய்ய, ஜீயரும் வரதராஜனையழைத்து சிறிதெழுதிக்காட்டுமென்ன, வரதராஜரு மப்படியேயெழுதிக்காட்ட, "எழுத்து முத்துப்போலேயிருந்தது, ஆகிலும் திருவாய்மொழிவ்யாக்யாநமாகையாலே திருவிலச்சினை திருநாமமாத்ரமுண்டான விவர் எழுதவொண்ணாது, விசேஷஜ்ஞரைக்கொண்டெழுதி வைக்கவேணு,மென்று நினைக்க, வரதராஜரும் ஜீயர்கருத்தறிந்து அடியேனையுந் திருத்திப்பணிகொள்ளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார். ஜீயருமுகந்து அப்போதே அவர்க்குப் பஞ்சஸம்ஸ்காரஞ் செய்தருளி விசேஷஜ்ஞராக்கி ஆறாயிரமும் ஒன்பதினாயிரமும் அவருக்கருளிச்செய்து ஒன்பதினாயிரத்தை யெழுதச்சொல்லி நியமித்தார். தேவராஜரும் அத்தை வாங்கிக்கொண்டு நஞ்சீயர் அனுமதிபெற்று அடியேன் ஊரிலே யெழுதுகிறேனென்று ஊருக்குப்புறப்பட்டுத் திருக்காவிரிக்குள்ளேயெழுந்தருளச் செய்தே சற்றிடம் நீந்தவேண்டுகையாலே பட்டோலையைத் திருமுடியிலே கட்டிக்கொண்டு நீஞ்சுமளவில் அலையடித்து பட்டோலை ஆற்றுக்குள்ளே விழுந்துபோய்த்தது. தேவராஜருமக்கரையேறி வ்யாகுலப்பட்டுத்தேறி ஒரு அகத்தை யுண்டாக்கிக்கொண்டு பட்டோலையிலிருந்ததொன்றுந் தப்பாமல் ஒன்பதினாயிரமும் எழுதித் தாமும் தமிழிலே நிபுணராகையாலே சிலபாட்டுகளிலே வேண்டியவிடத்திற்கு விவரணமெழுதிக்கொண்டு ஜீயர் திருக்கையிலேகொடுக்க, ஜீயரும் பார்த்தருளுமிடத்தில் தாம் அருளிச்செய்தபடியா யிருக்கச்செய்தேயும் சொற்களுக்கு மிகவுந் தகுந்த பலபொருள்கள் பலவிடங்களிலெழுதியிருக்கையாலே மிகவுந் திருவுள்ளமுகந்து இதுவும் மிகவும் நன்றாகயிருந்தது; இது ஏதென்று தேவராஜனைக்கேட்க, அவரும் பயப்பட்டுவிண்ணப்பஞ்செய்யாதிருக்க, ஜீயரும் பயப்படவேண்டாம், உண்மைசொல்லுமென்ன, வரதராஜரும் நடந்த செய்தியை விண்ணப்பஞ்செய்ய, ஜீயருங் கேட்டருளி வரதராஜருடைய சக்தி விசேஷத்திற்கு மிகவுமுகந்து அழுந்தக்கட்டிக்கொண்டு இவர் நம்முடையபிள்ளைத் திருக்கலிகன்றிதாஸர் என்று அருளிச்செய்கையாலே அன்றுமுதல் வரதராஜருக்கு நம்பிள்ளையென்று திருநாமமுண்டாய்த்து.

நம்பிள்ளையு மன்றுமுதல் ஜீயர் ஸந்நிதியிலே பிரியாமல் அடிமை செய்துக்கொண்டிருந்தார். ஜீயரும் நூறுதரம் திருவாய்மொழிக்கர்த்தம் நிர்வஹித்துச் சாற்றியருளுகையாலே ஜீயருக்குப் பிள்ளைசதாபிஷேகோத்ஸவம் பண்ணினார். இப்படியிருக்கும் நம்பிள்ளைதிருவடிகளிலே பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, பின்பழகிய பெருமாள்ஜீயர், ஈயுண்ணிமாதவப்பெருமாள், முதலான வனேகமாசார்யர்கள் ஆச்ரயித்தார்

கள். பின்பொருநாள் நம்பிள்ளை காலக்ஷேபம் ஸாதித்து பெருந்திருவோலக்கம் கிளம்பிவருகிற பெருந்திறளைக்கண்டு வைஷ்ணவனாயிருப்பானொரு ராஜா நம்பெருமாள் திருவோலக்கம் குலைந்ததோ? நம்பிள்ளை திருவோலக்கங்குலைந்ததோ? வென்றுகேட்டான். பின்பொருநாள் முதலியாண்டான் பேரனாராய்க் கந்தாடையாண்டான் குமாரரான கந்தாடைதோழப்பர் நம்பிள்ளையிடத்திலே சிறிதுபொறாமைபட்டு வாசிகமாக வபசாரப்பட்டு பின்பு மஹாவித்வானாகையாலும் திருவம்சப்ரபாவத்தாலுந் தெளிந்து நம்பிள்ளை திருவடிகளைப்பற்றிப் புகழ்ந்து நம்பிள்ளைக்கு லோகாசார்யரென்று திருநாமஞ் சாற்றியருளினார். பின்பொருநாள் கூரத்தாழ்வானுடைய திருப்பேரனாராய் சீராமப்பிள்ளைதிருக்குமாரரான நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டர், மஹாவாக்மியாய் மஹாவித்வானா யிருப்பர். அவரும் நம்பிள்ளையதிசயத்தைக் கண்டு பொறுக்கமாட்டாதே யிருப்பர். அந்தபட்டர் ஒருநாள் ராஜஸ்தானத்திற்கெழுந்தருளுகிறபோது வழியிலே நம்பிள்ளை சிஷ்யரான பின்பழகிய பெருமாள் ஜீயரைக்கண்டு ஜீயரே? நாம் ராஜகோஷ்டிக்குப்போகிறோம கூடவாருமென்றழைத்தார். ஜீயரும் நம்மாசார்யவம்சமன்றோவென்று நினைத்து நடுவிற் திருவீதிப்பிள்ளைபட்டருடனேகூட ராஜஸ்தானத்திற்கெழுந்தருளினார். ராஜாவும்பட்டரையெதிர்கொண்டுஸேவித்துப் பெரியகோஷ்டியாகவிருந்து தான் மிகவும் கல்வியுடையவனாகையாலே பட்டருடைய வைபவத்தை பரீக்ஷைபண்ணுவதாக ஸ்ரீராமாயணத்திலே ஓராக்ஷேபம்பண்ணிவிட்டு வேறேபராக்காயிருந்தான். பட்டரும்சிந்தித்துப் பார்த்தவிடத்தில் ராஜாசொன்னவாக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்வது கடினமாயிருந்தபடியாலே நம்பிள்ளை சிஷ்யரான ஜீயரைப்பார்த்து இவ்விடத்திலே பிள்ளைநிர்வாஹமென்னென்று கேட்டார். ஜீயரும் பிள்ளைநிர்வாஹத்தை சுருக்கத்திலே புதுர் அவிழ்த்தார். பட்டரும் அதுகேட்டு ஆச்சர்யப்பட்டு அத்தைநினைத்துக்கொண்டிருந்தார். ராஜாவும் பராக்கொழிந்து பட்டரைத்திரும்பவுங் கேட்டவிடத்தில் பட்டர்தாமே அருளிச்செய்ததாகத் தோற்றுவித்து நம்பிள்ளைநிர்வாஹத்தை ராஜாவுக்கருளிச்செய்தார். இராஜாவுங்கேட்டு அத்யாச்சர்யப்பட்டு மிகவுஞ் ச்லாகித்து விலையில்லாத வஸ்த்ராபரணங்களையுந் தனங்களையும் ஸமர்ப்பித்து பட்டர் திருவடிகளிலே விழுந்து ஸேவித்துக் கோயிலுக்கெழுந்தருளப்பண்ணினான்.

பின்பு பட்டர் அதுகளை யங்கீகரித்துக்கொண்டு நம்பிள்ளை சிஷ்யரான ஜீயரைக் கையைப்பிடித்துக்கொண்டு அனுவர்த்தித்து அடியேனையுமிந்த தனத்தையும் நம்பிள்ளை திருவடிகளிலே சேர்க்கவேணுமென்று சொன்னார். நம்பிள்ளையுந் தம்முடைய வாசார்யவம்சமென்று நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரைஸேவித்து மிகவுமாதரிக்க, நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டரும் நம்பிள்ளையைப்பார்த்து தேவரீருடைய திவ்யஸூக்தியில் பதினாயிரங்கோடியிலே சிந்தின ஒரு ஸ்ரீஸூக்திபெற்ற தநமிதுவாகையாலே அடியேனையு மித்தையு மங்கீகரித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார்.

நம்பிள்ளையுமதற்கு உடன்படாமல் பலவுமருளிச்செய்ய, நடுவில் திருவீதிப் பிள்ளைப்பட்டரும் கண்ணுங் கண்ணீருமாய் நம்பிள்ளைதிருவடிகளை ஸேவித்துநிர்க்க, நம்பிள்ளையும் பட்டரை வாரியணைத்துக்கொண்டு விசேஷ கடாக்ஷஞ் செய்தருளி இவருக்கெல்லா வர்த்தவிசேஷங்களையும் ஸாதித்தருளினர். நடுவில்திருவீதிப்பிள்ளைப்பட்டரும் நம்பிள்ளையினுடைய விசேஷகடாக்ஷத்தைப்பெற்று மிகவு மினிதுடனே நம்பிள்ளைக்கு ஸ்ரீஸூக்தி ஸாகரமென்று திருநாமஞ்சாற்றினர்.

பின்பொருநாள் நம்பிள்ளையும் முதலிகளும் திருவெள்ளறை நாச்சியாரை ஸேவித்து திரும்பவுங் கோயிலுக் கெழுந்தருளச்செய்தே திருக்காவேரி இருகரையுமொத்துப் பெருகாநிற்க. ஓடங்கிடையாதபடியாலே ஒருதாழியிலே எழுந்தருளச்செய்தே நட்டாற்றிலே பொழுது மஸ்தமித்து மழையு மிருட்டுமாய் அக்கரை யிக்கரைதெரியாதே தாழிமுழுகத்தக்கதாயிருக்க, அப்போது தாழிக்காரன்சொன்னது:—ஒருவராகிலு மிப்போது தாழியைவிட்டால் கரைசேரலாம்; இல்லையாகில் தாழி முழுகிப்போம் என்று கூப்பிட்டான். அப்போதொரு ஸாதுவானவம்மையார். தாழிக்காரனைப்பார்த்து நீ நூறுபிராயம் புகுருவாய், உலகுக்கெல்லா முயிரான நம்பிள்ளையைக் கரையிலே கொண்டுவிடு என்று அவனைவாழ்த்தி ஆற்றிலே விழுந்தாள். அவ்வளவு கொண்டு நம்பிள்ளையு மக்கரையேறி அம்மையார் விழுந்தாளே யென்று வ்யாகுலப்பட்டுக்கொண் டிருந்தார். அம்மையாரும் நாலடிபோனவளவிலே நம்பிள்ளை திருவடிகளில் விச்வாஸவைபவத்தாலே யொருதிடர் நேர்பட்டு அதிலே நின்றாள். அப்போது இராக்குரலாகையாலும் கரைகிட்டியிருந்தபடியாலும் ஆசார்யரான நம்பிள்ளை யருளிச்செய்கிற வ்யாகுலவார்த்தையைக்கேட்டு தேவரீர் வ்யாகுலப்படவேண்டா; அடியேனிங்கே தரித்திருக்கிறேனென்று கூப்பிட்டாள். பிள்ளையுங் கேட்டு மிகவு முகந்து தாழிக்காரனைவிட்டு அம்மையாரை யழைப்பித்துக்கொண்டருளினர். இந்த வைபவத்தை ஸகலருங்கண் டாச்சர்யப்பட்டார்கள்.

பின்பொருஸாதுவம்மையாருக்கு நம்பிள்ளை திருமாளிகையருகே யொருகோல்கூற்று நிவேசமுண்டாய் அதிலேயவள் குடியிருப்பள். அவளைப்பார்த்து ஒரு ஸ்ரீவைஷ்ணவர், பிள்ளை திருமாளிகைக்கு நெருக்கமாயிருக்கையாலே இந்த நிவேசநத்தை யாசார்யருக்கு ஸமர்ப்பியுமென்று பலகாலுஞ் சொல்லிக்கொண்டிருப்பர். அம்மையாருங்கோயிலிலே கோல் கூறுநிவேசனம் ஆருக்குக்கிடைக்கும். நான் சரீரத்தோ டிருக்குமளவுங் கொடேனென்றாள். பிள்ளையு மதுகேட்டருளி யம்மையாரைப் பார்த்து உமக்கொரு சரீரத்திற்கு சிறிதிடம்போருமே மற்றது முதலிகளுக்காகக் கொடுமென் றருளிச்செய்தார். அம்மையாரும் அப்படியே செய்கிறேன், தேவரீர் அடியேனுக்குப் பரமபதத்திலே கோல்கூற்று நிவேசனந்தந்தருளவேணுமென்றாள், நம்பிள்ளையு மதற்கு [illegible]

யாலே அவனுக்கு விண்ணப்பஞ் செய்துக்கொண்டு தருகிறோமென்றருளிச் செய்தார், அவரு மெழுத்திட்டுத் தரவேணுமென்றார், பிள்ளையு மிந்த நம்பிக்கைக்கு மிகவுமுகந்தருளி இன்னவருஷம் இன்னமாஸம் இத்தனை யாவதுதேதி இந்த வம்மையாருக்குத் திருக்கலிகன்றிதாஸன் பரமபதத்தி லே யொருகோல்கூறு யெழுதிக்கொடுத்தேன், அகிலலோகஸ்வாமியுமாய் அஸ்மத்ஸ்வாமியுமான ஸ்ரீவைகுண்டநாதன் செலுத்திக் கொடுத்தருள வேணுமென்று சாஸநமெழுதி தம்முடைய திருவெழுத்துஞ் சாற்றிக்கொ டுத்தருளினார். அம்மையாருந் திருமுகத்தை முடியிலே வைத்துக்கொண்டு அன்று மற்றைநாள் பிள்ளையை ஸேவித்துக்கொண்டிருந்து மூன்றாநாள் அங்கிருக்கிறவர்களுக்குத் தெரியும்படி பரமபதத்திலே சென்றாள். ஸ்ரீ வைகுண்டத்திலே சிறுமுறிசெல்லும்படியான நம்பிள்ளையின் வைபவத் தைக்கண்டு எல்லாரு மச்சர்யப்பட்டார்கள்,

பின்பொருநாள் நம்பிள்ளை பெரிய திருவோலகத்துடனே திருவாய் மொழிக்கர்த்த மருளிச்செய்துக்கொண் டிருக்கச்செய்தே நம்பெருமாள் நம்பிள்ளையைக் கடாக்ஷித்து நீர் நம்முடைய திருமுடிப்பக்கத்திலேயிருந்து திருவாய்மொழி நிர்வஹியுமென்று நியமித்தருளினார். நம்பிள்ளையும் நாய னேன் தேவரீருடைய நியமனத்தைத் தப்பவொண்ணாது; ஆகிலுமவ்விடம் முன்பு துர்யோதனன்பற்றின விடமாகையாலே அடியார்க்குப்பற்றுமிட மாகாதென்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாளுமுகந்து முன்புபோலே கீழைப்படியிலே திருவடிப்பார்ச்வத்திலே திருவாய்மொழி நிர்வஹியுமெ ன்று நியமித்தருளினார். அதுகண்டெல்லாரு மாச்சர்யப்பட்டார்கள் பின் பொருநாள் நம்பிள்ளை பெரியதிருவோலக்கத்துடனே திருவாய்மொழி நிர் வகிக்கச்செய்தே செல்வர் நித்தியப்புறப்பாட்டிலே திருவோலக்கம் கலைவ திருப்பதாக நடந்துக்கொண்டு வருகையாலே அன்றைக்குஞ்செல்வரெழுந் தருளினபோது கோஷ்டி குலைந்தபடிகண்டு நம்பெருமாள், இன்று முதல் நமக்கிந்த கூட்டங்கலைத்தான் புறப்பாடுவேண்டாமென்றுமறுத்தருளினார். அன்றுமுதல் நாளதுவரைக்குங் கோயிலிலே செல்வர் புறப்பாடில்லை,

திருவிளக்குப்பிச்ச னென்பானொருவன் கோயிலிலே திருவிளக்குப் பார்த்துக்கொண்டுபிச்சேறினாப்போலேயிருக்கையாலே நம்பெருமாளுக்கு ரஹஸ்யகானாயிருப்பன். ஆஸ்தானத்திலே பணிவிடை செய்துக்கொண்டு வருங் கூனர் குறளர் முதலானவரிடத்திலேராஜாக்களுக்குப்ரீதியுண்டாய் அவர்களுடனே பேசுவது, பரிஹாஸம்பண்ணுவது, அவர் சொற்படிக்கு சிறிது செய்வதுண்டே? அப்படிபோலே ஸ்ரீரங்கராஜரும் திருவிளக்குப் பிச்சனோடே பேசுவது பரிஹாஸம்பண்ணுவது அவன் சொன்னது செய் வதாயிருப்பர். ஒருநாள் நம்பிள்ளை திருவாய்மொழியருளிச்செய்யும்போது நம்பெருமாள் பூபாலராய ஸிம்மாஸனத்தைவிட்டுவந்து ஸந்நிதிவாசற்படி களைத் திருக்கைகளாலே பற்றிக்கொண்டு உள்ளேயிருந்து பிள்ளையை

நோக்கி எட்டிப்பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது திருவிளக்குப் பார்க்கவந்த திருவிளக்குப்பிச்சன் நம்பெருமாளைப்பார்த்து இப்படி கலியுகத்திலே யுமக்குநினைத்தபடி செய்யலாமோ? பூபாலராயஸிம்மாஸனத்திலே போயிருமென்று அதிர்த்து வார்த்தைசொன்னான். பெருமாளு மவன்சொன்னது செய்வதாக நினைப்பிட்டிருந்தபடியாலே அவனைப் பார்த்து ஆமடா நீசொன்னதொக்கும்; ஆகிலும் நம்பிள்ளை திருவோலக்கத்தைக் காணவேணுமென்று வந்திருந்தேன்; இதோ போகிறே னென்று சொல்லி பூபாலராயனிலே யெழுந்தருளினார். இத்தை சிலரறிந்து எல்லாருக்குஞ்சொல்ல, அனைவரு மாச்சர்யப்பட்டார்கள்.

இப்படி நம்பிள்ளை மஹா வைபவத்தையுடையவரா யிருக்குமளவிலே நஞ்சீயருக்கு நூறு திருநக்ஷத்ரமாச்சுது. அப்போது திருமேனியில் நோவு சாற்றிக்கொண்டிருக்கச்செய்தே தெக்காழ்வான் பட்டரென்கிறவர் நஞ்சீயரை ஸேவித்து இப்போது தேவரீருக்குச் செய்யவேண்டுவ தேதென்று கேட்டார். அவராவது கோயிலுக் கதிபதியாயிருப்பர். ஜீயருமதுகேட்டு நமக்குப்பெருமாள் திருமேனியை மறவறக்காட்டி யநுபவிப்பிக்கையாகிற ஸர்வஸ்வதாநம் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். தெக்காழ்வான் பட்டரும் இத்தைப் பெருமாளுக்கறிவிக்க, பெருமாளும் புறப்பட்டருளி நஞ்சீயர்மடத்து வாசலிலேசென்று நஞ்சீயருக்குத்தம்முடைய திருமேனியை மறவறக்காட்டி யநுபவிப்பித்தருளினார். நஞ்சீயரும் தெக்காழ்வான் பட்டர் முதலானாருக்குச் சிலவர்த்தவிசேஷங்களை யுகப்பாலே யுபதேசித்து நம்பிள்ளைக்கும் ஹிதமருளிச்செய்து ஸ்ரீபராசரபட்டர் திருவடிகளை த்யாநித்துக்கொண்டு திருநாட்டிற் கெழுந்தருளினார். நஞ்சீயரவதார திருநக்ஷத்ரம் பங்குனியுத்திரம். நஞ்சீயர் செய்தருளின ப்ரபந்தம்:—திருவாய்மொழிக் கொன்பதினாயிரப்படி; திருப்பாவைக்கும் கண்ணிநுண் சிறுத்தாம்பிற்கும் வ்யாக்யாநம், ஸ்ரீஸூக்தபாஷ்யம். இவருடைய திருநாமம்:—வேதாந்தவேத்யர், நஞ்சீயர், மாதவாசார்யர். (ஸ்லோ) యద్వచస్స కలంశాస్త్రం యత్కృపాయా వైదికోవిధిః। యత్కటాక్షో జగద్రక్షా తంవందే మాధవమ్మునిమ్॥ இதற்குப்பொருள்:—யவருடைய சொல்லுதானே ஸகல சாஸ்த்ரங்களா யிருக்கும்; யவருடைய திருக்கடைக்கண்பார்வையானது ஸகல ஜகத்திற்கும் ரக்ஷகமாயிருக்கும்; அப்படிப்பட்ட மாதவமுநி என்கிற நஞ்சீயரை வந்தனம்பண்ணுகிறேனென்றபடி. பின்பு நம்பிள்ளை நஞ்சீயருக்குச் செய்யவேண்டுவதெல்லாஞ் செய்தருளி திருவாய்மொழி நிர்வகித்தருளும் போது நடுவிற் றிருவீதிப்பிள்ளைபட்டர், பகல் நம்பிள்ளை யருளிச்செய்த திருவாய்மொழி யர்த்தங்களையெல்லாம் ஒன்றுதப்பாமல் தரித்து ராத்ரி யெல்லாமெழுதி தலைக்கட்டினபின்பு, அத்தை நம்பிள்ளை ஸந்நிதியிலே கொண்டுவைக்க, நம்பிள்ளையுமத்தை யவிழ்த்துப்பார்த்து அது லக்ஷத்திருபத்தையாயிரங் க்ரந்தமாயிருந்தபடிகண்டு வ்யாகுலப்பட்டு இப்படி திருவாய்மொழி யர்த்தங்களை விஸ்தரித்து வெளிப்படுத்தலாமோ? இப்படி

பரந்திருக்கையாலே சிஷ்யாசார்யக்ரமம் நடக்க வரிதாயிருக்குமே, நாமு மநுமதி பண்ணவில்லையே, என்று ஸ்ரீகோசத்திலே நீரைச்சொரிந்து கரையானுக்கிரையாக்கினார். அதப்போதே போயிற்று.

பின்பு நம்பிள்ளை தமக்கு ப்ரியசிஷ்யரான பெரியவாச்சாம்பிள்ளையை நியமித்தருளி திருவாய்மொழிக்கு இருபத்தினாலாயிரப்படியைச் செய்வித்தருளினார். பின்பு நம்பிள்ளைக்கந்தரங்க சிஷ்யரான வடக்குத் திருவீதிப்பிள்ளையும் நம்பிள்ளை யுபந்யாஸத்தைப் பகலெல்லாங்கேட்டு தரித்து ராத்ரியிலே யெழுதித் தலைக்கட்டினபின்பு நம்பிள்ளை ஸந்நிதியிலே கொண்டு வைத்தார். நம்பிள்ளையு மத்தைப்பார்த்தருளி மிகவுஞ் சுருக்கமன்றிக்கே மிகவும் பரப்புமன்றிக்கே யானைக்கலங்காரஞ் செய்தாப்போலே மிகவு மழகாகவெழுதினீராகிலும்நம்முடையவநுமதியில்லாதே யெழுதினீராகையாலே அத்தையிங்குத்தாருமென்றுவாங்கிக் கட்டியுள்ளேவைத்தருளினார். இத்தைவைத்ததற்குக்கருத்து பெரியபெருமாள் நியமனத்தினாலே இதற்கு ஸகல தேசத்திலுள்ள ஸகல சிஷ்டபரிக்ரஹ முண்டாகப்போகிறதென்று. அப்படியே நம்பிள்ளை சிஷ்யரான ஈயுண்ணிமாதவப்பெருமாள் பலநாள் பெருமாளையுபாஸித்து வேண்டிக்கொள்ள, ஒருநாள் பெருமாளும் ஈயுண்ணிமாதவப்பெருமாளை யருளப்பாடிட்டு என் நம்மைப் பலவிதமாக உபாஸியாநின்றீரென்று கேட்டருளினார். ஈயுண்ணிமாதவப்பெருமாளும் நம்பிள்ளை திருக்கையிலே திருவாய்மொழிக்கு ஈடுமுப்பத்தாறாயிரமென்றொரு வ்யாக்யாநமிருக்கிறது, அத்தை யவரடியேனுக்கிரங்கி யருளும்படி நியமிக்கவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார். பெருமாளுந்திருவுள்ளம் பற்றி ஒருநாள் நம்பிள்ளையெழுந்தருளினபோது நம்பிள்ளைக்கு ஸகல வரிசைகளையும் ப்ரஸாதித்தருளி, அர்ச்சகமுகத்தாலே பிள்ளாய்! ஈடுமுப்பத்தாறாயிரத்தை ஈயுண்ணி மாதவப்பெருமாளுக்கு ப்ரஸாதியுமென்று நியமித்தருளினார். நம்பிள்ளையும் பெருமாள் நியமனத்தைப்பெற்று மிகவுமுகந்து திருமாளிகையிலே எழுந்தருளித் தஞ்சிஷ்யரான ஈயுண்ணிமாதவப்பெருமாளுக்கு ஈடுமுப்பத்தாறாயிரத்தை ப்ரஸாதித்தருளினார். நம்பிள்ளை திருநக்ஷத்ரம்:-கார்த்திகைமாசத்தில் க்ருத்திகாநக்ஷத்திரம். அவரவதரித்த ஊர்:—க்ருஷ்ணாதீரத்திலே நம்பூரென்கிற க்ராமம். திருநாமம்:—வரதராஜர்; நம்பிள்ளை; திருக்கலிகன்றிதாஸர்; கலிவைரிதாஸர்; லோகாசார்யர்; ஸ்ரீஸூக்திஸாகரர். இவர்செய்தருளின ப்ரபந்தம்:—நம்பிள்ளை ரஹஸ்யம்; திருவிருத்தவ்யாக்யாநம்.

பின்பு பெரியவாச்சான்பிள்ளையும் நம்பிள்ளைநியமனத்தாலே திருவாய்மொழியொழிந்த மற்றிருபத்துமூன்று ப்ரபந்தங்களுக்கும் வ்யாக்யாநஞ்செய்தருளினார். பரந்தரஹஸ்யம் முதலான மந்த்ரவ்யாக்யாநமும் மற்றும் பலப்ரபந்தங்களுஞ் செய்தருளினார். இந்தமுப்பத்தாறாயிரப்படி முதலான ப்ரபந்தங்கள் பிள்ளான்செய்தருளினவாறாயிரப்படிக்கு மிகவு மனு

கூலமாய் அந்நதையே மூலமாகப்பற்றிக்கொண்டு அதிலுண்டான சொல்லை யும் பொருளையும் தொடர்ந்துகொண்டு அதின்கருத்தைப் பரக்கத்தெரிவித் துக்கொண்டு விளக்கிற்கொளுத்தின விளக்குபோலே அவற்றோடும் (அவ்வாறாயிரப்படியோடும்) அவர்செய்தபரமரஹஸ்யத்தோடும் மிகவு மொன்றாய்ச்சேர்ந்திருக்கும். இவைகளுக்கெல்லாம் பட்டர்செய்தருளின வஷ்டச்லோகியென்கிற மந்த்ரவ்யாக்யாநமும் ஸஹஸ்ரநாமபாஷ்யமும் மூந்நூலாயிருக்கும். பெரியவாச்சான்பிள்ளை திருநக்ஷத்ரம்:-ஆவணியில் ரோஹிணீ, திருநாமம்:-க்ருஷ்ணபாதர், இப்படி மஹாவைபவத்தையுடைய ரான பெரியவாச்சாம்பிள்ளை ஒருநாள் பெரியபெருமாள் ஸந்நிதியிலே பெரு மாளைஸேவித்துநின்று பெரியபெருமாளைக்குறித்து தேவரீர்பரமகாருணிகரா கையாலேசேதநருஜ்ஜீவிக்கவேணுமென்றுரஹஸ்யங்களையும்வெளிப்படுத்தி நாதமுநிகளுக்கு நம்மாழ்வாரைக்கொண்டுஸாக்ஷாத்காரமாகவே அவைகளை ஸாதித்தருளி, நாதமுநிகளைக்கொண்டு ஸம்ப்ரதாய பரம்பரையாக தேவரீர் நடத்திக்கொண்டுவருகிற விந்த தர்சநவிஷயமாக தூப்பில்பிள்ளை யென்கிற வர் உபாஸனையாற்பெற்ற ஞானச்செருக்காலே அபசாரப்படா நின்று கொண்டு பின்ன (ஒரு) ஸம்ப்ரதாயத்தைப் ப்ரவர்த்திப்பித்துக்கொண்டிருக் கிறார். தேவரீர் அவரை அத்தைத்தவிர்ப்பித்துப் பூர்வாசார்ய ஸம்ப்ரதாயப் படியே நடக்கும்படி நியமித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார். பெரியபெருமாளும் அப்படியே திருவுள்ளம்பற்றி தூப்பில்பிள்ளைக்கு ஒரு ஸ்வப்நமுண்டாகும்படி செய்தருளினார். அதாவது:-தூப்பில்பிள்ளை யொரு நாள்கண்வளரும்போது ஸ்வப்நத்திலே ஸ்ரீரங்கதிவ்யநகரத்திலேதோரணங் கட்டுவதுதிருநீர்தெளிப்பதுதிருப்பிண்டியிடுவதாக இப்படிதிவ்யாலங்காரம் செல்லாநிற்க, இத்தைக்கண் டிதென்னவாச்சர்யம், இன்றைக்கதிசயமென் னென்றுதாம்விசாரியாநிற்கச்செய்தே மத்தளங்கள் சங்கங்கள் தாளங்கள் திருச்சின்னம்முதலான ஸகலவாத்யக்கோஷத்துடனே ஸமஸ்தரான ஜீயர் கள் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருங்கூடி பெரியவாச்சாம்பிள்ளையை ப்ரம்ம ரதம்பண்ணிக்கொண்டு பெரியபெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளப்பண்ணி வியாநிற்கச்செய்தே, வழியிலுள்ளார் தூபமெடுப்பார் பூமழைபொழிவார் ஆலத்திவழிப்பார் மங்களாசாஸனம் பண்ணுவாராய் நடவாநிற்கச்செய்தே திருக்கோபுரங்கட்டினவளவில் பெருமாளும் நாய்ச்சிமார்களுடனும் நித்ய முக்தர்களுடனுங்கூட வெதிர்கொண்டு பெரியவாச்சாம்பிள்ளையை உள் ளே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகாநிற்கச்செய்தே, மற்றும் கோயிலிலிருக்கும் பெரியோர்களெல்லாரும் கூட வுள்ளேயெழுந்தருளக் கண்டு தூப்பில்பிள்ளை தாமுங்கூட வுள்ளேபுகப்புக்கவளவிலே திருவாசற் காக்கும் முதலிகள் இவரை நீர் உள்ளேபோகாதே கொள்ளுமென்ன, தூப்பில்பிள்ளையும் அவதென்னென்றுகேழ்க்க, அதற்குத் திருவாசல்காக் கும்முதலிகள்சொன்னது:—பெரியபெருமாள் ப்ரவர்த்திப்பித்த ப்ரபன்ன தர்சனவிஷயமாக நீரபசாரப்பட்டீ ராகையாலே பெருமாள் திருவுள்ளம் மிகவுங் கலங்கியிருக்கிறது; ஆகையாலே பெருமாள்நியமனமில்லை, ஆகை

யாலே போமென்று தம்மைத் தள்ளிவிட்டதாகக்கண்டு தூப்பில்பிள்ளை விழித்துக்கொண்டு உள்நடுக்கத்துடனே இதென்ன ஸ்வப்நமிருந்தபடி என்று சிந்தாக்ராந்தராய் வெடிவோரே நித்தியாநுஷ்டானங்களைத் தீர்த்துக் கொண்டுபோய் திருமேனியிலே நோவுசாற்றியிருக்கிற பெரியவாச்சாம் பிள்ளையை வினவுவதாக வவர் திருமாளிகைக்கு எழுந்தருளி, ஆங்கு பெரியவாச்சாம்பிள்ளையை ஸேவித்து திருமேனியிருந்தபடி என்? என்று கேழ்க்க, பெரியவாச்சாம்பிள்ளையும் இவரைக் கடாக்ஷித்தருளி வாரீர் பிள்ளாயே? என்று அழைத்துக் கிட்டவரச்சொல்லி நமக்கு லீலாவிபூதி யிலே அர்ச்சாவதாரானுபவங்களெல்லா மாச்சுது, இனி நித்யவிபூதிக்குப் போகிறோமென் றருளிச்செய்தார். அதற்குத் தூப்பில்பிள்ளையும் தேவரீர் ஸகல வரிசைகளுடனே பெருமாளைத் திருவடிதொழுகிறதாக வடியேன் ஸ்வப்நங் கண்டேனென் றருளிச்செய்தார். பெரிய வாச்சாம்பிள்ளையு மத்தைக்கேட்டருளி மிகவுமகிழ்ந்து புளகாங்கிதகாத்ரராய் தூப்பில்பிள்ளை யைத் திருக்கையாலே யணைத்து இப்போது நீர்சொன்ன நல்வார்த்தை க்கு ப்ரதியுபகார மென்னபண்ணப்போகிறோமென் றருளிச்செய்ய, அவ்வளவிலே தூப்பில்பிள்ளையுந் தம்மைத் திருவாசல்காக்கும் முதலிகள் ஸந்நிதிக்குள்ளே போகவொட்டாமல் தள்ளிவிட்டதாகக்கண்ட ஸ்வப்நத்தை யும் விண்ணப்பஞ்செய்து இனியடியேன் செய்யவேண்டுவ தென்னென்று கேட்டார். பெரியவாச்சாம்பிள்ளையுந் தூப்பில்பிள்ளையினுடைய தசையைக் கண்டு தம்முடைய வதிசயத்தையுமறந்து இவரைக் கடாக்ஷித்து உமக்கு ஹிதமாக ஒன்று சொல்லுகிறோம். அத்தைச் செய்வீரோவென்ன, தூப் பில்பிள்ளையும் தேவரீர் நியமித்தபடி செய்கிறேனென்று விண்ணப்பஞ் செய்ய, பெரியவாச்சாம்பிள்ளை யருளிச்செய்தது:- தூப்பில்பிள்ளாய்? நீர் அநுகூலஸஹவாஸத்தைப் பண்ணாமல் அஹங்காராதிகளாலே இதர ஸஹவா ஸத்தைப் பண்ணிக்கொண்டு ப்ரயோஜநாந்தரபரராய் வித்யா நிமித்தமாக மந்த்ராந்தரங்களை யுபதேசம் பண்ணிவித்துக்கொண்டு ஹயக்ரீவோபவாஸம் பண்ணி, அத்தாற்பெற்ற வித்யாதிசயத்தை யுடையராயிராநின்றீர்; உபா ஸனையாற்பெற்ற வித்யாதிக்யத்திற்கு ப்ரயோஜநம், இதரமதநிரஸனமும் பூர்வசார்ய ஸம்ப்ரதாய பரிபாலனமு மாகையாலே அத்தைச்செய்யாதே பூர்வாசார்ய ஸம்ப்ரதாயஸித்தமான வர்த்தங்களைக்கண்டித்து விச்வாமித்ர ஸ்ருஷ்டியாக நவீனமான வர்த்தங்களை ப்ரவர்த்திப்பியாநின்றீர்; அது மஹாபசாரமாகையாலே பெருமாள் திருவுள்ளம் மிகவுங்கலங்கிற்று, ஆகையாலே யத்தைத் தவிரவேணுமென்று (பெரியவாச்சாம்பிள்ளை) அருளிச்செய்தார்.

அதற்குத் தூப்பில்பிள்ளைவிண்ணப்பம்:- அடியேனப்படிசெய்தேனோ? ஸ்ரீ பாஷ்ய க்ரந்தங்களைத்தானே ப்ரவசநம் பண்ணிக்கொண்டு அத்தை யனுஸரித்தே பின்னையுஞ் சிலக்ரந்தங்களையும் பண்ணி லோகத்திலே ப்ர வர்த்திப்பித்துக்கொண்டு போந்தேனென்று விண்ணப்பஞ் செய்தார்.

அதற்கு பெரியவாச்சாம்பிள்ளை யருளிச்செய்தது:—வாரீர் தூப்பில்பிள்ளை! ஸ்ரீ பாஷ்ய விஷயமன்று காணுமிப்போது நாஞ்சொல்லுகிறது, அதுவிஷயத்திலேதான் நீர் அனுகூலமாகச்செய்திரோ? அதுவுமில்லை, ஸ்ரீ பாஷ்ய க்ரந்தங்களிலே சிறிது குற்றங்களுண்டென்று சிந்தித்து நீ ரெழுதத்துடங்கினவளவிலே பாஷ்யகாரர் உம்முடைய ஸ்வப்நத்திலே சீறியருளி முக்கோலாலே புடைத்த பின்பன்றோ பயபக்திகளுண்டாய் அனுதாபம் பிறந்து அபராத க்ஷாமணார்த்தமாக யதிராஜஸப்ததி விண்ணப்பஞ் செய்ததும், பாஷ்ய க்ரந்தங்களைத் தானே ப்ரவசநம்பண்ணத்துடங்கினதும், ஆகையாலது கிடக்கட்டும். நம்மாழ்வார்நாதமுனிகளுக்கு திவ்ய ப்ரபந்த விஷயமாகவும், ரஹஸ்யவிஷயமாகவும், ப்ரத்யக்ஷமாக ஸாதித்த வர்த்த விசேஷங்களைக் கண்டித்து வேறே சிலவர்த்தங்களைக் கல்பியாநின்று கொண்டு வ்யாக்யானங்களைப்பரக்க வெழுதாநின்றீர்; அத்தையன்றோநாம் தவிறச்சொல்லுகிறோமென்றருளிச்செய்தார்.

அதற்குத் தூப்பில்பிள்ளை விண்ணப்பம்:—நம்மாழ்வார், தம் ரஹஸ்யங்களுக்கும் திவ்ய ப்ரபந்தங்களுக்கும் விவரணஞ்செய்ததுண்டோ? அதுண்டாகிலன்றோ அடியேனப்படி செய்ததாவது. இப்பாற்பட்டவாசார்யர்களருளிச்செய்ததன்றோ வ்யாக்யாநங்கள்! அதிலே சிலவர்த்தங்கள் ப்ரமாணகதிகளுக்குச் சேர்ந்திராமையாலே அத்தையன்றோ நாம்கண்டித்தெழுகிறோமென்று விண்ணப்பஞ் செய்தார். அதற்குப் பெரியவாச்சாம்பிள்ளை யருளிச்செய்தது:—இதப்படியன்றுகாணும்! கலியுகத்தினுடைய வாதியிலே நம்மாழ்வார் மதுரகவிகள் முகமாக ப்ரவர்த்திப்பித்த திருவாய்மொழி முதலானது கிலமாய்ப்போய் பின்பு பெரிய பெருமாள் அர்ச்சாவதாரமான நம்மாழ்வாரைக்கொண்டு நாதமுனிகளுக்கு ஸாக்ஷாத்காரமாக ப்ரஸாதிப்பிக்க, நாதமுனிகளும் ஸம்ப்ரதாயமாக மேலுள்ள வாசார்யர்களுக்கு ப்ரஸாதிக்க, அந்தவர்த்தங்களை இப்பாலுள்ள மந்தமதிகளுக்குத் தெரியும்படி பூர்வாசார்யர்கள் க்ரந்தமாக்கினமாத்ரமொழிய தாங்கள் ஸ்வயமாக ஒன்றும் வ்யாக்யாநஞ் செய்ததில்லையே; ஆகையால் நீர் அதற்கு வேறாக ப்ரவர்த்திப்பித்ததைத்தவிரக்கடவீரென்றருளிச்செய்தார். அதற்கு தூப்பில்பிள்ளைவிண்ணப்பம். ஆழ்வார் ப்ரமாணவிரோதமாக ப்ரஸாதிப்பரோ? அத்தையடியேனுகருத் தெரியவருளிச் செய்யவேணுமென்றார். அதற்குப் பெரியவாச்சாம்பிள்ளை யருளிச்செய்தது:— ஆழ்வார் முக்திதசையிலே எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரித்திருக்கிறவராகையாலே தாம் ஸாக்ஷாத்கரித்த வர்த்தங்களையே நாதமுனிகள் முகமாக ப்ரவர்த்திப்பித்தாராகையாலே அதற்கனுகுணமான ப்ரமாணங்களை யவலம்பித்துக்கொண்டு சேராதவற்றை நயிப்பிக்கவேணுமே; கண்டத்தைக்கொண்டு காணாதவற்றை யொருங்கவிடவேணுமே; காணாத்தைக்கொண்டு கண்டத்தை யழிக்கலாகாதே; ஆளவந்தார், எம்பெருமானார், திருக்குருகைப்பிரான்பிள்ளான், அருளாளப்பெருமாளெம்பெருமா

ஞர், பட்டர், நஞ்சீயர் முதலானருடைய ப்ரபாவங்களைக்கேட்டறியீரோ? அவர்களுக்குத் தெரியாததொரு ப்ரமாணகதி யுமக்குத் தெரியுமோ? அவர்களெல்லாரும் கேவல சாஸ்த்ரங்களைப்பற்ற ஆழ்வாருடைய ப்ரத்யக்ஷங்களுக்குச் சேர்ந்திருக்கிற சாஸ்த்ரங்கள் ப்ரபலமாகையாலே தத்வத்திலும் அனுஷ்டானத்திலும் நாதமுனிமுகமாக ஆழ்வா ரருளிச்செய்த கட்டளையை யுபதேச பரம்பரையாலேபெற்று அதுவே ஸத்யமென்று நிர்ணயம் பண்ணிக்கொண்டு அதற்குச் சேராதவசனங்களைக் கபிலாதி வசனங்களைப்போலே பூர்வபக்ஷம்பண்ணி அனுகூலவசனங்களை யவலம்பித்துக்கொண்டு பூர்வ ஸம்ப்ரதாயர்த்தத்தையே தங்கள் தங்கள் ஸ்ரீபாதமுடையார்க்கெல்லாம் உபதேசித்துக்கொண்டுவந்தார்கள். ஆகையாலே சிஷ்டாசாரமப்படியே யிருந்தது. இப்படி பூர்வாசார்ய ஸம்ப்ரதாயத்திற் கனுகுணமாக ப்ரமாணங்களையு முபபத்திகளையுங்கொண்டு அர்த்த நிர்ணயம் பண்ணிக்கொண்டு புதியதான வழியைவிட்டுவிடும், என்றருளிச்செய்தார். அதற்குத் தூப்பில்பிள்ளை ஸர்வக்ஞராகையாலும் ஸ்வப்னத்தினுலும் அனுதாபம் பிறந்து பூர்வாசார்யர்கள் செய்த வ்யாக்யானங்களெல்லாம் ஆழ்வாருடைய ப்ரத்யக்ஷமடியாகவந்த உபதேசபரம்பரையாலே வந்ததென்றறிந்திலேன், உலகத்தில் வ்யாக்யானங்களைப்போலே பூர்வர்கள் தங்கள் தங்கள் யுக்த்திக்கனுகுணமாகச் செய்ததென்றிருந்தேன், இப்போது ஸ்வப்னத்தினுலும் தேவரீர் அடியேனுக்கு ஸத்யபூர்வகமாக வருளிச்செய்கையாலும் உண்மையையறிந்தேன், என்றுவிண்ணப்பஞ்செய்து தம்மைவெறுத்துக்கொண்டு முன்பு தாம் பண்ணின புதுவழிக்ரந்தங்களைக் கொண்டுவந்து பெரியவாச்சாம்பிள்ளை திருமுன்பே வைத்து இருக்கிறவர்களைப் பார்த்து இனி இந்த க்ரந்தங்களை யொருவருமெங்கும் ப்ரவர்த்திப்பிக்கவேண்டாவென்று திருவாணையிட்டு, அதுவரையிலே விஞ்சி தேசாந்தரங்களிலே பரந்துபோன ரஹஸ்ய க்ரந்தங்களுக்கு மிகவும் தம்மை நொந்துகொண்டு கண்ணுங்கண்ணீருமாகப் பெரியவாச்சாம்பிள்ளை திருவடிகளிலே விழுந்து ஸேவித்துக்கொண்டிருந்தார்.

பெரியவாச்சாம்பிள்ளையும், கிட்டவிருந்த முதலிகளைக்கொண்டு தூப்பில்பிள்ளையை யெடுக்கச்சொல்லித் திருக்கைகளாலே யணைத்து அருளிச்செய்தது:—உமக்கிப்படி யநுதாபம்பிறந்தபோதே ஸமஸ்தாபசாரங்களும் நீங்கிப்போயிற்று; ஆகிலும் பெரியபெருமாள் ஆழ்வார் எம்பெருமானர் ஸந்நிதிகளிலேபோய் க்ஷாமணம் பண்ணிக்கொண்டு வாருமென்றார். தூப்பில்பிள்ளையு மத்தந்த ஸந்நிதிகளிலே யெழுந்தருளி க்ஷாமணம் பண்ணிக்கொண்டு பெரியபெருமாள் ஆழ்வார்கள் ஆசார்யர்கள் விஷயமாக க்ஷமாஷோடசீ என்கிற ஒரு ப்ரபந்தம் விண்ணப்பஞ் செய்து பெரியவாச்சாம்பிள்ளை ஸந்நிதியிலே கொண்டுவந்து விண்ணப்பஞ்செய்தார், பெரியவாச்சாம்பிள்ளையும் திருவுள்ள முகந்து தூப்பில்பிள்ளைக்கு பஞ்சஸம்ஸ்கார பூர்வகமாக ஸகலவிசேஷார்த்தங்களையும் ஸாதித்தருளினர். தூப்பில்

பின்னையு மத்தைப்பெற்று க்ருதார்த்தராய் அடியேனுக்குத் திருவாரா தனம் ஸாதித்தருளவேணுமென்று விண்ணப்பஞ் செய்தார். பெரிய வாச்சாம்பிள்ளையும் தமக்கந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவரை யழைத்து தம்முடைய கோயிலாழ்வார் திருக்காப்பை நீக்கச்சொல்லி தூப்பில்பிள்ளையைப்பார்த்து நீர்போய் கண்ணைக் கட்டிக்கொண்டு ஒருவரை யெழுந்தருளப் பண்ணிக்கொள்ளுமென்று நியமித்தார். தூப்பில்பிள்ளையு மெழுந்திருந்து ஸந்நிதியிலேபோய் தண்டன் ஸமர்ப்பித்துத் திருக்கண்களைக் கட்டிக்கொண்டு ஒருவரை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு பார்க்கு மிடத்தில் அந்த திருக்கோலம் திப்பாணாழ்வாரா யிருந்தார். அவரைக் கொண்டு தூப்பில்பிள்ளை பெரியவாச்சாம்பிள்ளை ஸந்நிதியிலேவந்து காட்டினார். பெரியவாச்சாம்பிள்ளையும் உம்முடையநெஞ்சை சோதிக்கைக்காக வெம்பெருமான் இப்படி க்ருபைபண்ணினான், ஆகையாலே இவரை நித்யமாக வாராதித்துக்கொண்டு இவருடைய ப்ரபந்தமான வமலனாதிபிரானுக்கு ஒரு வ்யாக்யாநமிடும், ஜாதிநிரூபணமடியாகவந்த வபசாரங்களையெல்லாம் பொறுத்தருளுவர், என்றருளிச்செய்து தம்முடைய பாதுகைகளையும் ஸாதித்தருளினார். தூப்பில்பிள்ளையுமத்தைப்பெற்று ஸந்துஷ்டராய் அமலனாதிப்பிரானுக்கு வ்யாக்யாநஞ்செய்து பெரியவாச்சாம்பிள்ளைஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்தார். பெரியவாச்சாம்பிள்ளையு மத்தைக்கேட்டு மிகவுமுகந்தருளினார். தூப்பில்பிள்ளையும் பெரியவாச்சாம்பிள்ளை நியமனப்படியே பூர்வாசார்ய ஸம்ப்ரதாயக்ரந்தமே காலக்ஷேபமாக வெழுந்தருளியிருந்தார். பின்பு பெரியவாச்சாம்பிள்ளையுஞ் சிலநாளிலே திருநாட்டிற் கெழுந்தருளினார். தூப்பில்பிள்ளையும் பெரியவாச்சாம்பிள்ளை ஸ்ரீபாதத்துமுதலிகளுடனேகூட சரமகைங்கர்யத்திலே யந்வயித்து திருவத்யயநாந்தமாக நன்றாக நடத்தியருளினார்.

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திலேயிருந்து ஸ்ரீவைஷ்ணவர்களாயிருக்குமவர்களுக்குத் திருப்பல்லாண்டுமுதலான திவ்யப்ரபந்தமொழிய வேறு கதியில்லை. பூர்வாசார்ய ஸம்ப்ரதாய பரம்பரையாலேவந்த திவ்ய ப்ரபந்த தாத்பர்யங்களை யறிகைக்கு பெரியவாச்சாம்பிள்ளை செய்தருளின வ்யாக்யானங்களை யொழிய வேறுகதியில்லை, ஆகையால் ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாரும் பெரியவாச்சாம்பிள்ளை ஸம்பந்தம்பெற்று அவருக்கு சிஷ்ய கோடியாயிருப்பர்கள்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை நம்பிள்ளை ஸந்நிதியிலே ஸ்ரீபாஷ்யம் முதலான ஸகல க்ரந்தங்களையும் அதிகரித்து ஈடுமுப்பத்தாறாயிரம், ஆசார்ய ஸம்மதி, முதலான வநேக ப்ரபந்தங்கள் செய்தருளி நம்பிள்ளை திருவடிகளிலே அடிமைசெய்துக்கொண் டிருக்கிறகாலத்திலே நம்பிள்ளை தமக்கிஷ்டதெய்வமான பெரியபெருமாள் திருநாமஞ் சாற்றவேணுமென்று உள்ளே நினைப்பிட்டுக்கொண்டு வடக்குத்திருவீதிப்பிள்ளைக்கொரு குமாரர் திருவவதரிக்கும்படி யநுக்ரஹஞ் செய்தருளினார். அப்படியே அற்பிசி

யில் திருவோணத்திலே வடக்குத்திருவீதிப்பிள்ளைக் கொருகுமாரர் அவதரித்தார். வடக்குத்திருவீதிப் பிள்ளையுந் தம்முடைய வாசார்ய நிஷ்டைக்கநுகுணமாகக் குமாரருக்குப் பிள்ளைலோகாசார்யரென்று தம்முடைய வாசார்யரான நம்பிள்ளையினுடைய திருநாமத்தைச் சாற்றியருளினார். பின்பு நம்பிள்ளையுமித்தைக் கேட்டருளி தம்முடைய மனோரதம் ஸித்தியாமையாலே வடக்குத்திருவீதிப்பிள்ளைக்கு இரண்டாவது குமாரர் அவதரிக்கும்படி யனுக்ரஹஞ் செய்தருளினார். அப்படியே வடக்குத்திருவீதிப் பிள்ளைக்கு இரண்டாவது குமாரர் அவதரிக்க, அவருக்கு, நம்பிள்ளையெழுந்தருளி அழகியமணவாளப் பெருமாள் நயினார் என்றுபெரியபெருமாளுடைய திருநாமத்தை சாற்றியருளினார். இப்படி பிள்ளைலோகாசார்யரும் அழகியமணவாளப்பெருமாள் நயினாரும், அதிமேதாவிகளாய் ஸகலசாஸ்த்ர நிபுணர்களாய் பிதாவான வடக்குத்திருவீதிப்பிள்ளை பக்கலிலே ஸ்ரீ பாஷ்யம் முதலான ஸகலக்ரந்தங்களையும் அதிகரித்து உபதேசபரம்பரையாலே பெற்ற வர்த்தவிசேஷங்களையெல்லாம் லோகோஜ்ஜீவநார்த்தமாக பலப்ரபந்தங்கள் செய்து வெளியிட்டருளினார்கள்.

இவர்களில் பிள்ளைலோகாசார்யர் தத்வத்ரயம் ரஹஸ்ய த்ரயம்முதலான பலப்ரபந்தங்களையும் ஸாரஸங்க்ரஹம், ஸ்ரீவசநபூஷணம், கத்யத்ரயத்திற்கு பெரியபடி சிறியபடி இரண்டு வ்யாக்யாநங்களையுஞ் செய்தருளினார். அவர் திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நயினாரும் பலப்ரபந்தங்களையுஞ் செய்தருளி ஸ்ரீவசநபூஷண ஸ்தாபனார்த்தமான வாசார்யஹ்ருதயமென்கிற மஹா ப்ரபந்தத்தைச் செய்தருளி நாதமுனிகள் முதலான பூர்வாசார்ய பரம்பரையாலே யுபதேசமாக நடந்துவந்த ரஹஸ்யார்த்தங்களையும் திவ்ய ப்ரபந்தார்த்தங்களையும் ஸ்தாபித்தார்.

ஒருநாள் நம்பெருமாளுடைய புறப்பாட்டிலே தூப்பில்பிள்ளைக்கும் அழகியமணவாளப்பெருமாள் நயினாருக்கும் ஸ்ரீவசனபூஷண விஷயமான ப்ரஸங்கம் வந்து ஒருவர்க்கொருவர் ப்ரதிக்ஞைபண்ணி அழகிய மணவாளப்பெருமாள் நயினாருபந்யஸித்தவர்த்தங்களை நம்பெருமாளங்கீகரித்தால் தூப்பில்பிள்ளை பனிரண்டுவருஷம் நம்பெருமாள் ஸேவையை யிழந்து ஸ்ரீரங்கத்தை விட்டுப் போவதாகவும், அங்கீகரியாவிட்டால் அழகிய மணவாளப்பெருமாள் நயினார் க்ரந்தஸந்யாஸம் பண்ணுவதாகவும் இப்படி நிர்ணயம்பண்ணிக்கொண்டு பெருமாளெழுந்தருளுகிற நாலுதிருவீதியிலும் நாலுப்ரகரணமாக வழகியமணவாளப்பெருமாள் நயினாருபந்யஸித்தார். அப்போது பெருமாள் சாற்றிக்கொண்டிருந்த நாலு திருமாலையும் ப்ரகரணத்திற் கொருமாலையாகத்தானே கழன்று விழாநிற்க, அந்தநாலுமாலையும் நம்பெருமாள் அழகியமணவாளப்பெருமாள் நயினாருக்கு நாலுதிருவீதிகளிலும் ஸாதித்தருளி அவருபந்யஸித்த வாசார்யஹ்ருதயத்தை யங்கீகரித்தருளினார். தூப்பில்பிள்ளையும் ப்ரதிக்ஞை பண்ணினபடி நம்பெருமாள்

ளவையைவிட்டு தேசாந்தரத்திற் கெழுந்தருளினார். அழகியமணவாளப் பெருமாள்நயினாரும் அதிவிரக்தராய் நைஷ்டிகப்ரம்மசாரியாயிருந்து உத்தமாச்ரமஸ்வீகாரஞ்செய்தருளினார். அவர் ஆசார்யஹ்ருதயம்முதலான ஸகல க்ரந்தங்களையும் தனக்கு ஸவஸ்த்ரக்குலமான பெற்றாரென்கிறவர்க்குப் ப்ரஸாதித்தார். அந்தபெற்றாரும் ஆசார்யஹ்ருதயம்பெற்றாரென்கிறவருக்கு ப்ரஸாதித்தார். அவர் திருநாராயணபுரத்தாய்க்கு ப்ரஸாதித்தார். பிள்ளை லோகாசாரியருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நயினார்ஸந்நிதியிலே கிடாம்பியாச்சான் திருவம்சமான கிடாம்பிப்பெருமாள் நயினாரென்கிறவர் ஆச்ரயித்து ஸகலவித க்ரந்தங்களையு மதிகரித்தார். அழகியமணவாளப்பெருமாள் நயினாரும் ஸந்யாஸாச்ரமத்துடனே சிலகால மெழுந்தருளியிருந்து திருத்தமயனாருக்குமுன்னாகவே திருநாட்டிற்கெழுந்தருளினார்.

ஸர்வஜ்ஞரான பிள்ளைலோகாசார்யர் திருவடிகளைப் பெரியோர்கள் பலரும் ஆச்ரயித்தார்கள். அவர்களிலே கூரகுலோத்தமதாஸர், மணற்பாக்கத்து நம்பியார், கொல்லிகாவலதாஸர், சோடியிலண்ணர், திருவாய்மொழிப்பிள்ளை நமப்பனாரண்ணர், திருவாய்மொழிப்பிள்ளை, அவருடைய திருத்தாயார், விளாஞ்சோலைப்பிள்ளை, என்றிவர்கள் முக்யராயிருப்பர்கள். மணற்பாக்கத்து நம்பியாருடனே தேவப்பெருமாள் திருவாய்மலர்ந்தருளி, சிலரஹஸ்யார்த்தங்களை ஸாதித்தருளி, இன்னுஞ் சிலவர்த்தங்களைக் கோயிலிலே அவருக்கு ஸாதிப்பதாக அவரைக்கோயிலிலேபோய் வாஸம்பண்ணும்படி நியமித்தார். மணல்பாக்கத்து நம்பியாரும் கோயில்வாஸம் பண்ணிக்கொண்டு தமக்குத் தேவப்பெருமாள் ப்ரஸாதித்த வர்த்தங்களைத் தனியிடங்களிலேயிருந்து த்யானித்துக்கொண்டிருப்பர். ஒருக்கால்பிள்ளை லோகாசார்யர், ஸ்ரீபாதத்து முதலிகளுந் தாமுமாக ஏகாந்தத்திலே ஒருவிடத்திலே யிருந்துக்கொண்டு அங்கே மணற்பாக்கத்து நம்பியாருள்ளேயிருக்கிறாரென்று தெரியாமல் ஸ்ரீபாதத்து முதலிகளுக்கு ரஹஸ்யார்த்தங்களை ஸாதித்துக்கொண்டிருந்தார். அத்தை மணற்பாக்கத்து நம்பியாருள்ளேயிருந்து கேட்டுக்கொண்டிருந்து தமக்கு தேவப்பெருமாள ஸாதித்த வர்த்தங்களும் அப்போது பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த வர்த்தங்களும ஒன்றா யிருந்தபடியாலே புறப்பட்டுவந்து அவரோ! நீரென்று சொல்லிக்கொண்டு பிள்ளைலோகாசார்யர் ஸந்நிதியிலேவிழுந்து ஸேவித்தார். பிள்ளை லோகாசார்யரும் அவரைத்திருக்கைகளாலே எடுத்தருளி நீர் ஆர்? என்ன செய்தி? என்று கேட்டருளினார். மணற்பாக்கத்து நம்பியாரும் தேவப்பெருமாள் தமக்கு நியமித்தபடியே விண்ணப்பஞ்செய்தார். பிள்ளைலோகாசார்யரும் மிகவுமுகந்து மணற்பாக்கத்து நம்பியாரைத் தமக்கு அந்தரங்க சிஷ்யராக்கிக்கொண்டு தேவப்பெருமாள் ஸாதித்தவர்த்தங்களையும் அதற்குமேலே ஸாதிக்கவேண்டுமர்த்தங்களையும் ஸாதித்துக்கொண்டிருந்தார். பின்பொருநாள் தேவப்பெருமாள் மணற்பாக்கத்து நம்பியாருடைய ஸ்வப்நத்தி

லே யெழுந்தருளி இந்தவர்த்தங்களையெல்லாங் கட்டளைப்பாடாக வொரு ப்ரபந்தமாக்கச்சொன்னோமென்று பிள்ளைலோகாசார்யருக்கு விண்ணப்பஞ் செய்யுமென்று நியமித்தார். அவருமப்படியே பிள்ளைலோகாசார்யருடைய ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்தார். லோகாசார்யருந் தேவப்பெருமாளுடைய நியமனத்தை சிரஸாவஹித்துக்கொண்டு உபதேசபரம்பரையாலே வந்தவர்த்தங்களை நாதமுனிமுதலான பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீ ஸூக்திகளைக்கொண்டே நினைந்து ப்ரதிபாதித்து அதற்கு ஸ்ரீவசநபூஷணமென்ற திருநாமஞ் சாற்றியருளினார். இந்த ஸ்ரீவசநபூஷணஸ்தாபநார்த்தமாக வாசார்யஹ்ருதயம் அவதரித்ததென்று முன்பேயெழுதிற்று.

இப்பிள்ளை லோகாசார்யர் மஹாவைபவமுடையராய் பெரியபெருமாளுக்கு ப்ராணபூதராய் எழுந்தருளியிருக்கிறகாலத்திலே துலுக்கர்கலகம் வந்து கோயிலிலே குடியிருக்கப்போகாமையாலே நம்பெருமாள் நாய்ச்சிமாருடனே கூடப்புறப்பட்டு வலசையாகவெழுந்தருளினார். லோகாசார்யரும் பெருமாளைப்பிரிந்து தரிக்கமாட்டாமல் சிலமுதலிகளுந்தாமும் பெருமாளைப் பின்றொடர்ந்தெழுந்தருளி பெருமாளுக்குத் திருமேனிக்காவலாக வெழுந்தருளியிருந்தார். அப்போது ஜ்யோதிஷ்குடி என்கிற க்ராமத்திலே யெழுந்தருளி யிருக்கச்செய்தே லோகாசார்யர் திருமேனிநோவுசாற்றிக் கொண்டிருக்கச்செய்தே தம்முடைய சிஷ்யரான விளாஞ்சோலைப் பிள்ளையைத் திருவநந்தபுரந்திலே நித்யவாஸம்பண்ணும்படி நியமித்தருளி ஸந்யாஸாஶ்ரமத்தை யங்கீகரித்தருளி ஆவணிமாஸத்தில் சுக்லபக்ஷத்தில் த்வாதசியன்று திருநாட்டிற் கெழுந்தருளினார். பின்பு நம்பெருமாள் பிள்ளையைப்பிரிந்த க்லேசத்தாலே உடனே ஜ்யோதிஷ்குடியைவிட்டு திருமாலிருஞ் சோலைமலைக் கெழுந்தருளி அங்கே சிலகாலமெழுந்தருளியிருந்து அவிடத்தில் அழகியமணவாளன் கிணறு என்கிற திருநாமத்தையுடைய ஒரு கிணற்றை யுண்டாக்கி அங்குநின்றும் புறப்பட்டு கோழிக்கோடுக் கெழுந்தருளினார். மற்ற தேசாந்தரத்திய திவ்யதேசத் தெம்பெருமான்களும் நம்மாழ்வாரும் கோழிக்கோட்டுக்கு வலசையாக வெழுந்தருளினார். அங்கே நம்பெருமாள் நம்மாழ்வாரை மிகவு முபலாளித்துத் தம்முடைய ஸிம்மாஸனமான வட்டமணையையும் முத்தின்சட்டையையும் பகற்றிருவண பந்தத்தையும் திருவீதியில் தீர்த்தப்படிகத்தையும் நம்மாழ்வாருக்கு ஸாதித்துவிட்டார். அன்றுமுதல் இன்றுவரைக்கும் நம்பெருமாளுக்கு வட்டமணை முதலானதில்லை. நம்பெருமாளங்குநின்றும் புறப்பட்டு திருவேங்கடமலைக் கெழுந்தருளி யங்கே யனேககால மெழுந்தருளி யிருந்தார்.

இனி நம்பெருமாள் புறப்பட்டருளினபின்பு கோயிலிலே நடந்த வ்ருத்தாந்த மெழுதுகிறது. பெருமாள் வலசைபோனபின்பு கோயிலை அந்த துலுக்கன் ஆக்ரமித்து ஒருமதிளைப்பிடுங்கி கண்ணனூரிலே தனக்கரணாகக்கட்டிவித்து பின்னையு மனேக உபத்ரவங்களைச் செய்யத்தொடங்கி

ஞன். அப்போது நம்பெருமாள் திருவிடையாட்டமான அழகியமணவாளனென்கிற க்ராமத்தில் காணியாள் ப்ராம்மணரான சிங்கப்பிரானென்கிற தமிழ் விரகரானவர் அந்தத் துலுக்கன் வாசலிலே கார்யப்பேராய்நின்று அவனுக்கனுகூலம்போலே சொல்லிக்கொண்டு அவன் நினைத்தபடி யுபத்ரவம்தட்டாமல் பண்ணிக்கொண்டு மதிள் மாளிகை கோபுரங்கள் மணிமண்டபங்கள் சாலைகள் தொடக்கமானவற்றையும் பெரிய பெருமாளையுங் காத்தார். அதுகண்டு அங்குள்ள வாசார்யர்களெல்லாரும் அந்த சிங்கப்பிரானுக்கு நல்வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தார்கள். பின்பு திருவாய்மொழிப் பிள்ளைதிருத்தாயார் தம்முடைய வாசார்யரான பிள்ளை லோகாசார்யரைப் பிரிந்து தரிக்கமாட்டாமல் பரமபதத்திற்குப் போனாள். அவள் குமாரரான திருமலையாழ்வாரென்கிற திருவாய்மொழிப் பிள்ளையைச் சிறியதாயாரான வம்மையார் போஷித்துக்கொண்டிருந்தார். பின்பு திருமலையாழ்வார் பருவம்நிறைந்தவளவிலே தமிழ் விரகராய் ரஸிகராயிருந்தார். அப்போது பிள்ளைலோகாசார்யருடைய சிஷ்யராய் மஹாவைபவமுடையரான கூரகுலோத்தமதாஸரென்கிறவர் கோயிலே மந்த்ரவ்யாக்யாநத்தை யெல்லாருக்கும் ப்ரவசனம்பண்ணிக்கொண்டு தர்சனத்தை ப்ரவர்த்திப்பித்துக்கொண்டிருந்தார். அந்த கூரகுலோத்தமதாஸர் தம்முடைய வாசார்யரான லோகாசார்யருக்கு சிஷ்யராய் சிறியருமான திருமலையாழ்வாரைத்திருத்தி தர்சநப்ரவர்த்தகராம்படி பண்ண நினைத்து அவர்செவிப்படும்படி திருவிருத்தப்ரபந்தத்தை யனுஸந்தித்தார். திருமலையாழ்வாரு மதற்குப் பொருள்கேட்டார். கூரகுலோத்தமதாஸரும் அவரைப்பார்த்து உமக்குச் சொல்லலாகாதென்றுசொல்லி அருவறுத்தார். திருமலையாழ்வாரு மிச்செய்தியை அம்மையாருக்குச் சொல்ல, அம்மையாருந் திருமலையாழ்வாரைப்பார்த்து நீர் பிள்ளை லோகாசார்யர் திருவடிகளை யதிபால்யத்திலே யாச்ரயித்திருந்தீர்; இப்போதிப்படி திரியாநின்றீரென்று லோகாசார்ய ஸம்பந்தத்தை ஸ்மரிப்பித்தாள். திருமலையாழ்வாரு மாசார்யரைப்பற்றுகையிலே அபிமுகராயிருந்தார். அக்காலத்திலே முன்சொன்ன சிங்கப்பிரானுக்கு அவர்செய்த வுபகாரத்திற்காக உகந்து எல்லாவாசார்யர்களும் திருமணத்தூண்நம்பியென்று திருநாமஞ் சாற்றினார்கள். திருமணற்றூணாவது:—ஸ்ரீரங்கவிமானத்திலே யிருக்கிற பரிமளப்பொற்கம்பம். மணம்=பரிமளம்; தூண்=கம்பம்.

அந்த சிங்கப்பிரானுக்கு எல்லாரு மர்த்தவிசேஷங்கள்சொல்ல, அதற்கு சிங்கப்பிரானும் பலருமருளிச்செய்கையாலே அடியேனுக்கு ஒன்றுந் தெரிகிறதில்லை; வாக்மியாயிருப்பாரொருவரைத் தெளியவருளிச்செய்யும்படி கல்பிக்கவேணுமென்றார், அவர்களுந் திருமலையாழ்வாருடையஸாமர்த்யத்தைக்கண்டு நீர்சொல்லுமென்று நியமித்தார்கள். திருமலையாழ்வாரு மப்படியே சிங்கப்பிரானுக்குச் சொல்லிக்கொண்டிருக்கச்செய்தே அதிலே சிறிது அஸம்ப்ரதாயமாயிருக்கிறபடியைக்கண்டு, கூரகுலோத்தமதாஸர் திரு

மலையாழ்வாருக்கு ஸம்ப்ரதாயார்த்தங்களைப்ரஸாதிப்பித்துப் பிள்ளைலோகாசார்யர்தமக்கு ப்ரஸாதித்த ஸ்ரீவசனபூஷணம் முதலான ஸகல ரஹஸ்யங்களையும்ஸாதித்துத் திருமலையாழ்வாரை தர்சநப்ரவர்த்தகராககினார் ஆகையாலே கூரகுலோத்தமதாஸருக்கு உதாரரென்று திருநாமமாயிற்று.பின்பு கூரகுலோத்தமதாஸர் தம்முடைய வந்திமகாலத்திலே திருமலையாழ்வாரையழைத்தருளி விளாஞ்சோலைப்பிள்ளையிடத்திலே இன்னுஞ் சிறிதுகேளும் திருக்கண்ணங்குடிப்பிள்ளை யிடத்திலே திருவாய்மொழியைக் கேளு மென்று நியமித்துத் திருநாட்டிற் கெழுந்தருளினார்.

திருவாய்மொழிப்பிள்ளையுந் திருக்கண்ணங்குடிப்பிள்ளை யிடத்திலே திருவாய்மொழி கேழ்க்கும்போது அவர் தாத்பர்யார்த்தஞ் சொல்லிக்கொண்டுவந்தார்.இவருமத்தைசப்தத்திலேஏறிட்டுச்சொல்லவேணுமென்று விண்ணப்பஞ் செய்தார். திருக்கண்ணங்குடிப்பிள்ளையு மதற்கு திருப்புட்குழிஜீயர் ஸந்நிதிக்குப் போமென்று நியமித்தார். திருமலையாழ்வாருந் திருப்புட்குழிக்குவந்தார். அன்று ஜீயர் திருநாட்டிற் கெழுந்தருளி பனிரண்டாவது நாளாயிருந்தது. இவரு மதுகண்டு மிகவுந் துக்கித்துக்கொண்டிருந்தார். அங்கே நம்பிள்ளைசிஷ்யர் ஈயுண்ணிமாதவருடைய சிஷ்யப்ரசிஷ்யராகிய நாலூராச்சாம்பிள்ளை யெழுந்தருளி யிருந்தார், திருமலையாழ்வாரு மவர்திருவடிகளிலே ஸேவித்துத் தாமிங்கெழுந்தருளின கார்யத்தை விண்ணப்பஞ்செய்தார். நாலூராச்சாம்பிள்ளையும் இவரையங்கீகரித்தருளி நாமே யுமக்குத் திருவாய்மொழி நடத்துகிறோமென்று அருளிச்செய்து நடத்திக்கொண் டிருக்கச்செய்தே இத்தைத் திருநாராயணபுரத் தாய்ப்பிள்ளைமுதலானவர்கள்கேட்டு எம்பெருமானாருடையஸ்ரீமுகமெழுதி நாலூராச்சாம்பிள்ளையைத் திருநாராயணபுரத்திற் கெழுந்தருளும்படி யனுப்பினார்கள், நாலூராச்சாம்பிள்ளையும் ஸ்ரீமுகத்தை உச்சியிலே வைத்துக்கொண்டு உகந்து திருமலையாழ்வாரையுங் கூட்டிக்கொண்டு திருநாராயணபுரத்திற் கெழுந்தருளி உடையவருக்கு உகப்பாகப்பிள்ளை திருமலையாழ்வார்முதலானாருக்கு ஈடுமுப்பத்தாறாயிரத்தை ப்ரஸாதித்து, திருமலையாழ்வாருக்குத் தம்முடைய திருவாராதனமான கண்ணனை ப்ரஸாதித்தருளினார். திருமலையாழ்வாருமத்தைப்பெற்று க்ருதார்த்தரானார். பின்பு திருமலையாழ்வார் நம்மாழ்வாரை ஸேவிக்கவேணுமென்கிற வபிநிவேசத்தாலே புறப்பட்டு நம்மாழ்வார் வலசையாகவெழுந்தருளியிருக்கிற மேல்நாட்டில் திருக்கணம்பியென்கிற வூருக்கெழுந்தருளி நம்மாழ்வாரை ஸேவித்து அவரனுமதிகொண்டு தாம்முன்னதாகத் திருநகரிக்கெழுந்தருளிக் காடுவெட்டி நாடாக்கிக்குடியேற்றி, திரும்பவுந் திருக்கணம்பிக்கு எழுந்தருளி ஆழ்வாரையெழுந்தருளப் பண்ணிவைத்துக்கொண்டு திருநகரியிலே ப்ரதிஷ்டைபண்ணிவித்துத் திருக்கோபுரம் முதலானதுகளைக் கட்டுவித்து நித்யோத்ஸவாதிகளை நடப்பித்தருளினார். அப்போது நம்மாழ்வாரும் மிகவுமுகந்து திருமலையாழ்வாருக்கு சடகோபதாஸரென்று திருநாமஞ்சாற்றி

யருளினார். பின்பு திருமலையாழ்வார் திருவனந்தபுரத்திலே விளாஞ்சோலைப் பிள்ளையைக் கணிசிக்குப்போய் அவரை ஸேவித்து அவரிடத்திலேவிசேஷார்த் தங்களைப்பெற்று அவர் விஷயமாகத் தனியனும் விண்ணப்பஞ்செய்து திருநகரிக்கெழுந்தருளினார். பின்பு சிலநாளிலே விளாஞ்சோலைப்பிள்ளை திருநாட்டுக்கெழுந்தருளின செய்தியைக்கேட்டு அவருக்கு சிஷ்யபுத்திரர்கள் செய்யுங் க்ருத்யங்களையெல்லாஞ் செய்தருளினார். பின்பு சிறிதுநாளிலே திருமலையாழ்வார் தம்முடைய மருமகனாரைப் புத்ராபிமானம்பண்ணிக் கொண்டு தெய்வப்பெருமாளென்று நாலூராச்சாம்பிள்ளை திருநாமஞ் சாத்தியருளினார்.

பிள்ளைலோகாசார்யருடைய சிஷ்யரான கொல்லிகாவலதாஸரென்கிற கோட்டூரழகியமணவாளப் பெருமாள்பிள்ளையும், லோகாசார்யர் தமக்கு ஸாதித்தருளின வர்த்தவிசேஷங்களை யநுஸந்தித்துக்கொண்டு சிக்கில் கிடாரமென்கிறவூரிலே யெழுந்தருளியிருந்தார். அதன்பின்பு எழுபத்துநாலு ஸிம்மாஸனஸ்த்தர்களிலே கோமடத்தாழ்வானுடைய திருவம்சஸ்தரான திருநாவுடைய பிரான்தாஸரண்ணரென்கிறவர் கொல்லிகாவலதாஸருடைய திருக்குமாரத்தியாரை விவாஹம்பண்ணிக்கொண்டு சிக்கில் கிடாரத்திலே அவர் திருமாளிகையிலே யிருந்துக்கொண்டு அவர் ஸந்நிதியிலே ஸகலரஹஸ்யங்களையு மதிகரித்து அவரை லோகாசார்யராகவே யநுஸந்தித்துக்கொண்டிருந்தார். பின்பு கொல்லிகாவலதாஸரும் சிலகா ளெழுந்தருளியிருந்து திருநாட்டுக் கெழுந்தருளினார். பின்பு திருநாவுடையபிரான் தாஸரண்ணரும் தேவிகளையழைத்துக்கொண்டு திருநகரியிலேபோ யெழுந்தருளி யிருந்தார்.

## மணவாளமாமுனிக ளவதாரம்.

---

அக்காலத்திலே நம்மாழ்வாரடியாக வருகிற ப்ரபத்திஸம்பரதாயங் குறைந்து வருகிறத்தைக் கண்ட பெரியபெருமாள், எம்பெருமானாரைப் போலே எல்லாரையு முஜ்ஜீவிப்பா ரொருவரையுண்டாக்குவோமென்று நினைப்பிட்டு திருவனந்தாழ்வானைப் பார்த்தருளி நீர்போய் உம்முடைய வவதாரமான திருப்புளியாழ்வா னிருக்கிற திருநகரியிலே திருநாவுடைய பிரான்தாஸ ரண்ணருடைய தேவிகள் கர்ப்பத்தையடைந்து அவதரியு மென்று நியமித்தருளினார். திருவனந்தாழ்வானு மப்படியே அண்ணருடைய தேவிகள்கர்ப்பத்தை யடைந்து கலியுகத்தில் நாலாயிரத்து நூற்றெழுபத்திரண்டாவதாய், சகவர்ஷத்தில் ஆயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றிரண்டாவதான ஸாதாரணவர்ஷத்தில் அற்பிசிமாசத்தில் இருபத்தாருவது நாளில் சுக்லபக்ஷத்தில் வ்யாழக்கிழமை சதுர்த்திகூடின மூலநக்ஷத்ரத்திலே திருநாவுடைய பிரான்தாஸரண்ணருக்குக் குமாரராக வவதரித்தருளி

ணர். பின்பு அண்ணரும் குமாரருக்கு ஜாதகர்ம்மம்பண்ணி பனிரண்டா
வது நாளிலே திருவிலச்சினையும் ஸாதித்து குமாரருடைய வடிவழகு
பெரிய பெருமாளுடைய வடிவழகுபோலே யிருக்கையாலே அவருக் கழ
கிய மணவாளரென்று திருநாமஞ்சாற்றி, இவர் ஸாமான்யரல்ல மஹானு
பாவரென்று அறுதியிட்டிருந்தார். பின்பு அழகிய மணவாளரென்கிற
குமாரரும் சிக்கில்கிடாரத்திலே அம்மான் திருமாளிகையிலேபோய் வளர்ந்
துக்கொண்டிருக்கிற நாளிலே தமப்பனாரான வண்ணரு மிவருக்கு அன்ன
ப்ராசன சௌளோபநயநாதிகளை சாஸ்த்ரப்ரகாரத்திலே செய்வித்து
வேதசாஸ்த்ரங்களையு மதிகரிப்பித்துக்கொண் டிருந்தார். அப்போ தழகிய
மணவாள ரென்கிற குமாரரும் திருவநந்தாழ்வானுடைய வவதாரமாகை
தோற்றும்படி பலராமாவதாரத்தைப்போலே சந்திரமண்டலம் திருப்பார்க்
கடல்போன்ற திருநிறத்தையுடையராய், அளவில்லாத கல்யாணகுணங்க
ளாலே சக்ரவர்த்தித் திருமகனென்றும்படியாய், எழுந்தருளியிருந்தார்.
இப்படியிவ ரவதரித்தருளின ஸாதாரணவர்ஷத்திற்கு மூன்றுவதான பரீ
தாபிவர்ஷத்தில் வையாசிமாஸத்தில் பதினேழாவதுநாளிலேநம்பெருமாள்
நாய்ச்சிமாருடனேகூட கோயிலுக்கெழுந்தருளினர். கோபணார்யரென்கிற
வர் நம்பெருமாளைத் திருமலையில் நின்றுஞ் செஞ்சியிலே யெழுந்தருளப்
பண்ணிவித்து அங்கே சிறிதுநாளாராதித்து துலுக்கரையெல்லா மடித்து
செஞ்சியில்நின்றும் பெருமாளைச் கோயிலுக் கெழுந்தருளப் பண்ணிவித்தா
ராகையாலே நம்பெருமாள் கோயிலுக்கெழுந்தருளினர். நம்பெருமாளும்
கோயிலிலே எழுந்தருளியிருந்துக்கொண்டு தம்முடைய திருநோக்குப்
பக்கமான தெற்குதிக்கில் சிக்கில் கிடாரத்திலே வளருகிற வழகியமண
வாளப்பெருமாளைக் கடாக்ஷித்துக்கொண்டிருந்தார். அப்போது அண்ண
ரும் தம்முடைய குமாரரான வழகிய மணவாளப்பெருமாளுக்குத் திருக்
கல்யாணஞ் செய்வித்து திவ்ய ப்ரபந்தங்களையு மோதுவித்தார். பின்பு
சிலநாளிலே தமப்பரானவண்ணர் திருநாட்டிற் கெழுந்தருளினர். அவ
ருக்கு அழகியமணவாளப்பெருமாளுஞ் சிஷ்யபுத்ரர்கள் செய்யவேண்டிய
வற்றையெல்லாஞ் செய்தருளினர்.

அக்காலத்திலே திருநகரியிலே யெழுந்தருளியிருக்கிற திருமலையாழ்
வார் இனிதர்சந ப்ரவர்த்தகராவாரரென்று நினைத்துக்கொண்டிருக்கச்
செய்தே அழகியமணவாளப்பெருமாளுஞ் சிக்கிற் கிடாரத்தினின்றும்
புறப்பட்டு திருநகரிக்கெழுந்தருளி திருமலையாழ்வார் திருவடிகளையாச்ர
யித்தார். பின் பழகியமணவாளப்பெருமாளும் திருவாய் மொழிப்பிள்ளை
ஸந்நிதியிலே த்ராவிடவேதங்களுடைய தாத்பர்யங்களை யெல்லாமறிந்து
அதிலே நிஷ்டராயிருந்தார். திருமலையாழ்வாருந் திருவாய்மொழியினுடைய
ரஸானுபவத்திலேயே மிகவுமூன்றியிருக்கையாலே அவருக்குத்திருவாய்
மொழிப்பிள்ளையென்று திருநாமமாயிற்று. பின்பு திருவாய்மொழிப் பிள்
ளையு மழகியமணவாளப்பெருமாளுடைய நிஷ்டாவிசேஷத்தாலே மிகவு

ழுகந்து அவருக்கு உடையவருடைய திருவடிகளையே பரதெய்வமாகத் தந்தரு ளினர். இவருமதனைப்பெற்று க்ருதார்த்தரா யெழுந்தருளியிருந்தார். அப்போது திருவாய்மொழிப்பிள்ளையும் திருநகரியிலே உடையவருக்குத் தனிக் கோயில்கட்டிவைத்து உடையவர் சோலையையும் விராமாநுஜ சதுர்வேதி மங்கலமென்கிற திருவீதியையுமுண்டாக்கி அதில்பெரியோர்களையும் ப்ர திஷ்டிப்பித்தார். பின்பு அழகியமணவாளப்பெருமாளும் அந்த உடைய வர் திருவடிகளிலே மிகவும்ப்ரவணராய் அவர்விஷயமாக யதிராஜவிம்சதி யென்கிற ப்ரபந்தத்தை விண்ணப்பஞ்செய்தார். அதினால் அழகியமண வாளப்பெருமாளுக்கு யதீந்த்ரப்ரவணரென்று திருநாமமாயிற்று.

(ஆக யதிராஜவிம்சதி மணவாளமாமுனிகள் வடதேசயாத்ரை யெழுந் தருளுவதற்கு முன்னேதானே பாண்ட்யதேசத்திலே ஆழ்வார் திருநகரி யிலே சதுர்வேதிமங்கலத்திலே யெழுந்தருளியிருக்கிற எம்பெருமானார் விஷயமாகச் செய்ததாகையாலே இது ஸ்ரீபெரும்பூதூரிலேவந்து செய்த தில்லை.)

பின்பு யதிராஜவிம்சதியை திருவாய்மொழிப்பிள்ளை கேட்டருளி மிகவுமுகந்து திருப்புளியாழ்வாரடியிலே தாங்கண்ட தம்முடைய உடைய வரையிவருக்குத் திருவாராதனமாகக் கொடுத்தருளி இவரிடத்திலே விசே ஷாபிமானஞ் செய்துக்கொண்டிருந்தார். அப்போது திருவாய்மொழிப் பிள்ளையினுடைய ஸ்ரீபாதத்து முதலிகளுக்கு யதீந்த்ரப்ரவணரிடத்திலே சிறிது அஸூயையுண்டாக, அத்தைஸர்வக்ஞரான திருவாய்மொழிப்பிள்ளை யறிந்தருளி அவர்களபசாரப்படாதபடி இவர் சேஷாவதாரமென்று சாதும்படி உபபத்திகளைக்கொண்டு மூதலித்துக்காட்டி அவர்களஸூயை யைத்தவிர்ப்பித்து இவரிடத்திலேயவர்களுக்கு ப்ரேமத்தையுண்டாக்கியரு ளினர். பின்பு யதீந்த்ரப்ரவணருக்குக் குமாரரவதரிக்க அவருக்குத் திருவாய் மொழிப்பிள்ளை நியமனத்தினாலே ராமாநுஜய்யனென்று திருநாமஞ்சாற்றி யருளினர். பின்பு திருவாய்மொழிப்பிள்ளையுந் தம்முடைய திருவாராதன மான கண்ணனிடத்தில் அதிப்ரேமத்தாலே கண்ணன்சரிதத்தை நன்றாகக் காட்டுகிற பெரியாழ்வார் திருமொழிக்குப் பெருக்க வ்யாக்யாநஞ் செய் தருளினர். பின்பு சிலநாளிலே திருவாய்மொழிப்பிள்ளைக்குத் திருநாட்டிற் கெழுந்தருளவேணுமென்று மிகவும் வாஞ்சையுண்டாய் திருமேனியிலே நோவுசாற்றிக்கொண்டிருக்கிறபோது அவருக்குத் திருவுள்ளத்திலே சிறிது குறையுண்டானதாகத் தோற்றி, யதீந்த்ரப்ரவணர் முதலான முதலிகள், ஸந்நிதியிலேவந்து திருவாய்மொழிப்பிள்ளையை சேவித்து திருவுள்ளத்தி லே என்னகுறை யென்றுகேழ்க்க, திருவாய்மொழிப்பிள்ளை யருளிச்செய் தது:—காலங் கலியுகமாகையாலே ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளை ருசிவிச் வாஸங்களோடே வளர்த்துக்கொண்டிருப்பா ராரென்று மிகவுங் க்லேச மாயிராநின்றதென் றருளிச்செய்தார். பின்பு யதீந்த்ரப்ரவணருந்திருவடி களிலே ஸேவித்து அடியேனப்படியே செய்கிறேனென்று விண்ணப்பஞ்

செய்தார். திருவாய்மொழிப்பிள்ளையு மதுகேவலம் வார்த்தையால் போராதென்ன, யதீந்த்ரப்ரவணருந் திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளைத் தொட்டு அடியேன் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டே காலக்ஷேபம் பண்ணுகிறேனென்று விண்ணப்பஞ்செய்தார். திருவாய்மொழிப்பிள்ளையுந் திருவுள்ளமுகந்து நீர் நிர்வாணசாஸ்த்ரங்களில் பலகாலுங் கண்வையாதே எம்பெருமானாருக் குகப்பாக ஸ்ரீபாஷ்யத்தை யொருக்கால்கேட்டு நமக்கு மெம்பெருமானாருக்கும் மிகவும் ப்ரியமாக திருவாய்மொழி முதலான ஸ்ரீஸூக்திகளிலே பரிசீலனம்பண்ணிக்கொண்டு நம்பெருமாளுக்கு மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு கோயிலிலேநித்யவாஸமாகவிருமென்று ஆஜ்ஞாபித்து ஸ்ரீபாதத்து முதலிகளையும் மற்றுமுண்டானவர்களையும் அழைத்தருளி யதீந்த்ரப்ரவணர் கையிலேகாட்டிக்கொடுத்து முதலிகளைப் பார்த்து இவரவதாரவிசேஷம், நம்மைப்பார்த்தாப்போலே இவரைப்பார்த்துக்கொண்டு இருங்கோளென்று நியமித்து பிள்ளை லோகாசார்யருடைய திருவடிகளை த்யானித்துக்கொண்டு வைகாசிமாசத்தில் க்ருஷ்ணபக்ஷத்தில் அஷ்டமியில் (திருவாய்மொழிப்பிள்ளை) திருநாட்டிற்கெழுந்தருளினார். இவரவதார திருநக்ஷத்ரம்:—வையாசிவிசாகம். அவதாரஸ்தலம்:—குந்திநகரம். திருநாமம்:—திருமலையாழ்வார்; ஸ்ரீசைலேசர்; சடகோபதாஸர்; திருவாய்மொழிப்பிள்ளை; காடுவெட்டிஐயயன். இவர்செய்தருளினப்ரபந்தம்:-பெரியாழ்வார்திருமொழி வ்யாக்யாநமும், ஸ்ரீவசநபூஷணத்திற்கொரு வ்யாக்யாநமும், வ்யாப்த்யநுஸந்தாநமென்கிற க்ரந்தமும்.

பின்பு யதீந்த்ரப்ரவணர், ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையினுடைய சரமகைங்கர்யத்தை நன்றாக நடப்பித்துத் திருநகரியிலே தர்சநத்தை வளர்த்துக்கொண்டிருக்கிறகாலத்திலே, அழகியவரதர் ஸேனைமுதலியார் அண்ணர்துடக்கமானவர்கள் இவர் வைபவத்தைக்கேட்டு வந்திவர் திருவடிகளை யாச்ரயித்தார்கள். அவர்களில் அழகியவரதர் கடுக ஸந்யாஸாச்ரமத்தை யடைந்து ராமானுஜ ஜீயரென்று திருநாமத்தை யுடையவராய் யதீந்த்ரப்ரவணருக்கு பாதரேகையாய் பிரியாமல் அடிமைசெய்துக் கொண்டிருந்தார். பின்பு சிலநாளிலே யதீந்த்ரப்ரவணர் நம்பெருமாளுக்கு மங்களாசாஸனம் பண்ணவேணுமென்று திருவுள்ளம்பற்றி ஆழ்வார் திருமுன்பேசென்று சேவித்து "நம்பெருமாள் விரோதிகளையெல்லாம் நசிப்பித்து திருவரங்கந் திருப்பதியிலே பாங்காக முன்புபோலே யெழுந்தருளியிருக்கிறார்; அடியேன் நம்பெருமாளை ஸேவிக்க விடைகொள்ளுகிறேனென்று" விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும்விடைகொடுத்தருளினார். பின்பு யதீந்த்ரப்ரவணரும் முதலிகளுடனே கூட திருநகரியினின்றும் புறப்பட்டு ஸ்ரீவில்லிபுத்தூரிலே ஆண்டாளையும் பெரியாழ்வாரையும் வடபெருங் கோயிலுடையானையும் சேவித்து அங்குநின்றும் திருமாலிருஞ்சோலைக் கெழுந்தருளி யழகரை ஸேவித்து அங்குநின்றுங் கோயிலுக் கெழுந்தருளினார். அப்போது கோயில்பரிகரங்களெல்லாம் எதிர்கொண்டுவந்து ஸேவி

த்து உள்ளே யழைத்துக்கொண்டுபோக, இவரும் எழுதிருவிதிகளையும் ஸேவித்து கோடியி லண்ணன் திருமாளிகையிலே எழுந்தருளினார். கோடியிலண்ணனுவது பிள்ளைலோகாசார்யருடைய சிஷ்யரென்று முன்பே யெழுதித்து. இவர் பெருமாள் உலாசபோனபோது கோயிலைவிட்டுத் திருமெய்யத்திலேபோய், இருபத்தினாலாயிரப்படியை ப்ரவசநம்பண்ணிக் கொண்டிருந்து பெருமாள் திரும்பவுங் கோயிலுக்கெழுந்தருளின பின்பு கோயிலிலே குடியேறி யெழுந்தருளியிருந்தார். இந்தக்கோடியிலண்ணர் யதிந்த்ரப்ரவணரைக் கண்டு மிகவும் அவதாரவிசேஷமென றுகசித்து இவரைப் பெருமாளை ஸேவிக்கப் பண்ணுவதாகக் கோயிலுக் கதிபதியாயிருக்கிற திருமாலைதந்த பெருமாளென்கிற பட்டராணுமதிக்காக பட்டர் திருமாளிகைக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோக, பட்டரும் யதீந்த்ரப்ரவணரைக்கண்டு அத்யாதரத்துடனே யெழுந்திருந்து ஸேவித்து உபசாரங்களைப்பண்ணி ஆஸனத்திலே யெழுந்தருளவைத்துக்கொண்டு மிகவு மாதரித்து திருவாய்மொழியிலே ஈட்டிற்படியே யொருபாட்டிற்குப் பொருளருளிச்செய்யவேணுமென்று விண்ணப்பஞ் செய்தார். யதீந்த்ரப்ரவணரும் அப்படியே ஸ்வாப்ரவாஹம்போலே யுபந்யஸித்தருளினார். அதை பட்டர் கேட்டருளி யத்யாச்சர்யப்பட்டு யதீந்த்ர ப்ரவணருக்கு முப்பத்தாறாயிரப் பெருக்கரென்று திருநாமஞ்சாற்றித் தம்முடைய ஸன்னிதிப்பிள்ளையும் மற்றப்பரிகரங்களையும் கூடக்கூட்டி நம்பெருமாளை மங்களாசாஸனம் பண்ணும்படி யனுப்பியருளினார். பின்பு யதீந்த்ரப்ரவணரும் ஸ்வாக்ரமத்திலேஸேவித்துக்கொண்டு பெரியபெருமாளையும் நம்பெருமாளையும் ஸேவித்து மிகவுமானந்தித்து மங்களாசாஸனஞ்செய்தருளி கோடியிலண்ணருடனே கூட அவர்திருமாளிகைக்கெழுந்தருளினார். பட்டரும் அமுதுபடி பருப்பமுதுமுதலான வனேகஞ்சிறப்பு எடுத்துவரக்காட்டியருள, வதனையுமங்கீகரித்தருளினார். பின்பு பிள்ளைலோகாசார்யர் முதலான பூர்வாசார்யர்களுடையவைபவங்களைக் கோடியிலண்ணரருளிச்செய்யக்கேட்டுக்கொண்டு பூர்வாசார்யர்க ளெழுந்தருளியிருந்த திருமாளிகைகள்நிலைகளையுந்தந்த திருவாசலிலேஸேவித்துமிகவு மாதரத்துடனே லோகாசார்யர்கள் முதலான வாசார்யர்களையே நினைத்துக்கொண் டெழுந்தருளியிருந்தார். பின்பொருநாள் யதீந்த்ரப்ரவணர் நம்பெருமாளை ஸேவித்திருக்கச்செய்தே பெருமாள் யதீந்த்ரப்ரவணரைக்கடாக்ஷித்து திருப்பவளந்திறந்து நம்முடையவரைப் போலேநீரும்நம் வீட்டில்கார்யத்தையுந்தர்சநத்தையும் ஆராய்ந்துக்கொண்டு சரீராவஸானத்தளவும் இங்கேயிருமென்று நியமித்தருளினார். யதீந்த்ரப்ரவணரும் மஹாப்ரஸாதமென்றங்கீகரித்து நியமித்தபடியே எழுந்தருளியிருந்தார். அக்காலத்திலே அங்குண்டான ரஹஸ்யப்ரபந்த ஸ்ரீகோசங்களையெல்லாம் திருக்கண்சாற்றி ஜீர்ணோத்தாரணம்பண்ணி ப்ரகாசிப்பித்துக்கொண்டிருந்தார்.

திருப்பணி திருவாராதனம் நடத்திக்கொண்டுபோருகிற வுத்தமநம்பியானவர் தாழ்வாகநடத்திக்கொண்டு போருகிறபடியைக்கண்டு அவரைத்

தாம் நியமித்தும் பெருமாளைக்கொண்டு நியமிப்பித்தும், திருப்பணி திருவாராதனந் தொடக்கமானவற்றைப் பெருக்கநடத்தி யருளினார். பின்பு யதீந்த்ரப்ரவணர் திருமலைமுதலான வடதிசையிலுள்ள திருப்பதிகளைத் திருவடிதொழவேணுமென்று திருவுள்ளமாய் நம்பெருமா ளனுமதிகொண்டு புறப்பட்டு பெருங்கூட்டத்துடனே திருவெள்ளறைத் திருக்கோவலூர் ஸேவித்துக்கொண்டு திருமலைக்கெழுந்தருளி ஸேவாக்ரமத்திலே பெரியாழ்வார்முதலான வாழ்வார்களையும் ஸேவித்து இரண்டாஞ்சுற்றிலே கருமாணிக்கப் பெருமாளை ஸேவித்துப் பெருந்தேவியாரையும் ஸேவித்து உள்சுற்றிலே யெழுந்தருளி ஹஸ்திகிரியடிவாரத்திலே அழகியசிங்கரை ஸேவித்து அங்குநின்றும் புறப்பட்டு, அக்காலத்திலே சூடிக்கொடுத்த நாச்சியார் ஸந்நிதி யில்லாமையாலே ஸேனைமுதலியாரை ஸேவித்து, ஸேவாக்ரமத்திலே ஹஸ்திகிரியேறியருளிப் பேரருளாளரை ஸேவித்துநிற்க, பேரருளாளரும் திருப்பவளந்திறந்து நம்மிராமானுசனைப்போலே யிருப்பா ரொருவரைப் பெற்றோமென் றருளிச்செய்து, ஸகல வரிசைகளையும் ஸாதித்து விடைகொடுத்தருளப் புறப்பட்டு, திருவெஃகா முதலான திருப்பதிகளை ஸேவித்துக்கொண்டு புறப்பட்டு ஸ்ரீபெரும்பூதூருக் கெழுந்தருளி ஸ்ரீபாஷ்யகாரரை ஸேவித்து மிகவு மீடுபட்டு இன்பவெள்ளத்திலேமூழ்கி மங்களாசாஸநம்பண்ணி ஸ்ரீபாஷ்யமதிகரிக்கைக்கு உடையவ ரனுமதிகொண்டு திரும்பவும் பெருமாள்கோயிலுக்கெழுந்தருளி, அங்கே கிடாம்பியாச்சான் திருவம்சஸ்தராய் ப்ரம்மதந்த்ரம் ஜீயர் ஸந்நிதியிலே ஸ்ரீபாஷ்யமதிரித்து லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நயினார் ஸந்நிதியிலே ஸகல ரஹஸ்யங்களையும் முப்பத்தாறாயிரப்படி முதலான ஸகல ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் அதிகரித்து மிகவும் விலக்ஷணரா யிருக்கிறகிடாம்பி திருமலைநயினார் ஸந்நிதியிலே ஸ்ரீபாஷ்யமதிகரித்துக்கொண்டு சிலநாளெழுந்தருளியிருந்து, ஸ்ரீபாஷ்யந் தலைக்கட்டினபின்பு அங்குவந்தாச்ரயித்த பெரியோர்களுக்கெல்லாம் உபயவேதாந்தம் ஸாதித்துக்கொண்டு சொன்னவண்ணஞ்செய்த பெருமாளான தேவபிரான் ஸந்நிதியிலே சிலகால மெழுந்தருளி யிருந்தார். அத்தாலே சொன்னவண்ணஞ்செய்த பெருமாள் ஸந்நிதியிலே எழுந்தருளியிருக்கிற யதீந்த்ரப்ரவணர் ஜ்ஞாநமுத்ரையுடனும் திரிதண்டத்துடனுமின்றுவரைக்கு மெழுந்தருளி யிருக்கிறார். பின்பு யதீந்த்ரப்ரவணரும் தேவபிரானை யனுமதிகொண்டு அங்குண்டான தர்சனக்ரந்தங்களையுமெடுப்பித்துக்கொண்டு கோயிலுக்கெழுந்தருளி, அவர் நியமனத்தாலே அங்கேநித்யவாஸம் பண்ணிக்கொண்டு பெருமாளுக்கு மங்களாசாஸனபரரா யெழுந்தருளியிருந்தார். அக்காலத்திலே பெருமாளுடைய ஸேவைக்கு விரோதியான ஆசௌசத்தைச் சிலர்வந்து விண்ணப்பஞ்செய்ய, அத்தைக்கேட்டு நம்பெருமாள்ஸேவையில்லாமையாலே க்லேசப்பட்டு அப்போதே தம்முடையவாசார்யரான திருமலையாழ்வாருக்குசிஷ்யரான சடகோபஜீயர்ஸந்நிதியிலே ஆச்ரமஸ்வீகாரஞ்செய்தருளிசடகோபஜீயரென்று திருநாமம்பெற்று நம்பெருமாளைஸேவித்துநிற்க, நம்பெருமா

ரும் மிகவுமாதரித்தருளி தம்முடைய திருநாமமான முக்தின திருநாமத்தை யெஸாதித்தருளி, நம்முடைய அழகியமணவாளஜீயரை பல்லவராயன்மடத் திலே விட்டுவாருங்கோளென்று உத்தமநம்பி முதலான பரிகரத்தையு மிவர்பின்னே யனுப்பியருள, அவர்களுமிவரை ஸேவித்துக்கொண்டு மடத் திலே யெழுந்தருளப்பண்ணிவைத்தார்கள்.

பின்பு அழகியமணவாளஜீயரும் ராமாநுஜஜீயர்முதலான முதலி களைக்கொண்டு மடத்தைச் சொப்பனிடுவித்துத் திருவாய்மொழிப்பிள்ளை யின் திருநாமத்தாலே திருமலையாழ்வாரென்று வ்யாக்யான மண்டபத்தை யுண்டாக்கி, ரஹஸ்யங்கள் விளைந்தவிடமான லோகாசார்யர் திருமாளிகை நிலைகளிலுண்டான மண்ணுலேயதற்குத் திருப்பூச்சபூசுவித்து அவ்விடத் தைக் குருகுலவாஸமாக வெண்ணிக்கொண்டு திருவாய்மொழிப்பிள்ளை திரு வடிச்சாயையிலேயிருந்து வ்யாக்யாநித்துக்கொண்டுபெரியவாதரத்தோடே பெரியபெருமாளுக்குப் பெருக்கமங்களாசாஸனத்தைப் பண்ணிக்கொண் டிருந்து, அதினாலே பெரியஜீயரென்றுதிருநாமம்பெற்று அங்குள்ள பெரி யோர்களாலே ஆச்ரயிக்கப்பட்டிருந்தார். பின்புகோவிந்ததாஸரப்பரென்று திருநாமத்தையுடையவரான பட்டர்பிரான் ஜீயரும் பெரியஜீயர் திருவடி களை யச்ராயித்துப் பிரியாமல் அடிமைசெய்துக்கொண்டிருந்தார். பின்பு பெரியஜீயர் பெரியபெருமாளுடைய நியமனத்தாலே ஸ்ரீ ரங்கராஜரைத் தமக்குத் திருவாராதனமாக வெழுந்தருளப்பண்ணிவித்து, லோகாசார்ய ருடைய திருநக்ஷத்ரமான ஐப்பிசியில் திருவோணத்திலே திருப்ரதிஷ்டை பண்ணிவித்து ஆராதித்துக்கொண்டு ஆசார்யஸ்ரீக்ரு இருப்பிடமாகவிருந் தார். அப்போது அத்தேசத்திலுந் தேசாந்தரத்திலுமுள்ளா ரெல்லாரும் இவருடைய வைபவத்தைக்கண்டுங்கேட்டும் திரள்திரளாகவந்திவர்திருவடி களை யாச்ரயித்தார்கள்.

பின்புபெரியபெருமாள் திருப்பவளந்திறந்தும் ஸ்வப்நத்திலும் பலமுக மாகப் பெரியஜீயராகிறார் நாமேயாயிருக்கும்; ஆகையால் அவரை யாச்ர யிங்கோளென்று நியமித்தருளுகையாலே ராமாநுஜபரிக்ரஹத்தாலும் அபிஜநு (மஹஜநா) திகளாலும் உயர்ந்திருக்கிற கந்தாடையண்ணன் முத லான வாசார்யபுருஷர்களும், முன்புண்டான வதிசயமிருக்கச்செய்தே மேற்பட்ட வதிசயமும் வேணுமென்று பெரியஜீயருடைய திருவடிகளை யாச்ரயித்தார்கள். வண்டுகள் பலபூக்களிலும் பலதுளித்தேன்கொண்டு பெருந்தேன்கூட்டுமாப்போலே பலவாசார்யஸம்பந்தத்தாலே பலவதிசயங் களைப்பெற்று மஹாவைபவத்தையுடையராய் உலகத்திற்கு ஆசார்யபுரு ஷர்களாயிருப்பர்களாகையாலே, எழுபத்திநாலு ஸிம்மாஸனஸ்தர்களிலே யொருவராகிய கோமடத்தாழ்வான் திருவம்சஸ்தரான பெரியஜீயரை யாச்ரயித்தவர்களுக்கு, முன்னிருந்த வாசார்யபுருஷத்வத்திற்கு முன்பில் லாதவதிசய மிப்போதுண்டாய்த்து, ப்ரம்மசர்யம்முதலான நான்காச்ர

மங்களிலே உத்தரோத்தராச்ரமங்களைப்பெற்றால் பூர்வபூர்வாச்ரமமதிசயி க்குமாப்போலே குணாதிகரான மேல்மேலாசார்யர் ஸம்பந்தத்தாலே பூர்வ பூர்வாசார்யகளிடத்திற்பெற்ற நல்லறிவிற்கழிவில்லாமையாலே ஆசார்ய புருஷத்வத்திற்கழிவில்லை.

பின்பு க்ருஷ்ணானந்தி யென்கிற ஏகதண்டி ஸந்யாஸி, கோயிலிலே வந்து தன்னோடே சாஸ்த்ரவாதம்பண்ணச்சொல்ல, பெரியஜீயரும் இவ னோடே வாதம்பண்ணும்போது மங்களாசாஸன விரோதமாமே! வாதம் பண்ணாவிட்டால் விரோதி நிரஸனம் ஸித்தியாதே! என்ன செய்வோ? மென்று சிந்தித்துக்கொண்டிருக்கச்செய்தே, பெரியபெருமாள் நியமனத் தாலே வேடலப்பைக்கு பெரியபெருமாள் ஸ்ரீமுகத்தை யனுப்ப, முதலி யாண்டான் திருவம்சஸ்தராய் மஹாவைபவமுடையவரான வேடலப்பை யும் ஸ்ரீமுகத்தை சிரஸாவஹித்து தம்முடைய ஸந்நிதியிலேஸகலசாஸ்த்ரங் களை யு மதிகரித்த மஹா வித்வானாகிய தாசரதியாச்சானையுங்கூடக் கூட் டிக்கொண்டு (கோயிலுக்கெழுந்தருளி) நம்பெருமாளை மங்களாசாஸனஞ் செய்தருளி ஸகலஸ்ரீசைகளையும் விசேஷ கடாக்ஷங்களையும்பெற்று, ஸ்ரீ ரங்கநாயகியாரை மங்களாசாஸனஞ் செய்தருளி அவருடைய பரிபூர்ண கடாக்ஷம்பெற்று ஸம்மானமும்பெற்று வில்வவ்ருக்ஷத்திற்கு ஸமீபமாக வெழுந்தருளச்செய்தே அப்போதவ்விடத்தில் ஜபம்பண்ணிக்கொண்டிருக் கிற ஏகதண்டியானவன் இவர்களைக்கண் டெழுந்திருந்து தனக்கு ஸகல சாஸ்த்ரங்களும் படிப்பித்த வேடலப்பையை தண்டனிட்டு நின்றான். வேடலப்பையு மவனைப்பார்த்து குசலப்ரச்நம்பண்ணினார். அவனும் தான் வந்த கார்யத்தை வேடலப்பைக்குச் சொன்னான். வேடலப்பையு மதற் கன்றோ நாமிங்கேவந்ததென் றருளிச்செய்தார். ஆனாலபசாரப்பட்டே னென்று பயப்பட்டு தண்டனிட்டுநின்றான். வேடலப்பையு மண்ணன் திருமாளிகையிலே யெழுந்தருளி அண்ணனும் வேடலப்பையும் தாசரதி யாச்சானும் அமுதுசெய்தருளி, க்ருஷ்ணாநந்தனென்கிற ஏகதண்டி இவர்க ளுடைய ப்ரஸாதத்தை யர்த்தித்தானுகையால் ஒருபரிசு ப்ரஸாததத்தை யவனுக்கு ப்ரஸாதித்தார்கள். அவனு மிவர்களனுமதிகொண்டு புறப்பட் டுப்போய்விட்டான். பின்பு வேடலப்பையையுந் தாசரதியாச்சானையுங் கூடக் கூட்டிக்கொண்டு அண்ணன் பெரியஜீயர் ஸந்நிதியிலேயெழுந்தருளி தண்டன் ஸமர்ப்பித்து க்ருஷ்ணாநந்தன் போய்விட்டசெய்தியை விண்ணப் பஞ்செய்ய, பெரியஜீயரும் அண்ணனையும் வேடலப்பையையும் தாசரதி யாச்சானையுங் கடாக்ஷித்து மிகவுமுகந்து உகப்பினுடைய வதிசயத்தாலே முதலியாண்டான் திருவம்சவிஷயமாக விரண்டு ச்லோகத்தை யருளிச் செய்து பரிபூர்ணாநுக்ரஹஞ்செய்தருளி, வேடலப்பையையுந் தாசரதியாச் சானையும் ஸந்நிதியிலே நித்யவாஸம்பண்ணும்படி நியமித்தருள, வேடலப் பையும் வார்த்திக்யமானபடியாலே தாசரதியாச்சானை யிங்கேயிருக்கும் படி நியமித்து தாம் பெரியஜீயர் ஸந்நிதியிலே அனுமதிபெற்று, மிகவும்

டவாளனம்பெருமாடெழுந்தருளினார். பின்பு தாசரதியாச்சானும் மஹாவாச்மியார்கையாலே பெரியஜீயர் ஸந்நிதியிலே யிருந்துகொண்டு பரவாதிநிரஸனம் பண்ணிக்கொண்டு ஸந்நிதியிலே ஸகல ரஹஸ்யங்களையு மதிகரித்துக்கொண் டிருந்தார். பின்பு சிறிது நாளிலே பெரியஜீயர் தாசரதியாச்சானை ஏகாந்தத்திலே கடாக்ஷித்தருளி ஆச்சானே! நெடுநாளாச்சுதே, ஆயி அண்ணாவை ஸேவித்து வரவேண்டாவோ? வென்ன, தாசரதியாச்சானும் நியமித்தபடி நடத்துகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய, பெரியஜீயரு முகந்தருளி பூபாலராயனிலே சேர்த்தியிலே திருவாராதனங் கொண்டருளின ஸ்ரீரங்கராஜர் திவ்யமங்கள விக்ரஹத்தை நாச்சிமார்களுடனேகூட தாசரதியாச்சானுக்கு ப்ரஸாதித்தருளி ஊருக்கு விடை கொடுத் தனுப்பியருளினார்.

பின்பு பெரியஜீயர், ப்ரதிவாதிபயங்கரம் ஹஸ்திகிரிநாத ரண்ணாவென்கிறவர் பெருமாள்கோவிலிலே மஹாவாக்மியாயிருக்கிறாரென்று கேழ்விப்பட்டு, அவருக்கு அர்த்தவிசேஷங்களை ஸாதித்து பூர்வாசார்ய ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராம்படி பண்ணவேணு மென்று நினைத்து, ஸ்ரீவைஷ்ணவர்களிருவர்கள் கையிலே ஸ்ரீமுகத்தை ஸாதித்து அனுப்பியருள, அண்ணாவும் அவர்கள் கொண்டுவந்துகொடுத்த ஸ்ரீமுகத்தை சிரஸாவஹித்துக்கொண்டு கோயிலுக்கெழுந்தருள, பெரியஜீயரு மிதுகேட்டு கோயில் பரிகரத்தையும் ஸந்நிதியில் ஸ்ரீவைஷ்ணவர்களையும் அண்ணாவுக் கெதிரே யனுப்ப, அண்ணாவுந் திருநகரிலே ப்ரவேசித்து பெரியஜீயர்மடத்திலே சென்று பெரியஜீயரை ஸாஷ்டாங்கமாக தண்டன்ஸமர்ப்பித்துநிற்க, பெரியஜீயரு முகந்தருளி, குளிரநோக்கி அப்போது நடந்துவருகிற முப்பத்தாறாயிரப்படியி லொருவிடத்தைப்பலமுகமாக வபந்யஸித்துக்காட்ட, அண்ணாவுங்கேட்டு மிகவு மாச்சர்யப்பட்டு பெரியஜீயர் ஸந்நிதியில் பஞ்சஸம்ஸ்காரங்களைப்பெற்று முன்னே முதலியாண்டானுடைய திருநாமமான ஸ்ரீவைஷ்ணவதாஸனென்கிற திருநாமத்தைப் பெரியஜீயர் திருப்பவளத்தாலே ஸாதிக்கப்பெற்று மிகவும் அந்தரங்கராயெழுந்தருளியிருந்தார். அப்போது பெரியஜீயருடைய பூர்வாச்ரமத்தில் குமாரரான ராமானுஜய்யனுக்குத் திருநகரியிலே அழகியமணவாளப்பெருமாள் நயனாரென்று ஜீயர் திருநாமமாக ஒருகுமாரர் அவதரித்தார். பின்பு ராமானுஜய்யனுக்கு ஸ்ரீவில்லிபுத்தூரிலே பிறந்த குமாரருக்குப் பெரியாழ்வாரென்று திருநாமஞ் சாற்றுங்கோளென்று பெரியஜீயர் நியமித்தனுப்பியருளினார். பின்பு இருவர் குமாரர்களும் பருவம்முற்றினபின்புவந்து பெரியஜீயர் திருவடிகளை யாச்ரயித்தார்கள். அதில் முதல்குமாரருக்கு ஜீயர் நயினாரென்று திருநாமமாய் தர்சநப்ரவர்த்தகரா யெழுந்தருளியிருந்தார். பின்பு சிலநாளிலே பெரியஜீயர் பெரியபெருமாளநுமதிகொண்டு திருநகரிக்கெழுந்தருளி ஆழ்வாரை மங்களாசாஸநஞ்செய்தருளி, யங்கே தந்திருவடிகளை வந்தாச்ரயித்தவர்களை யங்கீகரித்து சிறிதுநாளெழுந்தருளி யிருக்கச்செய்தே, ஆசார்ய

ஹ்ருதயத்திற்குப் பொருள்கேழ்க்கைக்காகத் திருநாராயணபுரத்தாய் ஸந்நிதிக்குப் புறப்பட்டெழுந்தருளினார். அப்போது திருநகரிக்கருகிலே ஆயியை யெதிர்கொண்டு தண்டன்ஸமர்ப்பித்து அவருடனே திருநகரிக்கெழுந்தருளி, ஆயிஸந்நிதியிலே ஆசார்யஹ்ருதயத்தை யதிகரித்தருளி, அவராலே இவரொரு அவதாரவிசேஷமென்று மிகவும் உபலாளிக்கப்பட்டு எழுந்தருளியிருந்தார். அப்போது பெரியஜீயரிடத்திலே சிலர் பொறாமையாலே ஜீயரெழுந்தருளியிருக்கிற ஓலைக்கூரைமடத்திலே நடுநிசையிலே நெருப்பைவைத்தார்கள். பெரியஜீயருந் திருவனந்தாழ்வானுகையாலே அந்தத் திருவுருவோடே ஒரு கோமுகச்சாரிகைவழியாக வெளியிலே புறப்பட்டெழுந்தருளினார். அவர்களை யந்ததேசத்தில் ராஜாதண்டிக்கக் கண்டு அத்தைவேண்டாவென்று மறுத்தருளினார். பின்பு அவர்களுடைய ஸந்நிதியிலே சிலர் பெரியஜீயர் திருவடிகளை யாச்ரயித்து அபராதக்ஷாமணம் பண்ணிக்கொண்டார்கள். பின்பு பாண்ட்யதேசத்திற்கு ப்ரவர்த்தகனு யிருப்பானொருவன் பெரிய ஜீயருடைய பெரிய வைபவத்தைக்கண்டு திருவடிகளிலே யாச்ரயித்தான். அவனுக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்தருளி சடகோபதாஸரென்று திருநாமம் ப்ரஸாதித்தருளினார், பின்பு திருநகரியிலே பெரியஜீயர் காளமேகன் திருமண்டபத்தையும் திருவீதிகளையு மெல்லைகளையும் அழகியமணவாளன் திருமண்டபத்தையும்உண்டாக்கினார். பின்பு பெரியஜீயர் திருக்குறுங்குடியிலே யெழுந்தருளி அங்கே திருவேங்கடமுடையானென்கிற ப்ராம்மணனை சிஷ்யனாக்கியருளி, அவருக்குத் திருவேங்கடதாஸரென்று தாஸ்யநாமம் ஸாதித்தருளி, அவரைத் திருக்குறுங்குடிக் கோவில் கைங்கர்யத்திலே நியமித்து, நின்றநம்பீ, இருந்தநம்பீ, கிடந்தநம்பீ, மலைமேல்நம்பீ, திருப்பாற்கடல்நம்பீ யென்கிற ஐந்துபெருமாள்களுக்கும் கர்ப்பக்ரஹம் முதலான திருப்பணிகளையும் மண்டபங்களையுஞ் செய்தருளினார்.

பின்பு திருக்குறுங்குடியில் நின்றுங் கோயிலுக்கெழுந்தருளி பெரியபெருமாளை ஸேவித்துக்கொண் டெழுந்தருளியிருந்தார். அக்காலத்திலே எறும்பியிலப்பாவென்கிறவர் கோயிலுக்கெழுந்தருளிப் பெருமாளைஸேவித்துக் கந்தாடையண்ணனுக்குத் திருமேனிபந்துவாகையாலே அண்ணனோடேகூட ஜீயர்ஸந்நிதிக்கெழுந்தருள, ஜீயருமப்பாவை மஹாவித்வானென்றறிந்து திருவாய்மொழியிலே ஓரிடத்திற்கு ஆயிரம்படியாக உபந்யாஸஞ்செய்தருள, அப்பாவுங்கேட்டு மிகவு மாச்சர்யப்பட்டுக் கொண்டிருந்தும் விதிகூடாமையாலே ஜீயர் திருவடிகளை யாச்ரயியாமலே ஊருக் கெழுந்தருளினார், பின்பு தம்முடைய திருவாராதனமான சக்ரவர்த்தித் திருமகனுக்குத் திருவாராதனம் பண்ணுவதாகக் கோயிலாழ்வார் திருக்காப்பை நீக்கப்புக, அது அனேகோபாயங்களாலும் திறக்கப்போகாமையாலே அப்பா மிகவுந் துக்கித்து அமுது செய்யாம லிருந்தார். அன்றிராத்திரி அப்பாவினுடைய ஸ்வப்நத்திலே முன்பு திருவனந்தாழ்வான் பெரியஜீய

ராகக்கொண்டு பின்பு திருவனந்தாழ்வானாகக்கண்டு அதன்பின்பு லக்ஷ்மணனாகக்கண்டு பின்புபெரியஜீயராகக்கண்டது. இப்படி சக்ரவர்த்தித் திருமகன் பெரியஜீயருடைய ஸ்வரூபவைபவத்தைக்காட்டி, நீர்கோயிலுக்குப்போய் பெரியஜீயரை யாச்ரயித்துவந்தாலொழிய நாம் உம்முடைய கையில் ஆராதனங் கொள்ளுகிறதில்லை; நீர் கடுகப்போகுமென்று அப்பாவை நியமித்தருள, அப்பாவும் திருக்கண்களைவிழித்து மிகவு மாச்சர்யப்பட்டு, அப்போதே புறப்பட்டு கோயிலுக்கெழுந்தருளி, அண்ணன் புருஷகாரமாகப் பெரியஜீயர் திருவடிகளையாச்ரயித்து, வரவரமுனிதாஸரென்று திருநாமமுண்டாகும்படி மிகவு மந்தரங்கரா யெழுந்தருளியிருந்தார். அப்போது அண்ணனும் எறும்பியப்பாவும் பூர்வம் வாடபுரத்திற்செய்தியைப் பெரியஜீயருக்குவிண்ணப்பஞ்செய்தார்கள். அதாகிறது:—அண்ணன்முன் பொருக்கால் ஸ்தாலீபாகத்திற்காக எறும்பி ஸ்ரீரங்கராஜருடைய விவாஹதேசமான வாடபுரத்திற்கு ஸ்ரீரங்கராஜருடனே தாமுங்கூடப்போனார். பின்பு அங்கே ஸ்தாலீபாகம் நடந்தது. அன்றைக்கங்கே அத்திக்காய் சமைத்தாள். இதுவன்றிக்கே "உடோவரதநாராயணனே? உடோ ஸ்ரீரங்கராஜனே? வருகிற ஸ்தாலீபாகத்திற்கும் வாருங்கோ" ளென்றுப் போலே மொரணப்பேச்சாய்பேசினார்கள். அத்தாலே அண்ணனுக்கும் ஸ்ரீரங்கராஜருக்கும் வாடபுறத்திலே மனஸ்ஸு விட்டுப்போய் அவர்கள்ஸம்பந்தத்தைக் கழித்துக்கொள்ளவேணுமென்றிருந்தார்கள், அந்தசெய்தியை இப்போது பெரியஜீயர் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்தார்கள். பெரியஜீயர் அத்தைக்கேட்டருளி யொருசிந்தைசெய்து திருக்குடந்தையிலப்பாவண்ணனையும் வேடலப்பையையும் தாசரதியாச்சானையும் ஸ்ரீமுகமனுப்பியழைப்பித்தருளி, கந்தாடையண்ணனையு மெறும்பியப்பாவையுங்கூட்டியருளிச்செய்தவார்த்தை:-முதலியாண்டான்ஸந்ததியான வாதூலகோத்ரமும் உடையவருடைய திருவம்சமான ஹாரீதகோத்ரத்தார்முதலான எழுகோத்ரத்தாரும் இந்த எழுகோத்ரத்திலேயே ஸம்பந்தம்பண்ணிக்கொண்டிருங்கோள். இதற்கு யாதொருத்தர் தப்பினார்கள், அவர்களுக்கு நம்மாணை யென்றாணையிட்டருளி, இப்படித்திருமுகப்பட்டோலையெழுதியருளி தேசாந்தரத்திலே உடையவர்திருவம்சஸ்தரும் முதலியாண்டான் திருவம்சஸ்தருமிருக்கிறவிடங்களுக்கனுப்பியருளினார். அவர்களெல்லாரும் திருமுகப்பட்டோலையைச் சிரஸாவஹித்து அப்படியே நடந்துக்கொண்டார்கள். அது அன்றுமுதல் இன்றுவரைக்கும் நடந்துவருகிறது. (ஸ்லோ) వాధూలవత్సకౌండిన్యహారీతాత్రేయకౌశికాః। భారద్వాజశ్చసప్తైతే వాధూలాద్యాః ప్రకీర్తితాః॥ இதிலே வாதூலகோத்ரம் முக்யமாகையாலே அதின்பெயரையிட்டேமற்றை யாறுகோத்ரஸ்தருக்குங் கந்தாடையாரென்று வழக்கமாயிருப்பது. இவர்களிலே எழுபத்திநான்கு ஸிம்மாஸனாதிபதிகளிலே பரிகணிதராயிருக்கிற முதலியாண்டான், முடும்பைநம்பி, முடும்பையம்மாள், ஆஸுரிப்பெருமாள், கிடாம்பிப்பெருமாள், குமாண்டூர் இளையவில்லியாச்சான், வங்கிப்புறத்துநம்பி,

இவர்களுடைய ஸந்ததிஸ்தரோ இந்த எழுகோத்ரத்திலேயிருப்பது. இது பெரியஜீயர் நியமனப்படி நடந்துவருகிறது.

பின்பொருநாள் பெரியஜீயர் பெரியபெருமாளை ஏகாந்தத்தில்ஸேவித்துக்கொண்டிருக்கச்செய்தே உத்தமநம்பியுந் திருவாலவட்டகைங்கர்யஞ்செய்துக்கொண்டிருந்தார். அந்த உத்தமநம்பியானவர் திருவனந்தாழ்வான் திருவவதாரமான பெரியஜீயருடைய பாலின்வண்ணமான திருமேனி நிறத்தை அந்யதாசங்கைபண்ணி பெரியஜீயரைப்பார்த்து நெடும்போதாச்சுதே யென்று விண்ணப்பஞ்செய்ய, பெரியஜீயரும் அவர்கருத்தறிந்து மஹாப்ரஸாதமென்று புறப்பட்டு மடத்திற்கெழுந்தருளினர். அவ்வளவிலே உத்தமநம்பிநின்றுகொண்டே திருவாலவட்டமுங் கையுமாகத் தூங்கிப் பலகணிக்கதவிலே சாய்ந்திருக்கப் பெரியபெருமாளும் அவர்கனவிலே திருப்பவளந்திறந்து திருவனந்தாழ்வானைத்தொட்டு இவர்காணும் பெரியஜீயராக வவதரித்தாரென்று தம்முடைய திருக்கையை யெடுத்தருளிச் செய்தார். உத்தமநம்பியுங் கண்விழித்து மிகவும் நடுங்கி யப்போதே மடத்திற்குவந்து பெரியஜீயர் திருவடிகளிலேவிழுந்து ஸேவித்து அபசார க்ஷாமணம் பண்ணிக்கொண்டார்.

பின்பொருநாள், ஸத்வநிஷ்டையாய் சடகோபக்கொற்றி யென்று திருநாமத்தை யுடையவளான வம்மையாரொருத்தி, பகல் திருவோலக்கங்குலைந்து திருமலையாழ்வாரென்கிற வ்யாக்யாந மண்டபத்திலே திருக்காப்பு சேர்த்துக்கொண்டு ஏகாந்தமாக பெரியஜீயர் யோகத்திலிருந்து அந்த வாநந்தானுபவத்தாலே தம்மைமறந்து திருவநந்தாழ்வானுடைய திருமேனியாக விருக்கிற விருப்பைக் கதவுப்புரையிலே கண்டு திடுக்கிட்டிருக்க, பின்பெரியஜீயரும் யோகதசைநிகழ்ந்து தாமான வடிவுகொண்டு அம்மையாரிதறிந்தாளென்றறிந்து அவளை யழைத்து நீ இத்தை விளம்பரம் பண்ணவேண்டாவென்று அருளிச்செய்தார்.

ஆகவிப்படி திருமேனி நிறத்தாலும், பெருமாளுக்கெல்லா வடிமைகளைச்செய்கையாலும், கங்காப்ரவாஹம்போலேயிருக்கிற வுபந்யாஸவைபவத்தாலும், திருநகரியிலே சாரிகைவழியாய் சேஷனுருக்கொண்டு புறப்பட்டமையாலும், சக்ரவர்த்தித் திருமகன் எறும்பியிலப்பாவுக்கு ஸ்வப்நத்திலே அருளிச்செய்கையாலும், உத்தமநம்பிக்குக் கனவிலே பெரியபெருமாளருளிச் செய்கையாலும், கொற்றியம்மையார்பகலிலே ப்ரத்யக்ஷமாகக் காண்கையாலும் பெரியஜீயர் சேஷாவதாரமென்று லோக ப்ரஸித்தமாயிருக்கும்.

இப்படியிருக்கிற பெரியஜீயர் தம்முடைய ஸ்ரீபாதத்து முதலிகளுடனேகூட பெரிய பெருமாளைத் திருப்பவித்ரத் திருநாளிலே திருவோலக்கமாக மங்களாசாஸனம் பண்ணிக்கொண் டிருக்கச்செய்தே பெரிய

பெருமாள் பெரியஜீயருக் கருளப்பாடிட்டு, நாளைமுதல் நம்முடைய பெரிய திருமண்டபத்திலே திருவாய்மொழிப்பொருளை ஈடுமுப்பத்தாறாயிரந்துடக்க மான வ்யாக்யாநங்களுடனே நடத்துமென்று நியமித்தார். பெரியஜீயரு மத்தை சிரஸாவஹித்து மற்றைநாள் திருமண்டபத்திற் கெழுந்தருளினார். அப்போது பெருமாள் நாச்சிமார்களுடனே தோளிக்கினியானிலே யேறி யருளி சேனைமுதலியார் துடக்கமானவர்களோடும், ஆழ்வார்களோடும், ஆசார்யர்களோடுங்கூட பெரியதிருமண்டபத்திற் கெழுந்தருளி பெரிய திருவோலக்கமாகவிருந்து பெரியஜீயருக் கருளப்பாடு ஸாதித்து ஈடுமுப் பத்தாறாயிரத்தைத்துடங்கிவித்துத் திருச்செவிசாற்றியருளி மிகவுமுகந்து, இப்படி யொருவருஷம் நடப்பதென்றுநியமித்துப் புறப்பட்டருளி பூபால ராயனுக் கெழுந்தருளினார். பின்பு பெரியஜீயரும் அப்படியே யொருவரு ஷம் ஒருநீங்கின்றிக்கே முப்பத்தாறாயிரத்தை நடத்திக்கொண் டிருந்தார். பின்பு நாளைக்கு சாத்துமுறையா யிருக்கச்செய்தே கந்தாடையண்ணனும், வானமாமலைஜீயரும், பட்டர்பிரான்ஜீயரும், தம்மிலேசேர்ந்து சிந்தித்து, இருவ ரிரண்டடியும், ஒருவ ரிரண்டடியுமாக மூவரும் நாலடியான ஒரு தனியனைச்செய்து அதிரஹஸ்யமாக மனஸிலேவைத்து மறைத்துக்கொ ண்டு நாளை சாத்துமுறை முடிவிலே பெரிய திருமண்டபத்திலே பெரிய பெருமாளுடைய பெரிய திருவோலக்கத்திலே பெரியஜீயர் விஷயத்திலே விண்ணப்பஞ் செய்வாராக வெண்ணிக்கொண்டிருந்தார்கள். பின்பு மற் றைநாள் முன்புபோலே பெருமாள் தோளுக்கினியானிலே யேறியருளி ஸேனைமுதலியார் முதலான ஸமஸ்தபரிகரங்களுடனேகூட பெரிய திரு மண்டபத்திலேயெழுந்தருளியிருந்து பெரியஜீயருக்கு அருளப்பாடு ஸாதித் தருளி, சாற்றுமுறை நடக்கவுமென்று நியமித்தருள, பெரிய ஜீயருஞ் சாற்றுமுறை நடத்தியருள, முன்சொன்ன கந்தாடையண்ணன் முதலான முதலிகள்மூவரும் முன்சிந்தித்திருந்த தனியனை விண்ணப்பஞ்செய்வதாக வெண்ணிக்கொண்டிருக்கச்செய்தே மிகவு மழகியனாயிருக்கிற ஒரு அஞ்சு வயஸ்ஸாயிருக்கிற பாலகுமாரன் பெரிய திருவோலக்கத்திலே பெருமாள் முன்பேவந்துநின்று "శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్। యతీంద్ర ప్రవణం వందే రమ్యజామాతరం మునిమ్॥ என்கிற வித்தைச்சொல்லி ஒருவருக்குங் கண்ணுக்குத் தெரியாதபடி மறைந்துபோனான். இதைத் திருவோலக்கத் திலுள்ளா ரெல்லாருங் கண்டு மிகவு மாச்சர்யப்பட்டார்கள். கந்தாடை யண்ணன் முதலான மூவரும் பிறரொருவரு மறியாமல் நாமறிந்ததான விந்தத்தனியனை நமகருமுன்னேவந்து இந்த பாலகுமாரன் சொன்னபடி யாலே இவன் ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீரங்கநாதனே யாகவேணுமென்று பெரிய வாச்சர்யத்துடனே யெல்லாருக்குந் தாங்கள் நினைத்திருந்தசெய்தி யைக் குலாவிக்குலாவிச் சொன்னார்கள். அப்போது நம்பெருமாள் பெரிய ஜீயருக்குத் தீர்த்தப்ரஸாதந்திருமாலை, திருப்பரியட்டம், சடகோபன் முத லானவரிசைகளை ப்ரஸாதித்தருளி உகப்பினுடையமிகுதியாலே அகில ஸ்ரீ

வைஷ்ணவர்களையுங்குறித்து நம்வீடுமுதலான திருப்பதிகளெல்லாவற்றிலும் இந்த ஸ்ரீசைலேசதயாபாத்ரமாதியாகப்ரபந்தாநுஸந்தானம் நடத்துங்கோளென்று நியமித்தருளினார், அன்றுமுதலின்றுவரைக்கும் தமிழ்நடையாடி திவ்யப்ரபந்தம்நடக்கிற பஞ்சத்ராவிடம் பஞ்ச(கௌ)களடம் என்கிற பத்துபாஷைசெல்லுகிற தேசங்களிலே யிந்தத்தனியன் நடந்துவருகிறது. இதினுடையவிரிவு இன்னும் முன்னேயெழுதப்படும்.

இனி பதரிகாச்ரமத்தில் வ்ருத்தாந்த மெழுதப்படுகிறது. அயோத்தி ராமாநுஜய்ய னென்பாரொருவர் பதரிகாச்ரமத்திலேபோய் பதரிநாராயணனை ஸேவித்து மிகவுமுபாஸித்துக்கொண்டிருக்கச்செய்தே பதரிநாராயணன் ப்ரஸன்னராய், அயோத்தி ராமாநுஜய்யனுக்கு ஜ்ஞானதிருஷ்டியாலேமேல்வருகிறத்தைக்கடாக்ஷித்தருளியிந்தத்தனியனை (ஶ்ரீஶைலேஶத) யுபதேசித்தருளினார், அயோத்தி ராமாநுஜய்யங்காரு மித்தை ரஹஸ்யமாய்ப்பெற்று அநுஸந்தித்துக்கொண்டு சிறிதுநாளங்கேயிருந்து தெற்கே திவ்யதேசயாத்ரை புறப்பட்டு திருமலைக்கு வந்தவிடத்திலே இந்தத் தனியனையு மிதினுடைய வரவாறுங்கேட்டு மிகவு மாச்சர்யப்பட்டு தமக்கித்தை நராயணன் பூர்வமே யுபதேசித்தபடியையுஞ் சொல்லி மிகவுமானந்தித்தார்.

ஆகவிப்படி இந்தத்தனியனை முதலிலே மூவர் சிந்தித்துவைத்திருக்கையாலே அவர்கள்செய்ததென்றும், மேல் வருகிறத்தைக் கடாக்ஷித்து பதரிகாச்ரமத்திலே வதரிநாராயணன் அயோத்தி ராமாநுஜய்யனுக்கு உபதேசிக்கையாலே பதரிநாராயணன்செய்ததென்றும், உலகத்திலேசொல்லப்படுகிறது. இந்த ந்யாயம், இதிஹாஸ புராணங்களுக்கு முண்டு.எப்படியென்றால்:—அஷ்டாதச புராணங்களும் தனித்தனியே அந்தந்த ருஷிகள் செய்ததென்றும், வ்யாஸரொருவரே அஷ்டாதச புராணங்களையுஞ்செய்ததென்றும் இருக்கிறது. அங்குமிப்படி முகபேதத்தாலே வழக்கங்களிருக்குமென்று எல்லாரும் நிர்வஹித்தார்கள். இப்படி வேதத்திலும் வழக்கங்களுண்டு. அப்படியே இந்தத்தனியனுக்கும் முகபேதத்தாலே பலர்செய்ததென்கிற வழக்கங்கள் முக்யமாகக்கூடும். கோயில் கந்தாடையண்ணன் செய்த பத்துப்பாட்டிலும் எறும்பியிலப்பாசெய்த வரவரமுனிசதகத்திலும் இந்தத் தனியனுடைய வைபவஞ்சொல்லியிருக்கும். மற்றுமனேக க்ரந்தங்களிலும் இதின்வைபவஞ் சொல்லியிருக்கும்.

இனிக் கோயில் வ்ருத்தாந்தம்:—பின்பு பெரியஜீயரும் பெரியபெருமாளாலே மிகவு மாதரிக்கப்பட்டு லோகாசார்ய ரருளிச்செய்த ரஹஸ்யங்களுக்கு வ்யாக்யாநங்களும் மற்று மனேகக்ரந்தங்களுஞ் செய்தருளினார். அவையாவன:—ரஹஸ்ய வ்யாக்யானம், தத்வத்ரயவ்யாக்யானம், ஸ்ரீவசனபூஷண வ்யாக்யானம், ஆசார்ய ஹ்ருதய வ்யாக்யானம், பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யாநம், நூற்றந்தாதியுரை, ஜ்ஞாநஸாரவ்யா

க்யானம், ப்ரமேயஸாரவ்யாக்யானம், ஏழுபாட்டுவ்யாக்யானம், கீதைக் குத்தாத்பர்யதீபம், தத்வத்ரயத்திற்குப் ப்ரமாணத்திரட்டு, மூப்பத்தாறு யிரப்படிக்கு ப்ரமாணத்திரட்டு, உபதேசரத்நமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, யதிராஜவிம்சதி, தனிக்கவிகளும்விடுதிச்லோகங்களும், இயற் சாத்து, ஆர்த்திப்ரபந்தம், இன்னுமிப்படிகண்டுகொள்வது. பின்பு பெரிய ஜீயருந் தம்முடைய மடத்திற்குண்டான க்ஷேத்ரங்களையெல்லாம் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து அந்தசாஸனங்களை ஸ்ரீபண்டாரத்திலே சேர்த்து விட்டார். பின்பு தம்முடைய திருவடிகளை யாச்ரயிக்கவந்த வரந்தரும் பெருமாள்பிள்ளையைத் தனியேவர்தாரென்று வெறுத்து ஆறுமாஸஞ் சோதித்துப் பின்பங்கீகரித்தருளினார். பின்பு வரந்தரும் பெருமாள்பிள்ளை திகைஷயோடேயிருக்க, பெரியஜீயரிதென்னென்று கேட்டருள, அவரும் நிமித்தத்தை விண்ணப்பஞ்செய்ய, ஜீயருமதுகேட்டருளி இன்றைக்குத் திருமுடிவிளக்கிவித்துக்கொள்ளுமென்று நியமித்தருள, அவருமப்படியே செய்தார். அப்போதே ஊரிலேயிருந்து அவர்தேவிகள் ப்ரஸவித்து அன்றைக்குப் பத்தாவதுநாளென்று செய்திவந்தது. அப்போது ஜீயருடைய ஸர்வஜ்ஞதையைக்கண்டு எல்லாருமாச்சர்யப்பட்டார்கள். பின்பு சில நாளிலே பெருமாள்கோவில் திருமலைமுதலான திவ்யதேசங்களை ஸேவிக்க வேணுமென்று அண்ணன் முதலான முதலிகளெல்லாருடன்கூடப் புறப்பட்டு பெருமாள்கோவிலுக் கெழுந்தருளி தேவப்பெருமாளை ஸேவித்து நாலாறுநாளெழுந்தருளியிருந்து திருவைசாகத் திருநாள்துடங்கினவாறே திருநாள்ஸேவித்துக்கொண் டிருந்து, பெரியதிருவடியின்மேலே பெருமாளேறியருளி கங்கைகொண்டான் திருமண்டபத்திற் கெழுந்தருள, பெரிய ஜீயரும் மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு கூடவெழுந்தருளச்செய்தே திருநாள்ஸேவிக்கவந்த வெரும்பியிலப்பா ஜீயரை நினைவன்றிக்கே ஸேவித்து மூர்ச்சித்துத் தெளிந்து ஜீயரை ஸாஷ்டாங்கமாக ஸேவித்து அவர் புருஷகாரமாகப் பெருமாளை ஸேவித்தார். பின்பு பெரிய ஜீயரும் மற்ற திருநாள்களையும் ஸேவித்து அப்பாவையுங் கூட்டிக்கொண்டு புறப்பட்டுத் திருப்புட்குழிவழியாக கடிகாசலத்திற் கெழுந்தருளி அழகியசிங்கரை மங்களாசாஸனஞ்செய்து எரும்பி யென்கிற ஊருக்கு வடதிருவரங்க மென்றும் குளத்திற்குத் திருக்காவேரியென்றும் திருநாமஞ்சாற்றி அப்பாவுக்கு அழகியமணவாளதாஸரென்று அபிமானித்துத் திருநாமஞ்சாற்றி அங்கு நின்றுந் திருப்பதிக்கெழுந்தருளி உடையவரை ஸேவித்து கோவிந்தராஜனையும்ஸேவித்துத் திருமலைஏறியருளி அங்கே கோயில்கேழ்விஜீயர் ஏகாங்கிகள் மற்றும் பரிகரங்களெல்லாம் எதிர்கொண்டுவந்து ஸேவிக்க, அவர்களையு முபலாளித்து ஸேவாக்ரமத்திலே யுள்ளேபுக்கு, திருவேங்கடமுடையானை மங்களாசாஸனஞ்செய்து தீர்த்தம் ப்ரஸாதம் ஸ்ரீசடகோபன் முதலான வரிசைகளையும்பெற்று அங்கே கோயில் ஸ்ரீகார்யத்திற்காக இளங்கேழ்வி யெம்பெருமானார் ஜீயரைக்கல்பித்தருளி யங்குநின்றும் புறப்பட்டு, திருவெவ்வுளூர், திருநின்றவூர், திருமழிசை, முதலியாண்டான் திருவவ

தாரஸ்தலமான பச்சைவாரணப்பெருமாள்கோவில், திருக்கச்சிநம்பி திருவவதாரஸ்தலமான பூவிருந்தவல்லிகை, திருவல்லிக்கேணி, திருநீர்மலை, ஸ்ரீபெரும்பூதூர், ஸேவித்துக்கொண்டு பெருமாள்கோவிலிலே பேரருளாளரை மங்களாசாஸனம் பண்ணி ஸ்ரீமதுராந்தகத்திலே சக்ரவர்த்தித் திருமகனையும் வகுளவ்ருக்ஷத்தையும் ஸேவித்துத் திருவஹீந்திரபுரத்திற் கெழுந்தருளி, தெய்வநாயகனைத் திருவடிதொழுது, திருவாலிதிருநகரியிற் றிருமங்கையாழ்வாரைத் திருவடிதொழுது, அங்குள்ள திருப்பதிகளையும் ஸேவித்து, திருக்கண்ணபுரத்திலே சௌரிராஜரை ஸேவித்து. அவிடத்திலே திருமங்கைமன்னனை யேறியருளப்பண்ணிவித்து, அங்குநின்றும் புறப்பட்டுத் தென்றுவரையிலே சென்று, மன்னனுரை மங்களாசாஸனஞ் செய்து, மாசறுசோதியை யங்கே நித்யானுஸந்தானமாக ஸமர்ப்பித்து, திருக்குடந்தைமுதலான திருப்பதிகளை ஸேவித்து, கோயிலுக்கெழுந்தருளி யதிராஜரனுமதியுடனே பெரியபெருமாளை ஸேவித்துத் தாங்கொண்டுவந்த திவ்யாபரணங்கள் திவ்யசாமரங்கள் திவ்யச்சத்ரங்கள் திருவாலவட்டங்கள் அனேகந்திருமெத்தைகள் தலையணைகள் முதலான வஸ்துக்களை ஸமர்ப்பித்து மடத்திற்கெழுந்தருளி வ்யாக்யானித்துக் கொண்டெழுந்தருளியிருந்தார்.

பின்பு எறும்பியிலே யிருந்துவிட்டவப்பாவும் ஆசார்ய விச்லேஷம் பொறுக்கமாட்டாமல் ஜீயருடைய தினசரிதங்களை நினைத்து அனுபவித்துக்கொண்டு தினசர்யையென்கிற ப்ரபந்தத்தைச் செய்து தலைக்கட்டி ஜீயர்ஸந்நிதிக்கு வரக்காட்ட, ஜீயரும் கடாக்ஷித்து அப்பாவினுடைய வாசார்யநிஷ்டைக்கு மிகவுமுகந்து அப்பாவுக்குக் கோயிலுக்குவருவதாக ஸ்ரீமுகமனுப்பி யருளினார். அப்பாவும் ஸ்ரீமுகத்தை சிரஸாவஹித்து மிகவுங் கடுகக் கோயிலுக் கெழுந்தருளி ஜீயரை ஸேவித்து வ்யாக்யான கோஷ்டியிலே ஜீயர் திருமுகமண்டலத்தை ஸேவித்துக்கொண்டெழுந்தருளியிருந்தார். அக்காலத்திலேகந்தாடையண்ணன் திருமாளிகையில் அழகுசிங்காராராதனம் உபாதான த்ரவ்யத்தாலே நடந்துவருகையாலே அது மிகவுங் குறைந்து வருகிறபடியைப் பெரியஜீயர்கண்டருளி திருமுன்காணிக்கை வந்த த்ரவ்யத்தை நித்யமாக வண்ணனுக்கு ஸாதிக்கும்படி நியமித்தருளினார். பின்பு சிலநாளிலே எறும்பியிலப்பாவுக்குத் தம்முடைய திருமேனியாகாரமான வர்ச்சாவிக்ரஹத்தையும் திருவடிநிலையையுந் திருவுத்தரீயத்தையுந் திருமண்காப்பு சேஷத்தையுந் திருக்கண்ணாடியையும் ப்ரஸாதித்து மிகவும் நிர்பந்தித்து அப்பாவை யூருக்கனுப்பியருளினார். பின்பழகிய வரதரான ராமானுஜஜீயரும் வானமாமலை ஸ்ரீகார்யத்திற்காக விடைகொள்ளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, ஜீயரும். அரங்கநகரப்பனை திருவாராதனமாக ஸாதித்து அவரை வானமாமலைக்கனுப்பியருளினார். அவரும் வானமாமலைக்கதிபதியா யிருக்கையாலே வானமாமலை ராமானுஜஜீயரென்று அவருக்குத் திருநாமமுண்டாயிற்று, பின்பு பெரிய

ஜீயர் கோவிந்ததாஸரப்பரை விசேஷாபிமானஞ் செய்து தம்முடைய திருநாமத்தாலே அழகிய மணவாளப்பெருமாளை யிவருக்குத் திருவாராதன மாக ப்ரஸாதித்தார். பின்பு கோவிந்ததாஸரப்பர் ஸ்ரீ வில்லிபுத்தூரிலே ஆண்டாளுடைய திருநாளை நன்றாகப் பரிபாலித்துக்கொண்டிருந்து ஒரு திருவாடிப்பூரத்திலே ஆண்டாளுடைய தீர்த்த ப்ரஸாதங்களை மிகவுமாத ரத்துடனே கொண்டுவந்து பெரியஜீயருக்கு ஸமர்ப்பிக்க, ஜீயரும் மிகவு முகந்தருளி ஆண்டாளுக்கு உகப்பாக கோவிந்ததாஸரப்பருக்கு பட்டர் பிரான் தாஸரென்று திருநாமம் ப்ரஸாதித்தார். அவரும் மஹா விரக்த ராய் ஆச்ரமஸ்வீகாரஞ்செய்தபடியாலே அவருக்கு பட்டர்பிரான் ஜீய ரென்று திருநாமமாயிற்று. இப்படி மஹாவைபவத்துடனே யெழுந்தருளி யிருக்கிற பெரியஜீயர் நம்மாழ்வாரை ஸேவிப்பதாகப் பெருமாளனுமதி கொண்டு கூடலென்கிற மதுரையிலே சென்று, கூடலழகரை மங்களா சாஸனஞ் செய்தருளி அன்றைக்கங்கே எழுந்தருளியிருந்தார். அப்போது அந்த தேசத்திற்கதிபதியான மஹாபலிவாணராயன் வந்து திருவடிகளிலே யாச்ரயித்தான். பெரியஜீயரும் அவனுக்குத் தாபாதிபஞ்சஸம்ஸ்காரங்களை யும் ஸாதித்தருளி அன்றைக்கு மங்கேயெழுந்தருளியிருந்தார். பின்பு அபர ராத்ரியிலே பயணமாய் மணித்திருப்பல்லக்கை பனிவிழாமைக்காகமூடி வித்து அதிலே யெழுந்தருளி ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸ்ரீபாதந்தாங்கிக் கொண்டு வரச்செய்தே மஹாபலிவாணராயன் பெரியஜீயருக்குத் தெரியா மல் தானும் ஸ்ரீபாதந்தாங்கிக்கொண்டு இருகாவதவழி ஸேவித்துக்கொ ண்டுவர, வெடிந்தபின்பு வைகையாற்றின்கரையிலே இறங்கி யருளினார். அப்போது ராஜாவுங் கச்சைக்கட்டும் வியர்த்த வுடம்புமான ஸ்ரீபாதந் தாங்கின வேஷத்தோடேகூடத் திருவடிகளிலே வந்து ஸேவிக்க, ஜீயரு மிப்படிசெய்வதே! என்று ஆச்சர்யப்பட்டருளினார். அப்போது முத்தர சனேந்தலென்கிற க்ராமத்தை யங்கீகரிக்கவேணுமென்று ராஜாமிகவும் ப்ரார்த்திக்க, அவனுடைய ப்ரார்த்தனைக்காக வத்தை யங்கீகரித்தருளி, அதற்கு அழகியமணவாளநல்லூரென்று திருநாமஞ் சாற்றியருளினார். பின்பு ராஜாவை மிகவுங் க்ருபைபண்ணியனுப்பியருளி, திருப்புல்லாணி திருவணைவழியாக முதலிகளுந் தாமுமாக நிழல்தேடி வாராநிற்கச்செய்தே அங்கேயொரு பெரியபுளியமரமானது நன்றாக நிழலைச்செய்துக்கொண்டு இருக்கக்கண்டு அந்தநிழலிலே எழுந்தருளியிருந்து ச்ரமந்தீர்ந்து புறப்படு மளவில், முதலிகளெல்லாரு மிப்படி மஹோபகாரம்பண்ணின விந்தப்புளி மரத்திற்கு க்ருபை செய்தருளவேணுமென்று ஜீயரை ப்ரார்த்திக்க, அவ ரும் க்ருபாதிசயத்தாலே அந்தமரத்தைத் திருக்கைகளாலே தடவி நீ மோ க்ஷத்தை யடையக்கடவாயென்றருளிச்செய்தார். அந்தமரம் அப்பொழுதே உலர்ந்துபோய்விட்டது. அத்தைக்கண்டெல்லாரு மாச்சர்யப்பட்டார்கள். பெரியஜீயருந் திருநகரிக்கெழுந்தருளி ஆழ்வாரை மங்களாசாஸனஞ் செய்து அங்கே சிறிதுகால மெழுந்தருளியிருந்து அங்கனின்றும் புறப் பட்டு ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்து ஸேவித்து திருமாலிருஞ் சோலைமலைக்

கெழுந்தருளி, பரமஸ்வாமியென்கிற மூலவரை மங்களாசாஸனஞ் செய்தருளினார். அப்போதங்கே அழகர் வலசை யெடுத்துத் திருக்குறுங்குடியிலே யெழுந்தருளியிருந்தாராகையாலே மிகவுங் க்லேசித்தருளி, பரமஸ்வாமிக்கு சிறப்புகள் கண்டருளப் பண்ணி, அங்கனின்றும் புறப்பட்டு கோயிலுக் கெழுந்தருளி பெரியபெருமாளுக்கு முன்புபோலே மங்களாசாஸனஞ் செய்துக்கொண்டெழுந்தருளி யிருந்தார்.

பின்பு அழகர் திருக்குறுங்குடியினின்றும் திருமாலிருஞ்சோலைமலைக் கெழுந்தருளி தம்முடைய தீர்த்தப்ரஸாதமும் அனுப்பித் திருமுகமுமெழுதி யதிலே "தாம்நினைத்தபடியே நாம் திருமாலிருஞ்சோலைமலையிலே குடிபுகுந்தோம், நம்முடைய ஸ்ரீகார்யத்தை நன்றாக நடத்தும்படி யொருவரை வரவிடவேணுமென்று" வரக்காட்டி யருளினார். ஜீயரும் மிகவுமுகந்தருளி யதிராஜஜீயரென்று திருநாமத்தையுடையராய் அத்யந்தம் விரக்தராயிருக்கிற ஜீயரைத் திருமாலிருஞ்சோலைமலைக் கனுப்பியருளினார். அவருமங்கே போய் அழகர் ஸ்ரீகார்யத்தை நன்றாக நடத்தியருளினார். அப்போது, முன்பு ஜீயர்திருவடிகளை யாச்ரயித்த மஹாபலிவாணராயன், ஆசார்யரான பெரியஜீயருடைய நியமனத்தாலே அழகருக்கு கோபுரமண்டபப்ராகாரம் முதலான ஸகலகைங்கர்யங்களையும் நன்றாகச் செய்தான். ஜீயரு மது கேட்டு மிகவு முகந்தருளினார். அப்போது தேசாந்தரங்களிலே திரிவானொரு சிறுபிள்ளை வந்து ஜீயர் திருவடிகளை யாச்ரயிக்க, ஜீயருமவனை யங்கீகரித்து ஸ்ரீராமானுஜதாஸனென்று தாஸ்யநாமத்தையும் ஸாதித்தருளி, இவனாலே அனேகந்திருப்பதிகளிலே கைங்கர்யங்கள் நடக்குமென்று அருளிச்செய்ய, அதடியாக அவனாலே பெருமாள் கோவில் தொடக்கமான திருப்பதிகளில் கைங்கர்யங்களெல்லாங் கொண்டருளப்பெற்றது.

பின்பு பெரியஜீயரும் பெரியாழ்வார் திருமொழிக்கு பெரியவாச்சான் பிள்ளை செய்தருளின வ்யாக்யானத்தில் நாற்பாட்டிற்கு வ்யாக்யானம் ஜீர்ணமாய் காணாதபோனபடியினாலே. அதற்கு வ்யாக்யானஞ் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி அதற்கு ஸஹகாரியாகத் தமிழ்விரகரான திருப்பாணாழ்வார் தாதர்நாயனாரையுங் கூட்டிக்கொண்டு வ்யாக்யானம் நாலு பத்தளவாகச் செய்தருளினார். அப்போது அதிபாலனாயிருக்கிற கந்தாடை நாயன் அங்கே எழுந்தருளி ஜீயர் வ்யாக்யானத்தையும் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்திலே சேஷித்த நாற்பதுபாட்டு வ்யாக்யானத்தையும் பார்த்தருளி ஜீயர் வ்யாக்யானத்தை மிகவு மாதரித்து, இந்த நாற்பது பாட்டிற்கும் வ்யாக்யானஞ் சேஷிப்பதே! யென்றருளிச்செயய, ஜீயரு மிதுகேட்டானந்தித்து நாயனை அவதாரவிசேஷமென்று ஆலிங்கித்துக் கொண்டருளினார். பின்பு ஜீயரும் திருப்பாணாழ்வார் தாதர்நாயனாருக்குப் பிள்ளைலோகாசார்யர் திருவாராதனமான ஸ்ரீரங்கராஜரை ப்ரஸாதித்தருளி அவருக்கு விடைகொடுத்தருளினார். பின்பு பெரியஜீயர், ஆசார்ய ஹ்ருதயத்திற்கு வ்யாக்யானஞ் செய்வதாகத் திருவுள்ளமாய், திருமேனி

யில் பலஹானியையும் பாராமல் திருவணையிலே சாய்ந்தருளினபடியே திருக்கழுத்துநோவத் திருவெழுத்து சாற்றும்படியைக்கந்தாடையண்ணன் கண்டு தேவரீரிப்படி ஏதுக்காக ப்ரயாஸப்படுகிறதென்று விண்ணப்பஞ் செய்ய, ஜீயரும் உம்முடைய புத்ராதிகளுக்காக இப்படி ப்ரயாஸப்படு கிறேனென்று அருளிச்செய்து, வ்யாக்யானத்தைத் தலைக்கட்டி பரமத நிரஸன பூர்வகமாக ஸ்வமதஸ்தாபனம் பண்ணியருளினார்.

அக்காலத்திலே திருமலைநம்பி திருவம்சயரான எட்டூர் சிங்கராசார்யர் ஜீயர் திருவடிகளிலேவந்தாச்ரயிக்க, அவரையு மங்கீகரித்து அவருக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களை ப்ரஸாதித்தருளி, அவர் மூலமாய் வந்த திரவியங் களைத் திருநகரியிலே ஆழ்வார் திருக்கோபுர கைங்கர்யத்திற்குப் போக விட்டருள, அதுபோயுஞ் சிறிதுகுறையிருந்தத்தைத் திருப்பேரனாரான ஜீயர்நாயனார் சிகரபர்யந்தமாக நிறைவேற்றினார். இப்படி திருக்குருங் குடிமுதல் வடதிருவேங்கடமளவான திருப்பதிகளிலே ஜீயர்செய்தருளின விமானகோபுர ப்ராகாரமண்டபந்துடக்கமான திருப்பணிகளும், அவர் கல்பித்த ஸ்ரீகார்யகர்த்தரும், அவர் நியமித்த கட்டளைப்பாடுகளும், இப் போது வரைக்கும் நடந்துவருகிறது. இப்படி எண்ணிறந்த ஆசார்யபுரு ஷர்களாலே ஆச்ரயிக்கப்பட்டிருக்கிற பெரியஜீயர் திருவடிகளையாச்ர யித்த வஷ்டதிக்கஜங்கள்:—வானமாமலைஜீயர்; திருமலைஎம்பெருமானார் ஜீயர்; பட்டர்பிரான்ஜீயர்; கோயிற் கந்தாடையண்ணன்; எறும்பியி லப்பா; அப்பிள்ளை; அப்பிள்ளான்; ப்ரதிவாதிபயங்கரமண்ணாவாகிறவெட் டுத் திருநாமங்கள். இவர்களிலே கோயிற்கந்தாடையண்ணனையும் ப்ரதி வாதி பயங்கரமண்ணாவையும், தம்முடைய திருப்பேரனாரானஜீயர் நாயனா ருக்கு ஈடும் ஸ்ரீபாஷ்யமும் ஸாதிக்கும்படி நியமித்தருளினார். இப்படி பெரியஜீயர், தம்முடைய திருவடிகளை யாச்ரயித்தும், தம்மிடத்தில் உப தேசம் பெற்றும், தம்முடைய கடாக்ஷத்திற் கிலக்காயும், தம்முடைய திரு மேனியை ஸேவித்தும், தம்முடைய தீர்த்த ப்ரஸாதங்களை ஸ்வீகரித்தும் தம்முடைய திருவடிகளிலே ஆத்மஸமர்ப்பணம் பண்ணியும், தம்முடைய திருநாமத்தைக் கீர்த்தித்தும், தம்முடைய கல்யாணகுணங்களைக் கேட்டும், தாமிருந்ததிக்கைநோக்கி தண்டனிட்டும், தம்முடையவைபவத்தை நினைத் தும், தம்மடியார்க்கடியாரோடே ஸம்பந்தப்பட்டும், தம்முடைய பாத தூளிபட்ட பூதலத்திலே பிறந்தும்,ஸமீபஸ்தர் தூரஸ்தர் இனிமேலுண்டா மவர்களான வெல்லாவுயிர்களும் உஜ்ஜீவித்தார்களாகையாலே தம் மைப் பெரியபெருமாள் நியமித்த வவதாரகார்யந் தலைக்கட்டினவாறே, (பெரியஜீயர்) இனி பரமபதத்திலே போய் அடிமைசெய்யவேணுமென்று திருவுள்ளமாய் திருமேனியிலே நோவு சாற்றிக்கொண்டிருக்கச்செய்தே, நம்பெருமாள் திருத்தேரிலே புறப்பட்டருளி மடத்துவாசலிலே சென்று நின்று ஸேவை ஸாதித்தருள, ஜீயரும் ஸேவித்துத் தம்முடைய வார்த்தி தீரும்படி பெருமாளையனுபவித்தார். அதன்பின்பு மிகவுந் தளர்ந்திருக்க,

நம்பெருமாள் திரும்பவும் ஒருநாள் புறப்பட்டருளி மடத்துவாசலிலே எழுந்தருளிநிற்க, ஜீயரும் திருக்கைத்தலத்திலே எழுந்தருளி பெருமாளை ஸேவித்து மிகவுமானந்தத்தை யநுபவித்தருளினார். பின்பு வானமாமலை ஜீயர்முதலானோருக்குத் திருமுகம் போகவிட்டருள, அவர்களுங் கடுகப்புறப்பட்டெழுந்தருளிவந்து திருவடிகளிலே ஸேவித்திருந்தார்கள். அப்போது திருமேனி நோவுசிறிது சமித்திருந்தது; அத்தைக்கண்டு வானமாமலைஜீயர் வானமாமலை ஸ்ரீகார்யத்தினுடைய வலஸாத்தாலே மீண்டுவருகிறே னென்று விண்ணப்பஞ்செய்து ஜீயரனுமதிகொண்டு வடதேசத்திற்கெழுந்தருளினார். பின்பு சிலநாளிலே ஜீயருக்குமுன்புண்டான பரமபதவாஞ்சை மிகுத்து ஆர்த்திபிறந்து அதுபாசுரப்பட்டு அது அறுபதுபாட்டாய் ஆர்த்திப்ரபந்தமென்று பெயர்பெற்றது. அப்போது மேல்நாட்டுத்தோழப்பரும், அவர்தமையன் அழகிய மணவாளநாயனாரும், பட்டர்பிரான் ஜீயர் புருஷகாரமாகப் பெரியஜீயரை ஸேவித்துப் பெரியஜீயருக்காகத் திருநாராயணபுரத்திலே நித்யவாஸத்தை ஏற்றுக்கொண்டார்கள். பின்பு திருமலைநல்லான் திருவம்சஸ்தராய் பரமதகண்டன ப்ரசண்டராய் திருவேங்கடமுடையானுக்குப் புரோஹிதராய் மஹா ப்ரபாவசாலியா யிருக்கிற அண்ணராய சக்ரவர்த்தியென்கிறவர் பட்டர் பிரான்ஜீயர் புருஷகாரமாக ஜீயர் திருவடிகளிலே வந்து ஸேவித்துநிற்க, ஜீயரும் தம்முடைய திருவடிகளை யவர் திருமுடியிலேவைத்தருளி யவரைப்பார்த்தருளிச் செய்தது:—நம்முடைய திருமலை யெம்பெருமானார்ஜீயரைத் திருவேங்கடத்ரோஹிகள் நலியாதபடி ரக்ஷித்தும், நந்தர்சனத்திற்காக வனேகம் ஸ்ரீ கார்யங்களைப் பண்ணியும், நிர்வஹித்தவரன்றோ நீரென்றருளிச்செய்து, அவருக்கு பட்டர்பிரான் ஜீயர்திருக்கைகளாலே பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்தருளி, அவரையுந் தர்சனப்ரவர்த்தகாரம்படி செய்தருளினார்.

பின்பு மடத்திலப்பிள்ளானும் ஜீயர்நயினாரும் ஜீயர்திருவடிகளிலே ஸேவித்து தேவரீருடைய வர்ச்சாரூபமானவிக்ரஹம் அடியேங்களுக்கு வேணுமென்று ப்ரார்த்திக்க, ஜீயரும் அநுமதிபண்ணி தம்முடைய திருக்கைச்சொம்பை யதற்கு த்ரவ்யமாக ஸாதித்தருளினார். அவர்களும் ஜீயருடைய வர்ச்சாவிக்ரஹம் இரண்டு திருக்கோலம் எறியருளப் பண்ணிக்கொண்டார்கள். பின்பு பரமபதத்திற் கெழுந்தருள நாலுநாள் முன்பாக நாலாயிரந் திவ்ய ப்ரபந்தங்களையும் பெரிய திருவோலக்கமாக ஸேவிக்கக் கேட்டருளி யானந்தித்து, முதலிகளுக்கு ஹிதம்ஸாதித்தருளி தம்முடைய திருவாராதனமான உடையவரையும் ஸ்ரீரங்கராஜரையும் ஸ்ரீகோசங்களையும் நம்பெருமா ளதீனமாக்கி, லோகாசார்யர் திருவடிகளை த்யானித்துக்கொண்டு, ருத்ரோத்காரிவருஷம் மாசிமாஸத்தில் க்ருஷ்ணபக்ஷத்தில் சனிக்கிழமை த்வாதசி திருவோணநக்ஷத்ரத்திலே பெரியஜீயர் திருநாட்டிற் கெழுந்தருளினார். ஆகவிப்படி திருவனந்தாழ்வான் பெரிய ஜீயராக வவதரித்து எழுபத்துமூன்று திருநக்ஷத்ரம் எழுந்தருளி யிருந்தார்.

பின்பு முதலிகளெல்லாரும் ஜீயர்நயினாரைக்கொண்டு ஜீயருடைய சரமகைங்கர்யத்தை உடையவருடைய சரமகைங்கர்யம்போலே நடத்தினார்கள். ஆதிகேசவப்பெருமாள் திருவடிக்கீழாக வடபொன்னித்தென்பாலிலே திருப்பள்ளி படுத்தார்கள். பின்பு ஜீயர்நயினார் கந்தாடையண்ணன்முதலான முதலிகளெல்லாரும் சிஷ்யக்ருத்யமாகத் திருமுடி விளக்கிவித்துக்கொண்டு அவப்ருதங் கொண்டாடினார்கள். பின்புசெய்யவேண்டுங் கைங்கர்யங்களெல்லாம் சாஸ்த்ரப்ரகாரத்திலேசெய்து ஜீயர் வைபவத்திற்குத் தகுதியாம்படி பெருக்கத் திருவத்யயனம் நடத்தினார்கள். பின்பு நம்பெருமாள் ஜீயர்நயினாருக்கு திருமாலை திருப்பரியட்டம் சடகோபனும் ப்ரஸாதித்து ஜீயர் திருவாராதனங்களையும் மடத்தையும் ஸாதித்து வாழ்வித்தருளினார்.

பின்பு கந்தாடை யண்ணனும் ஆசார்யரின் நியமனத்தின்படியே ஆசார்யருடைய திருப்பேரனாரான ஜீயர்நயினாருக்கு ஈடுமுப்பத்தாறாயிரத்தை ப்ரஸாதித்தருளினார். ப்ரதிவாதிபயங்கரமண்ணாவும் அப்படியே ஸ்வாசார்ய நியமனத்தாலே ஜீயர்நயினாருக்கும் கந்தாடைநாயனுக்கும் ஸ்ரீபாஷ்யம் ஸாதித்தருளி இதிலேதமக்கு கர்த்ருத்வமில்லை; ஆசார்யரான பெரியஜீயரே இதற்குக் கர்த்தாவென் றருளிச்செய்தார். (ஸ்லோ) శ్రీమాన్సుందర జామాతృమునిఃపర్యాయభాష్యకృత్ । భాష్యంవ్యాకురుతే తస్య శ్రోతృకోటిమమాన్వయః॥ இதற்குப்பொருள்—ஸ்ரீமான்களாய் இரண்டாம் பாஷ்யகாரராயிருக்கிற மணவாளமாமுனிகளானவர் ஸ்ரீபாஷ்யத்தை வ்யாக்யானித்துக்கொண் டிருக்கிறார்; அடியேனுக்கதிலே சிஷ்யகோடியாகவே யன்வயமுள்ளதென்று. பின்பு ப்ரதிவாதிபயங்கரமண்ணாவும் கந்தாடை போளிப்பாக்கம்நயினார் தொடக்கமானவர்களுக்கு ஸ்ரீபாஷ்யம்ஸாதித்தருளினார். இந்த கந்தாடை போளிப்பாக்கம்நயினார் அஷ்டகோத்ரநிபந்தனஞ் செய்தருளினார். (ஸ்லோ) శ్రీవత్సాత్రేయకౌండిన్య భారద్వాజాశ్చకౌశికః । శ్రీమ షణ్ణ్వవాధూలః కాశ్యపశ్చాష్టగోత్రజాః॥

பின்பு வானமாமலைஜீயர் வடதேசத்தில் நின்றுமெழுந்தருளி ஜீயர் திருநாட்டிற் கெழுந்தருளினசெய்தியை வடதிருமலையருகேகேட்டு மிகவுங் க்லேசித்து வானமாமலைக் கெழுந்தருளி கைங்கர்யத்திற்காகக்கூடுந் த்ரவ்யங்களையெல்லாங்கொண்டு கைங்கர்யங்களையெல்லாந்தலைக்கட்டி திரும்பவு மெறும்பியிலே யெழுந்தருளி அங்கிருக்குமவர்களுக்கு ஈடுமுப்பத்தாறாயிரத்தை நடத்தியருளி திரும்பவும் வானமாமலைக் கெழுந்தருளினார்.

பின்புவாதூலகோத்ரரான தொட்டையங்காரப்பையும், அப்பச்சியாரண்ணாவும், வானமாமலைஜீயர் திருவடிகளை யாச்ரயித்தார்கள். தொட்டையங்காரப்பைச் சோளசிங்கபுரத்திலே யெழுந்தருளியிருந்தார். அப்பச்சியாரண்ணா, பெருமாள்கோவிலிலே கூடஸ்தரான தோழப்பர்காலந்தொடங்கி

அவர் ஸந்ததி பரம்பரையிலே யவதரித்துப் பேரருளாளரை விடாமலிருந்துக்கொண்டு, பேரருளாளர் திருக்கோவிலிலே குடிக்கொடுத்தநாச்சியார் ஸன்னிதியையுந் திருமண்டபத்தையுங் கட்டிவைத்தார். அந்த மண்டபத்திலே அடிப்பாதத்துடனே கூடின திருமண்காப்பு இன்றைவரைக்குமிருக்கிறது,

பரவஸ்து பட்டர்பிரான்ஜீயரும் திருமலையிலே யெழுந்தருளியிருந்து அண்ணராயசக்ரவர்த்தி முதலானோரை தர்சன ப்ரவர்த்தகராக்கி, அந்திமோபாயநிஷ்டையென்கிற ப்ரபந்தத்தையுஞ் செய்தருளினார். பின்பு பட்டர்பிரான்ஜீயர் திருவடிகளையாஶ்ரயித்த மேல்நாட்டுத் தோழப்பரும் அவர் தமையனாரும், பெரியஜீயர் நியமனத்தின்படியே திருநாராயணபுரத்திலே இருந்துகொண்டு திருநந்தனவனந் துடக்கமான ஸகல கைங்கர்யங்களையுஞ் செய்துக்கொண்டு அங்கிருக்கிறவர்களையும் பெரியஜீயரபிமானத்திலேயே யிருக்கும்படி திருத்திக்கொண்டு ஸ்ரீசைலத்திற்கு மேற்கும் ஸ்ரீசைலேசதயாபாத்ரவைபவத்தை வளர்த்துக்கொண்டு ஸ்ரீயதிராஜதிவ்ய மடத்திற்குப் பின்னடியிலே யெழுந்தருளியிருந்தார்கள். பின் பவர்கள் ஸந்தானபரம்பரையிலுண்டான ஐயன் முதலானோரும் அந்த கைங்கர்யங்களை நடத்திக்கொண்டு வந்தார்கள்.

வரவரமுனிதாஸரான வெறும்பியிலப்பாவும், வரவரமுனி விஷயமாகக் காவ்யம், ஸுப்ரபாதம், தினசர்யை, சம்பூ ப்ரபந்தம் முதலானவைகளைச் செய்து பின்பு பெரியஜீயரைப் பிரிந்து ஸஹிக்கமாட்டாமல் ஆர்த்தி ப்ரபந்தமருளிச்செய்தார்.

பின்பு ஜீயர் திருநாட்டிற்கெழுந்தருளி வருஷமாய் மாசிமாஸத்தில் க்ருஷ்ணபக்ஷ த்வாதசியிலே ஜீயருடைய திருவத்யயனத்தை, நம்பெருமாள் தம்முடைய ஸன்னிதியிலே யிருந்து தீர்த்தம், ப்ரஸாதம், திருப்பணியாரம்முதலான ஸகலவரிசைகளையும் மடத்திற் கனுப்பியருளி, ஜீயர் நயினார் கந்தாடையண்ணன் முதலான முதலிகளுக்கு நியமித்து நடத்தியருளினார். அது அன்றுமுத லின்றுவரைக்கும் நடந்துவருகிறது. பெரிய ஜீயர் சேஷாவதாரமாகையாலே யொருகாலங்களிலே பாலமுது அமுது செய்யும்போது திருவனந்தாழ்வானாகிற நிஜவடிவுகொண்டமுது செய்வதற் கனுகூலமாம்படி கல்தொட்டியிலே பாலமுது சேர்த்து, ஆஶ்ரிதருடைய ப்ரார்த்தனையாலே ஏகாந்தத்திலே திருவனந்தாழ்வானாகிற நிஜவடிவுகொண்டு பாலமுது அமுதுசெய்துக்கொண்டிருப்பர். ஆசார்யருடைய போஜனபாத்ரத்திலே ஸம்பந்தப்பட்ட அன்னம்முதலான உச்சிஷ்டத்தை சிஷ்யர்புசிப்பதென்று சாஸ்த்ரமிருக்கையாலே முன்னே நிஜரூபங்கொண்டு பாலமுது அமுதுசெய்தகல்தொட்டியிலே ப்ரஸாதத்தைச் சேர்த்து அந்தத்தொட்டியினுடைய ஸம்பந்தத்தாலே ஆசார்யருடைய உச்சிஷ்டமாகவே அனுஸந்தித்துக்கொண்டு அந்த ப்ரஸாதத்தை ஸகல

மான சிஷ்டர்களும், பெரியஜீயர் திருவத்யயனத்திருநாளிலே விநியோகப்படுத்திக்கொண்டு வருகிறார்கள். பொன்னாலும் வெள்ளியாலுஞ் செய்ததைப்பார்க்கிலும் கல்லாலே செய்த பாத்ரம் விரக்திக்கனுகூலமாயிருக்கிறபடியாலே உத்தமாச்ரமிகளுக்கு மிகவுஞ் சேர்ந்திருக்கும். ஆகையாலே இப்படி சிஷ்டானுஷ்டானம் முக்யமாக நடந்துவருகிறது.

இப்படி பெரியஜீயருடைய வைபவமானது உடையவர் வைபவம் போலவும் பட்டர்வைபவம்போலவும் மிகவும் விஸ்தரமாகப் பூர்வர்கள் க்ரந்தங்களிலே சொல்லியிருக்கிறதாகையாலே இங்கே ஸங்க்ஷேபமாக வெழுதப்பட்டது.

பெரியபெருமாள் துடங்கி பெரியஜீயர்வரைக்கும் குருபரம்பராக்ரமம்:—எம்பெருமான்; பெரியபிராட்டியார்; ஸேனைமுதலியார்; நம்மாழ்வார்; நாதமுனிகள்; உய்யக்கொண்டார்; மணக்காலநம்பி; ஆளவந்தார்; பெரியநம்பி; உடையவர்; எம்பார்; பட்டர்; நஞ்சீயர்; நம்பிள்ளை; வடக்குத்திருவீதிப்பிள்ளை; பிள்ளைலோகாசார்யர்; திருவாய் மொழிப்பிள்ளை; பெரியஜீயர். இது உலகத்திலேயிருந்த ஆச்ரய பரம்பரை.

இன்னமும் எழுபத்திரண்டு ஸிம்மாஸனபதிகளுடைய வம்சஸ்தருக்குத் தனித்தனியே உடையவர்துடங்கி ஆச்ரயணகுருப்ரம்பரைகளுண்டாயிருக்கும். குருபரம்பரையானது ஆச்ரயணகுருபரம்பரையும் க்ரந்த குருபரம்பரையுமாக விரண்டுபடிப்பட்டிருக்கும். அதில் க்ரந்தபரம்பரையானது, ரஹஸ்யக்ரந்த பரம்பரையும் திவ்யப்ரபந்த வ்யாக்யான பரம்பரையும் ஸ்ரீபாஷ்ய ஸ்ருதப்ரகாசிகாபரம்பரையுமாக மூன்றுவகைப் பட்டிருக்கும். அதிலே ரஹஸ்ய க்ரந்தபரம்பரையாவது:—உடையவர், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர், கூரகுலோத்தமதாஸர், திருவாய்மொழிப்பிள்ளை, பெரியஜீயர். திவ்ய ப்ரபந்தவ்யாக்யான பரம்பரையாவது:—உடையவர், திருக்குருகைப்பிரான் பிள்ளான், எம்பார், ஆழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, ஈயுண்ணிமாதவர், ஈயுண்ணிப்பத்மனாபர், கோலவராஹநயினார், நாலூர் தேவராஜர், திருவாய்மொழிப்பிள்ளை, பெரியஜீயர். இதிலே உடையவர், எம்பாரென்றே க்ரமம். பிள்ளானும் ஆழ்வானும் உபகாரகதையைக்கொண்டு இதிலே அடைப்புண்டிருப்பர். பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சாம்பிள்ளை, அவர்குமாரர் நயினாராச்சாம்பிள்ளை, வாதிகேஸரி அழகிய மணவாளஜீயர், அவர்சிஷ்யர் திருமாலையாண்டான் திருவம்சஸ்தரானவாதிகண்டீரவர், இத்யாதியாக ஒரு அவாந்தரப்பிரிவுமுண்டு. இதிலே நயினாராச்சாம்பிள்ளை செய்தருளின ப்ரபந்தங்கள்:—முக்தபோகாவலி, தத்வஸங்க்ரஹம், ஜ்ஞானார்ணவம், சரமோபாயநிர்ணயம்முதலாகப் பலவுமுண்டு. வாதிகேஸரிகள் செய்தருளின ப்ரபந்தங்கள்:—திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி, தாத்பர்யஸாரம்

தத்வதீபம்முதலானவை பலவுமுண்டு. வாதிகேஸரிவர் ரஹஸ்ய த்ரயஸார மென்றொரு க்ரந்தஞ் செய்தருளினார்.

ஸ்ரீபாஷ்ய பரம்பரையாவது:—உடையவர், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாசார்யர் இத்யாதியாக வொரு க்ரமமுண்டு. முன்னே உடையவர் தம்முடைய மருமகனாரான நடாதூராழ்வானுக்கு ஸ்ரீபாஷ்யஸிம்மாஸனத்தை ஸாதித்திருந்தாரே? அந்த நடாதூராழ்வானுடைய திருப்பேரனாரான நடாதூரம்மாளுக்குத் தம்முடைய பாட்டனாரான நடாதூராழ்வானுடைய ஸம்ப்ரதாயமில்லாமல் எங்களாழ்வானென்கிற ஸ்ரீவிஷ்ணுசித்தருடைய ஸன்னிதியிலே ஸ்ரீபாஷ்யஸம்ப்ரதாயம் உண்டாச்சுது, அதெப்படியென்றால்:—அம்மாள் மஹா மேதாவிகளாய் ஸ்ரீபாஷ்யத்தை நன்றாக அதிகரிக்கவேணுமென்று தமப்பனாருக்குத் தாய்வழியுறவிலே தமையனாரான கந்தாடையாண்டான் ஸன்னிதியிலேசென்று, அடியேனுக்கு பரமத நிராகரணப்படியும் ஸ்வமத ஸ்தாபனப்படியுமாக ஸ்ரீபாஷ்ய மருளிச்செய்யவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, மிகவும் வார்த்தகமாயிருந்தகந்தாடையாண்டான் அம்மாளைப் பார்த்து "சோழியன்தினவுகெடச்சொல்லுவர் அங்கேபோம்" என்றருளிச்செய்தார். அம்மாளும் ஸ்ரீவிஷ்ணுசித்தர் ஸன்னிதிக்கு எழுந்தருளி யடியேனுக்கு ஸ்ரீபாஷ்ய மருளிச்செய்யவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, அவரும் புத்ரனில்லாதவ ராகையாலே அம்மாளைப்பார்த்து நீரெனக்குக் கொள்ளியுமிட்டுக் குடமுஞ் சொரியுவீராகில் நானுமக்கு பாஷ்யஞ்சொல்லுகிறேனென்றருளிச்செய்தார். அம்மாளும், அப்படியே செய்கிறேனென்று விண்ணப்பஞ்செய்து ஸ்ரீவிஷ்ணுசித்தர் ஸன்னிதியிலே ஸ்ரீபாஷ்ய மதிகரித்தருளினார். ஆக உடையவர், திருக்குருகைப்பிரான்பிள்ளான், எங்களாழ்வானென்கிற ஸ்ரீவிஷ்ணுசித்தர், நடாதூரம்மாள், கிடாம்பியப்பிள்ளார், தூப்பில்பிள்ளையாகிற வேதாந்தாசார்யர், அவர்குமாரர் தூப்பில்நயினாராகிற நயினாராசார்யர், ப்ரதிவாதிபயங்கரமண்ணன், யோளிப்பாக்கம் நயினார், என்றிதொரு பரம்பரையுமுண்டு.

இதிலே பிள்ளான் திருவாய்மொழிக்கு ஆறாயிரமும், பரம ரஹஸ்யமென்கிற ரஹஸ்யமும், அருளிச்செய்தார். ஸ்ரீவிஷ்ணுசித்தர் ஸ்ரீவிஷ்ணு புராண வ்யாக்யானமும், ஸாரார்த்த சதுஷ்டயமென்கிற ரஹஸ்யமும், ஸ்ரீபாஷ்யத்திற்கு ஸங்கதிமாலையென்கிற வ்யாக்யானமும் அருளிச்செய்தார். நடாதூரம்மாள், தத்வஸாரம்; ப்ரமேயமாலை; ஸாரார்த்த சதுஷ்டய காரிகைகள் முதலான ப்ரபந்தங்களை யருளிச்செய்தார். அப்பிள்ளார் ஸ்ரீபாஷ்யத்திற்கொரு வ்யாக்யானமும் ந்யாயகுலிசமென்கிற க்ரந்தமு மருளிச்செய்தார். இந்த அப்பிள்ளாருடைய உடன்பிறந்தாருடைய குமாரர் தூப்பில்பிள்ளை. இவர் குழந்தையாய் தவிழ்ந்து விளையாடுகிற பருவத்திலே அம்மாளை யப்பிள்ளார் நடாதூரம்மாள் ஸன்னிதியிலே பாஷ்யமதிகரிக்

எச்செய்தே, இந்த ஏழுநாளை தவிழ்ந்துசென்று அம்மாள் திருவடிகளைப் பிடித்தார், அம்மாளுமுகந்தருளி குழந்தையைப்பார்த்து நீர் விச்வாமித்ர கோத்ரராகையாலே தர்சனத்திற்கு விச்வாமித்ர ஸ்ருஷ்டிபண்ணுவீரோ? என்றருளிச் செய்தார். இந்த நாப்பில்பிள்ளை ஹயக்ரீவோபாஸனைபண்ணி ஸகலசாஸ்த்ரங்களையும் பெற்று அப்பிள்ளார் திருவடிகளை யாச்ரயித்து ஸகலவேதாந்தங்களையு மதிகரித்து "கவிதார்க்கிகஸேஸரி" என்றும் "ஸர்வ தந்த்ரஸ்வ தந்த்ரர்". என்றும் திருநாமத்ஸதப் பெற்று பட்டருடைய திரு நாமமான வேதாந்தசார்ய ரென்கிற திருநாமத்தையும் பெற்று சதாதிக (ககூஅ) ப்ரபந்தங்களுஞ்செய்தார். அதிலே பிள்ளான் செய்தருளின வாறுயிரப்படிக்கும் பரமரஹஸ்யத்திற்கும் மற்றும் பூர்வாசார்ய க்ரந்தங் களுக்கும் விரோதமாக வ்யாக்யானங்கள் செய்தபடியாலே பெருமாள் திருவுள்ளங் கலங்கினதும் பெரியவாச்சாம்பிள்ளை ஸ்வப்னவிருத்தாந்தமும் இவரபசாரக்ஷாமணம் பண்ணிக்கொண்டது முதலானதும், ஆசார்யஹ்ரு தயத்திற்காக அழகிய மணவாளப்பெருமாள் நயினருக்கும் இவருக்கும்வந்த ப்ரதிக்ஞை முதலானதும் முன்பே யெழுதிற்று.

நயினாசார்யரும் அநிர்வசனீயகண்டனம், விரோதபரிஹாரம் முத லான க்ரந்தங்கள் செய்தருளி ராமானுஜ ஸித்தாந்த விஜயத்வஜமா யெழு ந்தருளி யிருந்தார். ப்ரதிவாதி பயங்கரமண்ணவும் அஷ்டச்லோகீ வ்யாக் யானம்முதலான வனேகக்ரந்தங்கள் செய்தருளினர்.

இன்னமும் எழுபத்திரண்டு ஸிம்மாஸனாதிபதிகளுடைய வம்சஸ்தருக் குத் தனித்தனியே தங்கள் தங்கள் கூடஸ்தர்துடங்கி ஸ்ரீபாஷ்யபரம்பரை களுமுண்டு.

நடாதூரம்மாள் ஹஸ்திகிரி யடிவாரத்திலே ஸ்ரீபாஷ்யம் நிர்வஹித் துக்கொண் டிருக்கச்செய்தே, ஸ்ரீரங்கத்திலேயிருந்து ஸுதர்சனபட்டர் சிஷ்யானுக்ரஹார்த்தமாகப் பெருமாள்கோவிலிலேவந்து அம்மாள் ஸன் னிதியிலே ஸ்ரீபாஷ்யம் அதிகரிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, சிஷ்யஸஞ்சா ரத்தைத் தவிர்ந்து அம்மாள் ஸன்னிதியிலே பனிரண்டு ஸம்வத்ஸரத்திலே பத்தாவ்ருத்தி ஸ்ரீபாஷ்யங் கேட்டருளினர். அப்போது ஆவ்ருத்திகள் தோறும் அர்த்தபேதங்களையும் சப்தபேதங்களையுமோன்றோடொன்று கல சாமல் தனித்தனியே தரித்துக்கொண்டு மௌனமாயிருப்பர். இப்படி யிருக்கு மிவருடைய மஹாசக்தியை யம்மாள் அறிந்திருப்பர். இப்படி யிருக்க, ஒருநாள் சு (ஸு) தர்சனபட்டர் ஸன்னிதிக்கு வருவதற்குப்போது சென்றது. அம்மாள் பட்டர்வரவில்லையேயென்று கேட்டருளினர், அப் பிள்ளார் முதலானவர் இவருடைய மௌனத்தை யுள்ளபடி யறியாமல் இவர் நிபுணரன்னென்று சிலவற்றை யம்மாள் ஸன்னிதியிலே சொன்னார் கள். அம்மாளும் சுதர்சனபட்டர் எழுந்தருளின வளவிலே பட்டரே? நாம்சொன்னதேதாகிலுந் தெரிந்ததாகில் சிறிதுசொல்லுமென் றருளிச்

செய்ய, பட்டருமெந்தவுருவில் உபன்யாஸத்தை விண்ணப்பஞ்செய்வ தென்ன, அம்மாளும் உருத்தோறுஞ் சிறித உபன்யஸியுமென்ன, சுதர் சனபட்டரும் உருத்தோறும் ஒன்றோடொன்று கலசாமல் சப்தானுவாதத் துடனே யுபன்யஸிக்க, அம்மாளும் முதலிகளுங்கேட்டு மிகவு மாச்சர்யப் பட்டார்கள். பின்பு சுதர்சனப்படர் ஸ்ரீரங்கத்திற்கெழுந்தருளினவளவிலே பெரியபெருமாள் சுதர்சனப்பட்டருக் கருளப்பாடுஸாதித்து ஸ்ரீவேதவ் யாஸனென்று திருநாமஞ்சாற்றி ஸ்ரீபாஷ்யத்திற் கொருவ்யாக்யான மிடு மென்று நியமித்தருளினர். சுதர்சனபட்டரும் முப்பத்தாறுயிரமாக வொரு வ்யாக்யானமெழுதி, ஆசார்யர் ஸன்னிதியிலே ஸ்ரவணம் பண்ணப்பட்ட பொருள்களை ப்ரகாசிப்பிக்கையாலே ச்ருதப்ரகாசிகையென்று திருநாமஞ் சாற்றினர். பின்பு ஸ்ரீபாஷ்யத்திற்கு ச்ருதப்ரதீபிகை யென்றொரு லகு வ்யாக்யானமும், வேதார்த்தஸங்க்ரஹதீபிகையும், கத்யத்ரயவ்யாக்யான மும், ப்ரபத்திப்ரயோககாரிகையும், பாகவதவ்யக்யானஞ் சுகபக்ஷீயமும், சு (ஸு) பாலோபனிஷத்விவரணமுஞ் செய்தருளினர்.

அப்போது பெருமாளுடைய ஸங்கல்பத்தாலே மேலெழுதியபடியே கோவில் ம்லேச்சாக்ராந்தமாய் அத்தாலே அங்குள்ளாரில்சில ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு ஏககாலத்திலே நம்பெருமாள் பரமபதம் ப்ரஸாதித்தருளி, அப் போதே அந்தம்லேச்சரை யங்கிருக்கவொட்டாமல் வடகரையில் கண்ண னூரிலே போம்படிபண்ணியருளினர். பின்பு ச்ருதப்ரகாசிகாசார்யருடைய குமாரரான உத்தண்டபட்டரும் தூப்பில்பிள்ளையும் உபாயத்திலே அந்த ஆபத்தைத் தப்பவைத்துக்கொண்டு நிர்மானுஷ்யமாயிருக்கிற வவ்விடத் தில் ச்ருதப்ரகாசிகாபட்டருடைய திருமாளிகையிலேசென்று அந்தச்ருத ப்ரகாசிகா ஸ்ரீகோசத்தை உத்தண்டபட்டரெடுத்துக்கொடுக்க, தூப்பில் பிள்ளையும் வாங்கிக்கொண்டு ஸந்துஷ்டராய், (ஸ்வபிதாவானச்ருதப்ரகாசிகா பட்டரிடத்திலே உபயவேதாந்தாதி ஸகலசாஸ்த்ரங்களையு மன்வயித்து ஜ்ஞானதிஸத்குணபரிபூர்ணராய் பரமதநிரஸனத்தாலே உத்தண்டபட்ட ரென்று வாதிகோஷ்டியிலே ப்ரஸித்தரா யிருக்கிற) ச்ருதப்ரகாசிகாசார் யர் குமாரரையுங் கூட்டிக்கொண்டு, மேல்நாட்டிலே போயிருந்து ச்ருதப்ர காசிகையை ஸம்ப்ரதாயசுத்தியையுடையரான வவர் ஸன்னிதியிலே யதி கரித்து, பல ஸ்ரீகோசங்களையு மெழுதிவிற்று அத்தை யோக்யரிடங்களிலே ப்ரவர்த்திப்பிக்கையாலே இப்போது ச்ருத ப்ராகாசிகையோடு கூடின ஸ்ரீ பாஷ்யத்தையதிகரிப்பார் "ஸ்ரீமான் வேங்கடநாதார்ய:" என்கிறதனியனையும் ஸ்ரீபாஷ்ய பரம்பரையிலே யனுஸந்தித்துக்கொண்டு போருகிறார்கள். பாஷ்யகாரருடைய காலத்திலேயுண்டான நயப்ரகாசிகைமுதலான வ்யாக் யானத்தோடே கூடின பாஷ்யான்வயத்திலே இவர் தனியனை யனுஸந் திப்பதில்லை.

இப்படி மூன்றுவகைப்பட்டிருக்கிற க்ரந்தஸம்ப்ரதாய பரம்பரை யிலே த்ராவிடவேதபாஷ்ய ப்ரவர்த்தகராகிய நஞ்சீயர் நம்பிள்ளைமுதலா

ஞரைத் தென்னாசார்யரென்றும், ஸ்ரீபாஷ்யப்ரவர்த்தகராகிய ஸ்ரீவிஷ்ணுசித்தர் நடாதூரம்மாள் முதலானோரை வடவாசார்யரென்றும், க்ரந்தங்களிலே யெழுதியிருப்பதுண்டு. இருவருக்கும் இரண்டுபாஷ்ய ப்ரவர்த்தகத்வமுண்டாயிருக்கச்செய்தேயும் மிகுதியைப்பற்ற வழக்கங்களிருக்கிறது. இப்படி க்ரந்தவழக்கங்களை யறியாமல் தென்கலையாரென்றும் வடகலையாரென்றும் உலகவாதம்வந்துவிழுந்தது. இவர்களிலே தென்னரங்கமான கோயிலிலே இருந்துக்கொண்டு தென்மொழியான த்ராவிடவேதபாஷ்ய ப்ரவர்த்தனமே மிகுதியாயிருக்கையாலே, நஞ்சீயர் நம்பிள்ளை முதலானோரைத் தென்னாசார்யரென்பது. கோயிலுக்கு வடதேசத்திலே யிருக்கிற பெருமாள் கோவிலாகிற கச்சிநகரிலே இருந்துக்கொண்டு வடமொழியான ஸ்ரீபாஷ்யப்ரவர்த்தனமே மிகுதியாயிருக்கையாலே ஸ்ரீவிஷ்ணுசித்தர்முதலானோரை வடவாசார்யரென்பதென்று வகையிட்டிருக்கும்.

இனி வானமாமலைமடத்துத் திருமுடிவர்க்கமெழுதுகிறது:—பெரிய ஜீயருடைய திருவடிகளையாச்ரயித்த அஷ்டதிக்கஜங்களிலே யொருவராயிருக்கிற வானமாமலை ராமானுஜஜீயர்-௧-களமூர்வரதமுனி-௨-செண்டலங்காரஸ்வாமி-௩-பெரிய ரங்கப்பஸ்வாமி-௪-திம்மய்யங்கார்ஸ்வாமி-௫-எம்பெருமானார்ஸ்வாமி-௬-பெரியதிருவேங்கடஸ்வாமி-௭-கோனப்பஸ்வாமி ௮-சின்னரங்கப்பஸ்வாமி-௯-சின்னதிருவேங்கடஸ்வாமி-௧௦பெரியதெய்வநாயகஸ்வாமி-௧௧-திருவேங்கடஸ்வாமி-௧௨-சின்ன தெய்வநாயகஸ்வாமி ௧௩-கூரத்தாழ்வான்ஸ்வாமி-௧௪-ஸ்ரீவத்ஸசின்னஸ்வாமி - ௧௫- திருவேங்கடஸ்வாமி-௧௬-திருவேங்கட ராமானுஜஸ்வாமி-௧௭-சடகோப ராமானுஜஸ்வாமி-௧௮.

வானமாமலை ராமானுஜஜீயருடைய அஷ்டதிக்கஜங்களெழுதுகிறது:-
சோளசிங்கபுரம்தொட்டையங்காரப்பை-௧-ஸமரபுங்கவாசார்யார்-௨-சுத்தஸத்வம் அண்ணன்-௩ பெருமாள்கோவில் அப்பச்சியாரண்ணன்-௪-ராமானுஜம்பிள்ளை-௫-திருக்கோட்டியூரையர்-௬-ஜ்ஞானக்கண்ணாத்தான்-௭-பள்ளக்காலநசித்தான்-௮-இவர்களிலே தொட்டையங்காரப்பை ச்ருத ப்ரகாசிகைக்கு நாலிகையென்றொரு வ்யாக்யானஞ்செய்தருளினார். அப்பச்சியாரண்ணா பெருமாள்கோவிலிலே பேரருளாளர் ஸன்னிதியிலே ஸேனை முதலியார் ஸன்னிதிக்கு மேற்கிலே ஆண்டாளுக்கு ஸன்னிதியுந் திருமண்காப்பும் கட்டிவித்து திரு ப்ரதிஷ்டை பண்ணிவித்தார். ஹஸ்திகிரியிலே யெழுந்தருளியிருக்கிற பேரருளாளர் முதலான வாறுதிருக்கோலங்களிலே ஒருதிருக்கோலம் அப்பச்சியாரண்ணா திருமாளிகையிலே திருவுள்ளப்பட்டு திருவாராதனமாக வெழுந்தருளியிருக்கிறார்.

இனி அஹோபில மடத்தாருடைய வரலாறும் திருமுடிவர்க்கமும் எழுதுகிறது:—பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, இப்பால்ஸ்ரீரங்காசார்யர்-௧-கேசவாசார்யர்-௨-ஸ்ரீனிவாஸாசார்யர்-௩-கேசவா

சார்யர்-௪-ஆக இந்த நாலுதிருநாமமும் க்ரஹஸ்தாச்ரமம். இனிமேல் ஸந்யாஸாச்ரமம். கேசவாசார்யர் சிஷ்யர் ஆதிவண்சடகோபஸ்வாமி-௫-ஸ்ரீமந்நாராயணஸ்வாமி-௬-பராங்குசஸ்வாமி-௭-ஸ்ரீநிவாஸஸ்வாமி-௮-வண்சடாரிஸ்வாமி-௯-பராங்குசஸ்வாமி-௰-சடகோபஸ்வாமி-௧௧-பராங்குசஸ்வாமி-௧௨-நாராயணஸ்வாமி-௧௩-வண்சடாரிஸ்வாமி-௧௪-ஸ்ரீநிவாஸஸ்வாமி-௧௫-நாராயணஸ்வாமி-௧௬-வீரராகவஸ்வாமி-௧௭-வரதாராஜஸ்வாமி-௧௮-ஸ்ரீநிவாஸஸ்வாமி-௧௯.ஸ்ரீமந்நாராயணஸ்வாமி-௨௰.கல்யாணவீரராகவஸ்வாமி-௨௧-ஸ்ரீசடாரிஸ்வாமி-௨௨-ஸ்ரீநிவாஸஸ்வாமி-௨௩-ஸ்ரீவீரராகவஸ்வாமி-௨௪-பராங்குசஸ்வாமி-௨௫-ஸ்ரீமந்நாராயணஸ்வாமி-௨௬-ஸ்ரீவீரராகவஸ்வாமி-௨௭-பராங்குசஸ்வாமி-௨௮-ஸ்ரீநிவாஸஸ்வாமி-௨௯-ரங்கநாதஸ்வாமி-௩௰-ஆகவிவர்கள் பெரியவாச்சாம்பிள்ளை ஸந்நிதியிலே பஞ்சஸம்ஸ்கார ஸம்ப்ரதாயத்தைப்பெற்றிருப்பர்கள். பட்டர்செய்த அஷ்டச்லோகியென்கிறமந்த்ரவ்யாக்யானத்தையும், அத்தை மூந்நூலாகப்பற்றியிருக்கிற பெரியவாச்சாம்பிள்ளைசெய்த பரந்தரஹஸ்யமென்கிற மந்த்ரவ்யாக்யானத்தையும், அதிகரித்துக்கொண்டு அத்தைப்பற்றிக்கொண்டேரஹஸ்யத்ரயஜீவாதுவென்கிற மந்த்ரவ்யாக்யானத்தையும் புருஷகாரமீமாம்ஸையென்கிற மந்த்ரவ்யாக்யானத்தையும் மீமாம்ஸாமணிதீபிகையென்கிற மந்த்ரவ்யாக்யானத்தையுஞ்செய்து முப்பத்தாறாயிரப்படியையு மதிகரித்துக்கொண்டு ஸ்ரீஜயந்த்யாதிகளிலே பாரணைமுதலான வாசாரங்களைத் தென்னாசார்யர்களுடைய ஸம்பரதாயப்படிக்கு ஆசரித்துக்கொண்டு மடத்திலே எப்போதும் ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தநியனை யனுஸந்தித்துக்கொண்டு பட்டர்முதல் பெரியஜீயர்பர்யந்தமான பூர்வாசார்யர்களுடைய திருநக்ஷத்ரோத்ஸவங்களை மடத்திலே பரிபாலித்துக்கொண்டு வருகிறார்கள். மேலெழுதிய ரஹஸ்யத்ரயஜீவாதுவென்கிற க்ரந்தத்திலே யிருக்கிற வவர்களுடையமுகவசனமெழுதுகிறது. எப்படியென்றால்:-"விஷ்ணுவேமோக்ஷம் ப்ரஸாதிப்பர்; அவருடைய பத்நியான லக்ஷ்மி அதற்குப் புருஷகாரமாத்ரமென்று நம்மாசார்யர்களுடைய ஸம்ப்ரதாயமிருப்பது. வேதாந்தாசார்யரோ வென்றால் லக்ஷ்மிக்கு மோக்ஷோபாயத்வஞ் சொல்லிக்கொண்டிருக்கிறாரென்று" ரஹஸ்யத்ரயஜீவாதுவிலே சொன்னார்கள். இந்த முகவசனத்திலே அஹோபிலமடத்தார் தென்னாசார்யர்களைத் தங்களுக் காசார்யர்களென்றும், வேதாந்தாசார்யரைத் தங்கள் ஆசார்யரன்றென்றுங்கொண்டார்களென்று மிகவும் வெளியாகக்காணப்படுகிறது.

இந்த அஹோபில ஸம்ஸ்தானம் ப்ரம்மதந்த்ர ஜீயர்மடத்திற்கு முன்னே ஐம்பதுவருஷந் துடங்கிவருகிறது. இதிலே ஆதிவண்சடகோபஸ்வாமியென்கிறவர் மஹாநுபாவராய் திருநகரியிலே ஆழ்வார்ஸந்நிதியிலே ஸ்வப்னத்திலே ஹநுமன்முத்ரையைப்பெற்று, அங்கே அனேகந்திருப்பணிகள் செய்து, மேல்நாட்டிலே திருநாராயணபுரத்திலே வந்து மணவாளமாமுனிகளுக்குத் தனிக்கோயிலுங் கோபுரங்களுங் கட்டி-

வைத்து பின்பு அஹோபிலத்திற்குப்போய், அங்கேயிருக்கிற பஞ்சபேரங்களிலே யொரு நரசிங்கவிக்ரஹத்தை யாராதனமாகப்பெற்றார். ஆகையாலே அன்றுமுதல் அஹோபிலமடமென்று வழக்கமிருக்கிறது. இவர்கள் யாராகிலுந் தங்களையடுத்து வேதாந்தாசார்யருடைய மந்த்ரவ்யாக்யானஞ் சொல்லவேணுமென்று கேட்டால், அவர்களுக்கு வேதாந்தாசார்யர்செய்த மந்த்ரவ்யாக்யானத்தைச் சொல்லிக்கொண்டுவருவர்கள். இவர்களுக்கு த்ராவிடவேததேசிகரென்றே சிறப்புச்சொல்லுக்களிருக்கும். ஆகவிந்த அகோபிலமடத்தாரெல்லாரும் பெரியவாச்சாம்பிள்ளை சிஷ்யர்களாயிருப்பர்.

இனிப்ரம்மதந்த்ரஸ்வாமி திருமுடியடைவு எழுதுகிறது:—வேதாந்தாசார்யருடைய சிஷ்யரான பேரருளாளய்யரென்கிறவர், ஸந்யாஸம்வாங்கிக்கொண்டு வேதாந்தாசார்யரிடத்திலே ஹயக்ரீவர் விக்ரஹத்தை யாராதனமாகப்பெற்று தமக்குப்பிற்பாடு ஒருஸந்யாஸியை யேர்ப்படுத்தினர். ப்ரம்மதந்த்ரஸ்வதந்த்ரர்-௧-நரஸிம்மர்-௨-வேதாந்தயதிபதி-௩-ராமசந்த்ரர்-௪-நரஸிம்மர்-௫-வேதாந்தலக்ஷ்மணமுனி-௬-ப்ரம்மதந்த்ரஸ்வதந்த்ரர்-௭-ஸ்ரீநிவாஸர்-௮-வேதாந்தயதிராஜர்-௯-ப்ரம்மதந்த்ரமுனி-௧௦-ஸ்ரீநிவாஸர்-௧௧-வேதாந்தலக்ஷ்மணமுனி-௧௨ - இந்தமடத்திலே சக்ராங்கநம் பெற்ற ஸ்ரீநிவாஸய்யங்காரென்கிறவர் ஸந்யாஸம் வாங்கிக்கொண்டு பரகாலரென்று பேர் வைத்துக்கொண்டு மைசூரிராஜாவை யநுஸரித்து சிலத்ரவ்யங்களும் சில சிஷ்யர்களும் ஸம்பாதித்து மடமுங்கட்டிக்கொண்டிருந்தார். அதிலே ஸ்ரீநிவாஸபரகாலர்-௧-ராமாநுஜபரகாலர்-௨-ஸ்ரீநிவாஸபரகாலர் -௩- கண்டாவதாரபரகாலர்-௪-இந்த மடத்திற்கு பூர்வாசார்ய நியமனமாவதுபகவந்நியமனமாவது இல்லாமல் ஒருப்ரபலவிக்ரஹமுமில்லாமல் கேவலம்ஸ்வேச்சையாலே வைத்துக்கொண்டதாகையாலே இந்த பரகாலமடத்திற்கு மூலசுத்தியில்லை.

இனி பக்தி ப்ரபத்தி விஷயமாக வெழுதுகிறது:—பக்திபண்ணமாட்டாத மந்தாதிகாரிக்கு ப்ரபத்திபண்ணவேண்டுமென்று வேதாந்தாசார்யருடைய ஸித்தாந்தமாகையாலே வடகலையார் பக்தி ப்ரபத்திகளிரண்டையும் பிடிச்சார்களென்று சொல்லுவது ஸித்தாந்தவிரோதமாயும் சாஸ்த்ரவிரோதமாயுமிருக்கும். பக்தியும் ப்ரபத்தியும் ஆசார்யப்ரபத்தியும்மோக்ஷமார்க்கமாயிருக்கும். அதிலே ஆசார்யப்ரபத்தியே முக்யம். அதிலே விச்வாஸமில்லாத மந்தாதிகாரிகளுக்கு ப்ரபத்தியென்று வேதாந்தாசார்யர் ஸித்தாந்தமாகையாலே முக்யமான வாசார்யப்ரபத்தியைவிட்டு அமுக்யமான ப்ரபத்தியைப்பிடித்தபடியாலே வடகலையாருக்கு முக்யவைஷ்ணவத்வமில்லை. பட்டருடையமந்த்ரவ்யாக்யானமே எல்லாமந்த்ரவ்யாக்யானங்களுக்கும் மூநூலாகையாலே பட்டர்ஸம்பந்தந் தங்களுக்கிருந்தும் தங்களுக்கில்லையென்று சொல்லுமவர்களின் வைஷ்ணவத்வம் விலக்ஷணமாயிருக்கவேணும், ராமாநுஜாசார்யருடைய நியமனத்தாலே வந்திருக்கிற

பிள்ளானுருயிரப்படிக்கு மிகவும் விரோதப்பட்டிருக்கிற வேதாந்தாசார்ய ருடைய மந்த்ரவ்யாக்யானத்தை ஸம்ப்ரதாயசுத்தியுடையரா யிருப்பா ரொருவரு மொப்பார்கள்.

எழுபத்திநான்குஸிம்மாஸனஸ்தருடைய வம்சத்திலே பிறந்தவர்கள் சிலர் தங்கள் தமையன்மாரிடத்தில் பஞ்சஸம்ஸ்காரம்மாத்ரம் பெற்று ஆசார்யபுருஷவம்சஸ்தரல்லாத வேதாந்தாசாரியருக்கு சிஷ்யராய் அவ ரிடத்தில் மந்த்ரார்த்த ஜ்ஞானத்தையும் சரணுகதியையும் பெற்றிருப்பர் கள். பஞ்சஸம்ஸ்காரத்தில் காட்டிலும் மந்த்ரார்த்தஜ்ஞானமுஞ் சரணு கதியும் மிகவும் முக்யமாகையாலே முக்யத்தை ஆசார்யபுருஷரல்லாத வேதாந்தாசார்யரிடத்திலே பெற்றபடியாலே அவர்களுக்கு ஆசார்யபுரு ஷத்வம் நஷ்டமாய் போயிற்றென்றுசொல்லவேண்டிவருகையாலேயெதிரி சொன்ன தூஷணம் தனக்கேவந்துவிழுந்தது. இதற்கு இருவரும் கூடிச் சொல்லவேண்டிய ஸமாதானம் முன்பேயெழுதிற்று. மஹாவித்வானுன ப்ரதிவாதி பயங்கரமண்ணன் வேதாந்தாசார்யருடைய மந்த்ரவ்யாக்யா னத்திலே இருக்கிற ஸம்ப்ரதாயவிரோதத்தையும் பூர்வாசார்ய தூஷணங் களையும் பார்த்து இப்படிப்பட்ட வேதாந்தாசார்யருடைய ஸம்பந்தத்தால் தமக்குக் கார்யமில்லையென்று பார்த்து ஸம்ப்ரதாயசுத்தியையுடையராய் பரமஸாத்விகரான பெரியஜீயர் திருவடிகளை யாச்ரயித்தார். இப்படியிருக்க த்ரவ்யத்திற்காக ப்ரதிவாதிபயங்கரமண்ணு பெரியஜீயரை யாச்ரயித்தா ரென்று வடகலையார்சொல்லுகிற கல்பனைதானே வேதாந்தாசார்யருடைய உபதேசக்கொற்றையை நன்ருக வெளிப்படுத்துகிறது.

## இனிஸ்ரீரங்காதிஸ்தலங்களிலே ப்ரதமதீர்த்தங்களைப் பற்றியெழுதுகிறது.

என்னவென்ருல்:—கோயிற்றிருமலை பெருமாள்கோயிலென்கிற இந்த மூன்றும் விஷ்ணுஸ்தலங்களிலேமுக்யமென்று ஸித்தாந்தம். அதிலேமுதல் முக்யமான ஸ்ரீரங்கத்திலே ஸ்ரீபாஷ்யகாரர் காலந்துடங்கி யின்றுவரைக் கும் வடகலையாருக்கு ப்ரதமதீர்த்தம் மர்யாதையென்கிற ப்ரஸங்கமே யில்லையென்று லோகப்ரஸித்தமாயிருக்கும். இனி திருமலையிலும் பாஷ்ய காரர்நாள்துடங்கி இன்றுவரைக்குங் கோயில்விசாரணைமுத்ரையும் ப்ரதம தீர்த்தம்முதலான மர்யாதைகளும் பாஷ்யகாரர் நியமித்த பெரியகேழ்வி ஜீயருக்குநடந்துவருகிறது. மணவாளமாமுனிகள் காலந்துடங்கி இரண்டா வது முத்ரையும் இரண்டாவது தீர்த்தம் முதலான மர்யாதையும் மணவாள மாமுனிகள் நியமித்ததிருமலை சிறியகேழ்வி யெம்பெருமானர் ஜீயருக்கு நடந்துவருகிறது. மூன்ருவது தீர்த்தம் தோழப்பாசார்யருக்கு சிலநாளாய் நடந்துவருகிறது, அதற்குமுன்னே அனந்தாண்பிள்ளை ஸந்ததியாருக்கு மூன்ருந்தீர்த்தமுந் தோழப்பாசார்யர் ஸந்ததியாருக்கு நான்காந்தீர்த்தமு

மாசுநடந்துவந்த வித்தைஸாளுவராஜாவினுடைய அவலம்பனத்தாலேவட
கலையார் முன்னது பின்னதாக மாற்றிப்புகட்டார்கள். ஆகையாலே
தோழப்பாசார்யர் ஸந்ததியாருக்குத் திருமலையிலே ப்ரதமதீர்த்த மொரு
நாளும் நடந்துவந்ததில்லை. பெருமாள்கோவிலிலே முதலியாண்டான்,
கந்தாடைதோழப்பர், அப்பச்சியாரண்ணா, இவர்களுக்கு அனேகமர்யாதை
களும், பெரியகேழ்விஜீயர், சிறியகேழ்விஜீயர், கோயில்அழகிய மணவாள
ஜீயர், இவர்களுக்குக் கோவில்விசாரணை முத்ரையும் ப்ரதமதீர்த்தம் முத
லான மர்யாதைகளும் பாஷ்யகார்நாள்முதல்நடந்துவந்தது. அதிலேகுமார
வெங்கடாசார்யருக்கு மூலபுருஷராயும் கந்தாடைதோழப்பருடைய வம்
சஸ்தராயு மிருக்கிற அப்பச்சியாரண்ணாவினுடைய கைங்கர்ய நிர்வாஹங்
கள் முன்பே யெழுதிற்று. கோயிலழகிய மணவாளஜீயரென்கிறவர், (இப்
போது நூறுவருஷத்திலே யிருந்த பெருமாள் கோயிலழகிய மணவாளஜீய
ரல்லாமல் இவருக்கு முன்னே வேறேயொருவரிருந்தார். அவர்,) தேவப்
பெருமாள் ஸந்நிதி ஸமீபத்திலே மூன்றுலே பாலாறு ப்ரவாஹம் பெரு
கிக்கொண்டு கோவிலிலேவந்து விழுந்து மிகவுமுபத்ரவம்பண்ணிக்கொண்
டிருந்தது. கோயிலழகியமணவாளஜீயர் அத்தைப்பார்த்து காவேரிப்பாக்
கத் தண்டையிலே கட்டித்திருப்பி கோவிலுக்கு ஒருநாழிகைவழி தெற்கே
போம்படிபண்ணி கோவிலைநிலைநிறுத்தினார். இன்னமும் கீழைப்பெரிய
திருக்கோபுரமும் கட்டிவித்து பொற்றாமரைத்தீர்த்தத்தை வளைத்துப் பெரிய
மதிளையுங்கட்டிவித்தார். இப்படியனேக கைங்கர்யங்களுஞ் செய்தார்.
பின்பு சிலநாளிலே தாதாசார்யரென்கிறவர் காஞ்சீதேசத்திற்கு ராஜா
வான ஒருராயனுக்கு குருவாயும் பின்பவனுடைய குழந்தைப்பிள்ளைக்கு
ஸ்தாநாபதியாயு மிருந்தவர் தம்முடைய அதிகாரமேன்மையாலே ஜீயர்க
ளுடைய அதிகாரத்தையும் கந்தாடையாருடைய மர்யாதைகளையும் ஆக்ர
மித்துக்கொண்டார். அந்த தாதாசார்யர் எங்கேயிருப்பவரென்றால்:—
பெரியவாச்சாம்பிள்ளை ஸம்ப்ரதாயஸ்தரான அஹோபிலமடத்துஸ்வாமி
களிலே ஷஷ்டபராங்குசஸ்வாமியென்று ஒருமஹாநுபாவ ரெழுந்தருளி
யிருந்தார். உலகத்திலே அவருடைய ஸம்ப்ரதாயமில்லாத வடகலையா
ரொருவருமில்லை. அப்பேர்ப்பட்ட ஷஷ்டபராங்குசஸ்வாமி ஸந்நிதியிலே
சக்ராங்கனம்பெறவேணுமென்று ஆனைக்கொந்திராயனிலே யொருவன்
வந்தான். ஷஷ்டபராங்குசஸ்வாமியானவர் அவனுக்கு சக்ராங்கனம்
பண்ணுவதில் ஸம்மதிப்படாமலிருந்தார். அந்தஸ்வாமிஸந்நிதியிலேஸுதர்
சநஹோமமென்கிற பணிவிடைசெய்துக்கொண்டு திருமலைநம்பி கோத்
ரஸ்தரான வெங்கடாசார்யரென்கிறவர் திருமலையைவிட்டுவந்து சிலநாள்
ஸந்நிதியிலே காத்துக்கொண்டிருந்தார். அவர் இராயன்வந்தகார்யத்தை
யும் அதற்கு ஷஷ்டபராங்குசஸ்வாமி இசையாமலிருந்ததையு மறிந்து
ரஹஸ்யத்திலே ஸ்வாமி ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்தது:—அடியேன்
திருவடிகளைக் காத்துக்கொண்டிருக்கிறேனே; அடியேனை இதற்காளாக
நியமித்தால் அடியேன்குடும்பியாகையாலேபிழைத்துப்போகிறேனென்று

சொன்னர். ஷஷ்டீபராங்குசஸ்வாமியு மங்கீகரித்து ராயனுக்கு சு (-ஸு) தர்சனஹோமம் வெங்கடாசார்யர் கையாலே சக்ராங்கனஞ்செய்வித்தார். பின்பு சுதர்சனஹோமம் வெங்கடாசார்யரென்கிறவர்ராயகுருவாய்காஞ்சீ புரத்திலேவந்து அங்கே பூர்வமாயிருக்கிறவர்களைப் பீடித்து வீடுவாசலைப் பறித்துக்கொண்டு கோவில்நிர்வாஹங்களையும் பிடுங்கிக்கொண்டு தெங் கலையாயிருக்குமவர்களை யதிகாரத்தாலே சக்ராங்கனம்பண்ணி, முன்னாலே கோயிலழகியமணவாளஜீயர் ஸம்பாதித்து க்ஷேமித்துவைத்த பெருமாள் தாநங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டு கோவில் விசாரணையையும் ப்ரதமதீர்த்தத்தையும்பற்றி யநுபவித்துக்கொண்டிருந்தார்.

பின்பு சிலநாளிலே இதுசெய்தி கோலகொண்ட ப்ரபு அறிந்து இவர் ப்ரதமதீர்த்தத்தை நிறுத்திப்புகட்டான், பின்பு சிலநாளிலே அநுஸரணத் தாலே ப்ரதமதீர்த்தத்தைமாத்ரந் திருப்பிக்கொண்டார். இன்னுமிந்த தாதா சார்யருடைய கோணல்கள் அனேகமுண்டு. இப்படி தாதாசார்யருக்கு மத்யேராயபலத்தாலே ப்ரதமதீர்த்தமுண்டாயிற்று. பூர்வகாலத்திலே இவருக்குத்தீர்த்தமில்லை. இப்படியே தாதாசார்யர் ஸந்ததியாருக்கு ப்ர தமதீர்த்தம்முதலான மர்யாதைகள் பலத்தாலே கட்டிக்கொண்டதா யிருக்கும்.

திருக்குடந்தையிலே முன்னாலே தரணீவராஹனென்கிற ராஜாவி னுடைய காலத்திலே கந்தாடையாரிலே மங்கலத்திலப்பாவென்கிறவர் ராஜாவினுடைய வாஸ்த்தானத்திலே சாஸ்த்ரவாதத்திலே ஜயித்து தரணீவ ராகனென்கிற ராஜாவை சிஷ்யனாக்கிக்கொண்டு மங்கலமென்கிற க்ரா மத்தையும் பெற்று தரணீவராகஹபுரமென்று கந்தாடைவீதியையுங் கட்டு வித்து திருக்குடந்தை முதலான திருப்பதிகளிலே மங்கலத்திலப்பாவென் றுந் தம்முடைய திருநாமத்தாலே பரியபட்டம் ப்ரதமதீர்த்தம் முதலான மர்யாதைகளை யநுபவித்துக்கொண்டு திருப்பணிமுதலான ஸகல கைங்கர் யங்களையுஞ் செய்துக்கொண்டிருந்தார். பின்பு ராஜாக்களுடைய காலம் போய் விஜயராகவநாயகன் சோளதேசத்தை யாளுகிறகாலத்திலே அவ னுக்கு குருக்களாய் காஞ்சீபுரந் தாதாசார்யருக்கு ஜ்ஞாதியாயிருக்கிற நாவல்பாக்கந் தாதாசார்யர் கந்தாடையாருடைய மர்யாதைகளைப் பற்றிக் கொண்டு கந்தாடைவீதியையு மாக்ரமித்துக்கொண்டார். இப்படிஇன்னு மவர்கள் செய்தவதர்க்கணங்கள் பலவுமுண்டு.

இனி ஸ்ரீரங்காதிஸ்தலங்களிலே வேதாந்தாசார்யருடைய விக்ரஹங்க ளுடைய வரவாறு யெழுதுகிறது.

கந்தாடைதோழப்பருடைய லக்ஷ்மணாசார்யரென்கிற குமாரர் வேதா ந்தாசார்யரிடத்திலேயபசாரப்பட்டு குஷ்டரோகம்பிடித்து பின்பு வேதா ந்தாசார்யருடைய ஸ்ரீபாததீர்த்தத்தாலே ரோகந்தீர்ந்து பின் ஒருபிள்ளை

பிறந்து அவருக்குத் தீர்த்தபிள்ளானென்று பெயர். அவர் ஸ்ரீரங்கத்திலே வேதாந்தாசார்யர் விக்ரஹத்தை ப்ரதிஷ்டைபண்ணி வைத்தாரென்று சொல்லுமது சுத்த கல்பனையாயிருக்கும். கந்தாடை தோழப்பருக்கு லக்ஷ்மணாசார்யரென்று பெயருள்ள குமாரரில்லையென்றும் அவருக்கு தீர்த்தப்பிள்ளானென்று குமாரரில்லையென்றும் கந்தாடையாருடைய வம்சாவலிப்புஸ்தகங்களைப் பார்த்தால் தெரியும். ஆகையாலே தீர்த்தப்பிள்ளானென்கிறவர் ஸ்ரீரங்கத்திலே வேதாந்தார்யர் விக்கிரஹத்தை ப்ரதிஷ்டைபண்ணி வைத்தாரென்கிறது மெய்க்கொள்ளமாட்டாது. வேதாந்தாசார்யர் குமாரர் நயினாராசார்யர் ஸ்ரீரங்கத்தில் நின்றும் வேதாந்தாசார்யர் விக்ரஹத்தைக் கொண்டுவந்து காஞ்சீபுரத்திலே வேதாந்தாசார்யருடைய க்ருஹத்தைக் கோவிலென்று பெயரிட்டு அதிலே அந்த விக்ரஹத்தை ப்ரதிஷ்டை பண்ணிவித்தாரென்பதும் நூதன கல்பனையாயிருக்கும். அப்படி ப்ரதிஷ்டைபண்ணதுண்டாயிருந்தால், உடையவர் விக்ரஹத்தைக் கந்தாடையாண்டான் ஸ்ரீபெரும்பூதூரிலே ப்ரதிஷ்டை பண்ணிவித்தாரென்று உடையவர் சரிதமான குருபரம்பரையிலே சொல்லியிருக்கிறாப்போலே வேதாந்தாசார்யருடைய சரிதங்களையும் நயினாராசார்யருடைய சரிதங்களையும் நன்றாகச் சொல்லியிருக்கிற வைபவ ப்ரகாசிகையிலே இப்பேர்ப்பட்ட பெரியவைபவத்தை அவச்யம் அதிலே சொல்லியிருக்கவே வேணும். அதிலே யப்படி சொல்லியிராமையாலே இது நூதனகல்பனையா யிருக்குமென்று கொள்ளவேண்டியது. இப்போது வேதாந்தாசார்யர் மூலவிக்ரஹ மிருக்கிறவிடம் விளக்கொளி கோவிலைச்சேர்ந்த வாஹனமண்டபமானபடியாலே வேதாந்தாசார்யர் க்ருஹத்தைக் கோயிலென்று பெயரிட்டாரென்று சொல்லுகையும் நூதனகல்பமாயிருக்கும். முன்னாலே ஸ்ரீனிவாஸய்யங்கா ரென்கிறவர் திருப்பதியிலே அதிகாரம்பண்ணிக்கொண் டிருந்தார். அவர் நாற்பதுவருஷத்திற்குமுன்னே யொருவேதாந்தாசார்யர் விக்ரஹம் ப்ரதிஷ்டிப்பித்து வைத்திருந்தார். பின்பு ஐந்துவர்ஷகாலங் கழிந்தவுடனே க்ரோதிவருஷத்திலே இடுமுடுக்குப் பார்த்து ஆதுரத்தின்பேரிலே வைகானஸ பாஞ்சராத்ர சஸ்த்ரவிதிக ளொன்றுமில்லாதே, அதற்குக் கடவர்களாகிய அர்ச்சகர்களைக் கொண்டுஞ் செய்வியாதே, வடகலையார் தாங்களே அந்த உத்ஸவவிக்ரஹத்தை யசாஸ்த்ரமாக விளக்கொளிப்பெருமாள் வாஹனமண்டபத்திலே மூலவிக்ரஹத்தண்டையிலே வைத்துவிட்டார்கள். அப்போது அதிகாரம்பண்ணுகிற ப்ரபுக்கள் ந்யாயவிசாரணை பண்ணும்போது முன்னாலே கடந்த நடத்தைகளை யறிந்துக்கொள்ளுகைக்காகத் தொண்ணூறுவஸ் சென்றவர்களாம் பக்ஷபாதமில்லாதவர்களாய் விபூதிதாரிகளாய் அந்த விபூதிதாரிகளாய் விளக்கொளி கோவிலருகேயிருக்கிற கைக்கிளவர் வாணியர்களை யழைப்பித்துக் கேழ்க்குமிடத்தில் அவர்கள்சொன்னது:—இந்தக் கோவிலிலே என்றைக்குங் கறுப்புசாமியார் மாத்ரமே விளுவாக செகப்புச்சாமியார் ஒருநாளுங் கண்டதுமில்லை, கேட்டதுமில்லையென்று யெழுதிக்கொடுத்தார்கள். இத்தைக் கேட்டுக்கொண்டு ப்ரபுக்கள் ந்யாயவிருத்தமென்றும் நூ

தனமென்றுந் தெரிந்துகொண்டும் வைத்துவிட்டதை யெடுப்பித்துப் போடுகிறதாவென்று கொஞ்சம் தயைபண்ணி அத்தை யெடுத்துப் புகடாதே வைத்திருந்தார்கள். தேவராஜன் கோவிலிலேயும் வேதாந்தாசார்யர் வாஹனமண்டபத்திலேயே யெழுந்தருளியிருக்கிறார். அப்படியே வேதாந்தாசார்யர் மூல விக்ரஹமும் விளக்கொளிகோவில் வாஹனமண்டபத்திலே இருக்கிறார்.

ஸ்ரீ பெரும்பூதூரிலே தொண்ணூறுவருஷத்திற்கு முன்னே வேதாந்தாசார்யர் விக்ரஹமில்லை. அதெப்படியென்றால்:—ஸ்ரீ பெரும்பூதூரிலே ஸ்தலஜ்ஞராய் பஹுகாலமாயிருக்கிற அப்பையங்காரென்கிறவர் வேதாந்தாசார்யரிடத்திலே பக்தியுடையவர்களாய் வேதாந்தாசார்யர்பேரிலே நூற்றந்தாதிப் பாட்டுகளும் பாடியிருக்கிறவர் பாஷ்யகாரர் ஸந்நிதியிலே ஸேவாக்ரமஞ் சொல்லுகிற வடவிலே வேதாந்தாசார்யர் ராமானுஜன் ஸந்நிதியிலே இருக்கிறதாக வெடுத்துச் சொல்லவில்லை. மண்ணளந்தபெருமாள் கோவிலிலே மணவாள மாமுனிகள்மாத்ர மிருக்கிறதாக வெடுத்துச் சொல்லிக் காண்பித்தார். ஆகையாலே ஸ்ரீ பெரும்பூதூரிலேயும் வேதாந்தாசார்யர் விக்ரஹம் நூதனப்ரதிஷ்டிதமாயிருக்கும்.

திருவல்லிக்கேணியிலும் அறுபதுவருஷத்திற்கு முன்னே வடகலையார் கீழைத்தெருவிலே கீழைச்சிறகிலே யொருவீட்டிலே வேதாந்தாசார்யர் விக்ரஹத்தை வைத்துக்கொண் டிருந்து ஒரு இடுமுடுக்குப்பார்த்து பார்த்தஸாரதி மஹாமண்டபத்திலே யொருதூண் துறையிலே சுவர்வைத்து அதிலே வைத்துவிட்டார்கள். ஆகையாலே அதுவும் நூதனமாயிருக்கும். ஸ்ரீரங்கத்திலும் வேதாந்தாசார்யர் விக்ரஹம் ரங்காசார்யர் நாள் துடங்கி யிருக்கிறது.

முன்னாலே மேலெழுதிய பரகால ஸ்வாமியானவர் மைசூரிராஜாவை பகுப் பிரகாரங்களாலேயநுவர்த்தித்துக்கொண் டிருந்து,ஒருசமையத்திலே ராஜா தன்மேலே ஸந்தோஷப்பட் டிருக்கச்செய்தே வேதாந்தாசார்யர் விக்ரஹத்தை ப்ரதிஷ்டைபண்ணும்படி சிலவுவாங்கிக்கொண்டு, மேலக்கோட்டையிலே திருவீதியிலிருந்த தொருமண்டபத்திலே ப்ரதிஷ்டை பண்ணிவைத்தார் பின்பு சிலநாளிலே ராஜாவுக்கு இவரிடத்திலே கோபம்வந்து வேதாந்தாசார்யர் விக்ரஹத்தைப் பிடுங்கிப் போடுவித்தான். பின்பும் அநுஸரித்து அந்த மண்டபத்திலே அந்த விக்ரஹத்தை வைத்துக்கொண்டார். இப்படி வைப்புண்டும் பிடுங்குண்டும் பஹுப்ரயாஸத்தாலே திருநாராயணபுரத்திலே வேதாந்தாசார்ய விக்ரஹம் ஸ்தாபிக்கப்பட்டது. இப்படி பலவிடங்களிலும் பகுப்ரயாஸத்தாலே வேதாந்தாசார்யர் விக்ரஹங்களை வடகலையார் ஸ்தாபித்துக் கொண்டார்கள்.

இனிமேல் "ராமாநுஜதயாபாத்ர" மென்கிற பத்யத்தினுடைய வரவாறு எழுதுகிறது.

என்னவென்றால்:—முன்னாலே தொண்ணூறுவருஷத்திற்குமுன்னே ஸ்ரீனிவாஸபரகாலரென்கிறவர் மேலெழுதிய ராஜாவை யநுஸரித்து சிங்காரியென்கிற சிஷ்யைமுகமாக வார்த்தைசொல்லி, ராமானுஜதயாபாத்ரத்தையும் வடகலையார்கூடத் துடங்கும்படி. சிலவுவாங்கிக்கொண்டார். அந்த ராஜாவும் முன்நடந்தநடத்தைகளை யாலோசனை பண்ணிப்பாராமல் ராமாநுஜதயாபாத்ரத்தையும் மேலைக்கோட்டையிலே திருநாரயணப்பெருமாள்கோவிலிலே சொல்லும்படி சிலவுகொடுத்தான். அப்போது பகுசுடினத்தின்மேலே அதுவுங்கூட சிலநாள் நடந்துவந்தது. இந்த ராமாநுஜதயாபாத்ரமானது மேலெழுதிய ஸ்ரீநிவாஸபரகாலராலே நூதனமாக நிர்மிக்கப்பட்டதென்று லோக ப்ரஸித்தமாயிருக்கும். இப்படியிருக்க இத்தைவேதாந்தாசார்யருடைய சிஷ்யராகிய பேருளாளப்பனென்கிற ப்ரம்மதந்த்ரஸ்வாமியாலே நிர்மிக்கப்பட்டதென்றுவடகலையாரெழுதினது அஸங்கதம். அதெப்படியென்றால்:—வேதாந்தாசார்யருடைய வைபவங்களையெல்லாம் நன்றாக வெளிப்படுத்துகிறதாய், நயினாராசார்யர் ப்ரம்மதந்த்ரஸ்வாமி இவர்கள் வேதாந்தாசார்யர் விஷயமாகச் செய்த ச்லோகங்கள் முதலானதுகளை நன்றாகவெழுதியிருப்பதுமான, வைபவ ப்ரகாசிகையென்கிற க்ரந்தத்திலே யிப்பேர்ப்பட்ட மஹாவைபவத்தை அவச்யம் எழுதியிருக்கவேணுமே. "ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய:" என்கிற பத்யத்தினுடைய வரவாறையும் வைபவத்தையும் அதினுடைய விநியோகத்தையும் நன்றாக வெழுதியிருக்கிற வைபவப்ரகாசிகையிலே இப்பேர்ப்பட்ட மாஹாத்மயத்தையுடைய ராமாநுஜ தயாபாத்ர மென்கிற பத்யத்தையும் அதினுடைய வரவாறும் விநியோகமும் எழுதுகிறதற்கு ஒரு விரோதமுமில்லையே. இப்படியிருக்க வைபவப்ரகாசிகையிலே யெழுதிவையாமையாலே இந்த ராமாநுஜதயாபாத்ரமென்கிற பத்யத்தைப் பரகாலஜீயர் நூதனமாக நிர்மித்தாரென்கிற லோக ப்ரஸித்தியை மெய்யென்று நிரூபகராயிருப்பார் கொள்ளவேணும். மணவாளமாமுநிகளுடைய வைபவங்களையெல்லாம் நன்றாக வெழுதியிருக்கிற யதிந்த்ரப்ரவண ப்ரபாவத்திலே ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்கிற பத்யத்தையும் அதற்குப் பெரியபெருமாள் நியமித்த கட்டளைகளையும் நன்றாகவெழுதியிருக்கிறாப்போலே வைபவ ப்ரகாசிகையிலேயும் இந்த ராமானுஜதயாபாத்ரத்தினுடைய விநியோகம்முதலானதை யெழுதி யிராமையாலே இது நூதன நிர்மிதமென்று எண்ணவேணும். ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்கிற பத்யத்திலே நாலுபேர் நாலுபாதங்களைச் சொன்னார்களென்று வடகலையாரெழுதியது யதிந்த்ர ப்ரவண ப்ரபாவமென்கிற க்ரந்தத்தைக்காதினாலுங் கேட்டறியாதவர்கள் கல்பித்தெழுதியதென்று நன்றாக எண்ணவேணும். அந்த யதிந்த்ரப்ரவண ப்ரபாவத்திலே

இந்த பத்யத்தை நாலுபேர் நாலுபாதங்களாகச் சொன்னர்களென்று எழுதியிருக்கவில்லை. அதிலே அப்படியெழுதியிராவிட்டாலும் மற்ற க்ரந்தங்களிலே மூன்றுபேர் நாலுபாதஞ்செய்தார்களென்று எழுதியிருக்கிறதேயென்று ஆக்ஷேபம்வருமேயென்று கேட்கில், அந்த க்ரந்தத்திலே தானே மூன்றுபேர் நாலுபாதங்களைச் சிந்தித்து நாளைக்குச் சொல்லுவதாக ஒருவருமறியாதபடி மனஸிலே வைத்துக்கொண்டிருக்கச்செய்தே மற்றை நாள் திருவோலக்கத்திலே நம்பெருமாள் ஒருபாலகனுகவந்து மூவர்சொல்வதற்குமுன்னதாகவே சொல்லி மறைந்துபோனரென்கையாலே அந்த ஆக்ஷேபத்திற்கிடமில்லை. ஒன்றைத்தானே பலருஞ் சொன்னர்களென்கிற வழக்கங்களுக்கடியான தாத்பர்யபேதங்கள் புராணங்களிலே கொண்டகட்டளையிலே இங்கும் நன்ருகச்சேருமென்று ஸமாதானம் முன்பே யெழுதிற்று. அப்போது அந்த பரகாலஜீயருடையநிர்பந்தத்தாலே திருநாராயணபுரத்திலேமாத்ரம் சிலகாலம் நடந்தது. அக்காலத்திலே மழவூர், தொண்டனூர், மிதிலை சாளக்கிராமம், கரியகட்டம்முதலான ஸ்தலங்களிலே ஒரு நாளு மிந்த ராமானுஜதயாபாத்ரத்தநியன் ப்ரஸங்கமேயில்லை.

பின்பு பரகாலஜீயர்பெருமாள்கோவிலுக்குவந்து அப்போது முக்யராயிருந்த திருமலைதாதாசார்யர் திருமாளிகையிலே வந்து ராமாநுஜதயாபாத்ரமென்கிற தநியனையும் கச்சிநகர் பதினெட்டுத்திருப்பதியிலே சொல்லும்படி பண்ணவேணுமென்று சொன்னர். அதற்குத் திருமலை தாதாசார்யர்சொன்னது:—ஆதிகாலமேபிடித்து ஸம்ப்ரதாயமாக நடந்துவந்து பின்பு நம்முடைய கூடஸ்தரான தாதாசார்யரும் நடப்பித்துப்பெரியஜீயருக்குத் தனிக்கோவிலுங்கட்டிவைத்து இப்படி அன்றுமுதலின்றுவரையில் நடந்துவருகிற இந்த ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்கிற தனியனேடேகூட ராமாநுஜதயாபாத்ரமென்கிற நூதனபத்யத்தை நாம்சொல்லக்கடவதில்லையென்று சொன்னர். அதற்கு பரகாலஜீயர் திருமலைதாதாசார்யரிடத்திலே கோபித்துப்போய்விட்டார். ஆகையாலே பெருமாள்கோவிலிலே இந்த ராமாநுஜதயாபாத்ர ப்ரஸங்கமேயில்லை.

திருமலைதாதாசார்யருக்குக் கூடஸ்தரான தாதாசார்யர், தம்முடைய சிஷ்யனை ராயனுடைய ஸ்தாநாபதியாய் ராஜ்யதந்த்ரஞ் செய்துக்கொண்டிருக்கிறபோது கார்த்திகைமாஸக்கடைசியிலும் மார்கழிமாஸத்து முதலிலும் அதிவ்ருஷ்டியுண்டாய் தென்னேரிஏரி யுடைந்துபோயிற்று. அப்போது அங்கிருப்பவர்களாலே கட்டுப்படாதுபோய் தாதாசார்யர், தாமேபோய்க்கட்டுவிக்கவேணுமென்று புறப்பட்டு, வழியாக ஹஸ்திகிரியிலேயேறி பெருமாளைஸேவிக்கவந்தார். அப்போது திருக்கார்த்திகைக் கழித்தபடியாலே யாழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களை ஸேவிக்கக் கூடாமையாலே அந்தஸ்தானத்திலே அதற்கு ப்ரத்யாம்நாயமாகப் பெரிய ஜீயர்செய்த வுபதேசரத்தினமாலையென்கிற ப்ரபந்தத்தை ஸ்ரீரங்கம்முதலான ஸ்தலங்களுடைய வழக்கத்தின்படியே தேவப்பெருமாள் ஸந்நிதி

யிலும் ஸேவித்து சாற்றுகிறவிடத்தில் அந்த சாற்றுமுறையிலே முடிவுச் சொல்லானது தாதாசார்யர் பெருமாளை ஸேவிக்கிறபோது அவர் செவியிலே நேர்பட்டது. அத்தை தாதாசார்யர் கேட்டு உபச்ருதியாகப் பற்றிக் கொண்டு மிகவும் ஸந்தோஷப்பட்டு அடியேன் போகிற கார்யந் தலைக் கட்டினால் மணவாளமாமுனிகளுக்குத் தனிக்கோயிலுங் கோபுரம் முதலானதுங் கட்டிவிக்கிறேனென்று ப்ரார்த்தித்துக்கொண்டு போனவிடத்திலே ஏரியுடைப்பு ஸுகமாகக் கட்டுப்பட்டது. தாதாசார்யரும் அதிப்ராவண்யத்துடனே வந்து பெருமாளுடைய திருநந்தனவனத்திலே யிருக்கிற நாற்கால்மண்டபத்தை கர்ப்ப க்ரஹமாக்கி யதிலே மணவாளமாமுனிகளை ஸம்ப்ரோக்ஷணம்பண்ணிவித்து பின்பு மஹாமண்டபம் மடப்பள்ளிமுதலானதுங் கட்டிவித்தாரென்று லோகப்ரஸித்தமாயிருக்கும். பின்பு சில நாளில் வடகலையார் சிஷ்யனாயிருக்கிற ஒருகோலகுண்டவ்யாபாரி (அவன் பெயர்:—ரத்நாஜிபண்டிதன்) விளக்கொளிகோவில் வேதாந்தாசார்யர் முன்னே ராமாநுஜதயாபாத்ரத்தைச் சொல்லிவிக்கவேணுமென்று நினைத்து, பெருமாள்கோவிலிலேயிருக்கிற தென்கலையாரைப் பிடித்துக்கொண்டுபோய் வேலூரிலே ஆட்டுவாணியன் கடையிலே யடைத்துவைத்து தெங்கலையார் கையிலே கையெழுத்து வாங்குவதாகப் பிடித்துக்கொண்டிருந்தான். அப்போது அந்த வ்யாபாரிக்கு ஆப்தனான துலுக்கனை நபாபு அண்டையிலே யிருக்கிற பெரிய உத்யோகஸ்தரான துலுக்கர் நேரஞ் சுமற்றிக்கொன்றுவிட்டார்கள். அந்த வ்யாபாரிநினைத்த அநர்த்தனம் அவன்துரையான துலுக்கனையுங் கொல்லுவித்தது. பின்பு அங்கிருக்கிற வதிகாரிகளெல்லாரும் தெங்கலையாரை விடுவித்து உங்களைப் பிடித்துக் கொண்டிருந்தவன் மாண்டுபோனானென்று சொல்லி ஸந்தோஷப்பட்டு, நபாபு இடத்திலே யிவர்களுக்கு சிலவுவாங்கிக்கொடுத்து, காஞ்சீபுரத்திற் கனுப்பிவிட்டார்கள். இது நடந்து எழுபதுவருஷமாயிற்று.

பின்பு திருமலையிலே நாற்பது வர்ஷத்திலே வடகலையார் அர்ச்சகனுக்கு த்ரவியங்களைக் கொடுத்து அர்ச்சகனைக் கைவசமாக்கிக்கொண்டு ஆராதநாரம்பத்திலே "தடங்கண்டி ஸ்ரீசைலேசதயாபாத்ர" மென்று அநுதியாய் அர்ச்சகன் சொல்லுகிறவழக்கத்திலே அத்தைத்தள்ளி "தடங்கண்டி ராமாநுஜதயாபாத்ர" மென்று அர்ச்சகன் சொல்லுவதாகக் கட்டுப்பாடுபண்ணியிருந்தார்கள். அர்ச்சகனுந் த்ரவ்யத்தை வாங்கிக்கொண்டு அப்படியே சொல்லுவதாக நினைத்திருந்து, அந்த ஸமயத்திலே பெருமாள் அவன்மேலே ஆவேசிக்க அவன் மெய்மறந்து "தடங்கண்டி ஸ்ரீசைலேசதயாபாத்ர" மென்று வழக்கப்படி சொல்லிவிட்டான். அப்போது வடகலையார் பங்கப்பட்டுப்போனார்கள். பின்பு அந்த வர்ச்சகனை நீயழக்கப் படிக்கு என்சொன்னாய்? என்றுகேட்டவிடத்தில், அந்த வர்ச்சகன் பெருமாளென்மேலே யாவேசித்து உடம்பு தெரியாதபோனபடியாலே வழக்கப்படிக்கு சொன்னேனென்று சொன்னான். பின்பொருக்கால் வட.

கலையான ஸ்ரீநிவாஸய்யன் திருப்பதி அதிகாரம் பண்ணிக்கொண்டிருக்கச் செய்தே வடகலையார் கூட்டங்கூடிக்கொண்டு ஒரு வடகலைஸந்யாஸியை யழைத்துக்கொண்டுவந்து திருவீதியிலே பெருமாள் புறப்பாட்டிலே ப்ரபந்தந்துடங்கும்போது "ராமாநுஜதயாபாத்ர" மென்கிற பத்யத்தைத் துடங்குவதாக வெல்லாரும் பெருமாள்முன்னே நின்றுகொண்டு துடங்கப் போகிற ஸமயத்திலே, அங்கிருக்கிற டமாயெருதின்மேலே பெருமாளாவேசிக்க, அது அந்த வடகலைஜீயர்மேலே பாய்ந்தது. அவர் விழுந்தெழுந்திருந்து கூட்டங்களுடனே கூடிக்கொண்டோடிப்போனார். அப்போது வடகலையார் பங்கப்பட்டார்கள்.

பின்பு சிலகாலத்திலே திருப்பதியதிகாரம்பண்ணுகிற ஸ்ரீநிவாஸய்யனென்கிறவர் பெரியஜீயர் சிறியஜீயர் முதலான கோவில்முத்ரை யதிகாரஸ்தரை மிகவும் நல்லதனம்பண்ணிக்கொண்டு, கீழைத்திருப்பதியிலே சுற்றுக்கோவில்களிலே வேதாந்தாசார்யர் ஸந்நிதியிலே மாத்ரம் ராமாநுஜதயாபாத்ரஞ் சொல்லும்படியாகக் கேட்டுக்கொண்டார். பெரியஜீயர் முதலானோருந் தாக்ஷிண்யத்தாலே ஸம்மதித்து அதற்குத் தாங்கள்போகாதே வடகலை யேகாங்கி யொருவனைத் தங்கள்மநுஷ்யனாகக் கல்பித்து அவன் வாயைக்கொண்டு சிலநாளாய் கீழைத்திருப்பதி வேதாந்தாசார்யர் கோவிலிலே ராமாநுஜதயாபாத்ரமென்கிற பத்யத்தைச்சொல்லிவிக்கிறார்கள்.

திருவெவ்வுளூரிலே பாஷ்யகாரர் திருவம்சஸ்தராகிய ஆசாரியாருக்கு ப்ரதமதீர்த்தம்முதலான மர்யாதையுங் கோவில்விசாரணையும் நடந்து வருகிறகாலத்திலே வீரராகவன் கோவிலைச்சேர்ந்த சில்லரைக்கோவிலான வேதாந்தாசார்யர் கோவிலிலே ராமாநுஜதயாபாத்ரமென்கிற பத்யம் நடந்ததில்லை. இப்போது சிறிதுகாலமாய் ஆசாரியாருடைய மர்யாதையையும் அதிகாரத்தையும் அகோபிலமடத்தார் கட்டிக்கொண்டபடியாலே மடத்தாருடைய அதிகாரபலத்திலே மிகவும் வருத்தத்தின்மேலே வீரராகவன் கோவிலைச்சேர்ந்த சுற்றுப்பட்டுக்கோவிலான வேதாந்தாசார்யர் ஸந்நிதியிலேமாத்ரம் அவர்திருநாள் பத்துநாளும் ராமாநுஜ தயாபாத்ரத்தைச் சொல்லிக்கொண்டுவருகிறார்கள். பெரியகோவிலான வீரராகவன் ஸந்நிதியிலும் மற்றும் ஆழ்வார்கள்கோவில் முதலான சுற்றுப்பட்டுக்கோவில்களிலும் எக்காலத்திலும் ஸ்ரீசைலேசதயாபாத்ரமே நடந்து வருகிறது. வீரராகவனாவது ஆழ்வார்கள் பாஷ்யகாரர்முதலானோர்களாவது திருவீதிபுறப்பட்டபோதும் ப்ரபந்தத்துடக்கத்திலே ஸ்ரீசைலேசதயாபாத்ரஞ் சொல்லி, திருவீதிவலம்வந்து ப்ரபந்தஞ்சாற்றும்போதும் ஸ்ரீசைலேசதயாபாத்ரஞ் சொல்லி, மணவாளமாமுனிகள் விஷயமான வாழிதிருநாமத்தையு மநுஸந்திக்கிறார்கள்.

திருவல்லிக்கேணியிலும் மேலெழுதிய ஆசாரியாருக்கு ப்ரதமதீர்த்தம்முதலான மர்யாதைகளும் கோவில்விசாரணையும் நடந்துவருகிறகாலத்

திலே ஸ்ரீசைலேசதயாபாத்ரம் நடந்துவந்தது. பின்புசிலகாலத்திலே ஆஸ்ரியார்தீர்த்தங் கிலமாய்ப் போய் தேசாந்தரிதீர்த்தமாகவே நடந்து வருகிறது. அறுபதுவருஷத்திற்குமுன்னே வடகலையார்கள் கலஹம்பண்ணினார்கள். பின்பு அனேகம்பெயர் ப்ரபுக்கள் நன்முக பரிசோதனைபண்ணி ராமாநுஜ தயாபாத்ரமென்கிற புதுமந்த்ரஞ் சொல்லவேண்டாம். ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்கிற பழையமந்த்ரமே சொல்லவேண்டுமென்று தீர்ப்புபண்ணி யந்தப்படிக்கு நடப்பித்துக்கொண்டு வருகிறார்கள்.

அதுமுதல்யதாப்ரகாரம் ஒரு கலஹமுமில்லாமற்படிக்கு ஸ்ரீசைலேசதயாபாத்ரம் நடந்துவருகிறது. ஸ்ரீரங்கத்திலே யிருக்கிற வேதாந்தாசார்யர் விக்ரஹத்திற்கு ரேகையாக வகுந்துத் தென்கலைத் திருமண்காப்பு சாற்றியிருக்கையாலே திருவல்லிக்கேணியில் வேதாந்தாசார்யருக்கு தென்கலை திருமண்காப்பு ஸமர்ப்பிக்கிறது மாறுபாடன்று. க்ரஹஸ்தாச்ரமத்திற்காட்டில் ஸந்யாஸாச்ரமம் பெரிதாகையாலே ஸந்யாஸியான மணவாளமாமுநிகளுக்கு அமுதுசெய்யப்பண்ணின ப்ரஸாதத்தை க்ரஹஸ்தாச்ரமியான வேதாந்தாசார்யருக்கு அமுதுசெய்யப்பண்ணுகை யஸங்கதமன்று. ஸ்ரீபெரும்பூதூரிலே த்ரவிடவேதபடநாநந்தரம் கீர்வாணவேதம்படிக்கையாலே திருவல்லிக்கேணியிலும் அப்படிசெய்கிறதுமாறுபாடாகமாட்டாது. ஸ்ரீபெரும்பூதூரிலே முதலியாண்டான் திருவம்சஸ்தரான கந்தாடையாருக்குக் கோவில்விசாரணை முத்ரையும், பாஷ்யகாரர் திருவம்சஸ்தராகிய ஆஸூரியாருக்கு ப்ரதமதீர்த்தம்முதலான மர்யாதைகளும் நடந்துவந்தது பின்பு சோளசிங்கபுரத்தாருடைய சிஷ்யரான யதிராஜஜீயருக்குத் தீர்த்தமுண்டாய்த்தது. ஆஸூரியார்தீர்த்தம் பிடியாமல் விட்டுவிட்டார்கள். கந்தாடையார்மாத்ரம் கோவில்விசாரணை பண்ணிக்கொண்டிருந்தார்கள். பின்சிலநாளிலே அதுவும்விட்டுப்போய்த்தது. பின்புகோவில்விசாரணையையும் யதிராஜஜீயர் வம்சஸ்தர்பற்றிக்கொண்டிருக்கிறார்கள். ஆகக்கந்தாடையார்காலம் ஆஸூரியார்காலந் துடங்கி யின்றைவரைக்கும் ஸ்ரீபெரும்பூதூரிலே பெரியகோவிலாகிய ஆதிகேசவப்பெருமாள் பாஷ்யகாரர் கோவிலிலேயாவது சில்லரைக்கோவிலான வேதாந்தாசார்யர் கோவிலிலேயாவது மற்றுஞ்சில்லரைக்கோவிலிலே யாவது அந்தவூர் நாலுவீதிக்குள்ளேயாவது ஒருநாழிகைப்போதாகிலும் ராமாநுஜதயாபாத்ரம் நடந்ததில்லை. ஸ்ரீசைலேசதயாபாத்ரமே யெப்போதும் நடந்துவருகிறது, கார்த்திகைமீ மார்கழிமீ இந்த இரண்டுமாஸங்களிலும் த்ராவிடாம்நாயம் ஸேவிக்கக் கூடாமையாலே யதற்கு ப்ரத்யாம்நாயமாக மணவாளமாமுநிக ளருளிச்செய்த உபதேசரத்நமாலையைக் கோவிலுக்குள்ளும் திருவீதிப்புறப்பாட்டுகளிலும் துடக்கத்திலுஞ் சாற்றிலும் ஸ்ரீசடகோபன்முதலான மர்யாதைகளுடன் அநுஸந்தித்து வருகிறார்கள்.

பெருமாள்கோவிலிலே விளக்கொளிகோவில் வேதாந்தாசார்யர் ஸந்நிதியில் பத்யநிமித்தமாக திருமலைதாதாசார்யர் ஆத்தான் ராமாநுஜ

ஜீயருக்கெழுதிக்கொடுத்த வுடம்படிக்கையை ந்யாயாதிபதிகளான ப்ரபுக்கள் அனேக ப்ரகாரத்தாலே பரிசோதித்து, அதற்குவேண்டிய தகவல்களையும் லக்ஷணங்களையும் பரிசோதனம்பண்ணி, அத்தைமுதலாவது மெய்க்கொண்டு, மற்றும் ஸாதகங்களையுஞ் சோதித்துக்கொண்டு காஞ்சீபுரத்திலே பதினெட்டு கோயில்களுக் குள்பட்ட விளக்கொளிகோவிலைச்சேர்ந்த வேதாந்தாசார்யர் ஸந்நிதியிலே ஸ்ரீசைலேசதயாபாத்ரமே சொல்லவேண்டுமென்று தீர்ப்புபண்ணியிருக்கிறார்கள். அப்படி யெழுதிக்கொடுத்த வுடம்படிக்கை முதலிலேதானே கிழியுண்டுபோய்த்ததென்று சொல்லுகை மிகவுமஸங்கதம். அரசாணிபாலை வெங்கடாசார்யரைக் கையெழுத்து போடச்சொன்னதாயும் அதற்கு அவர் மாட்டேமென்றுசொல்லி பதிலுக்கு ஒரு ச்லோகஞ் சொன்னதாயும் சொல்லுகிறது மிகவுஞ் சேராது. அரசாணிபாலை வெங்கடாசார்யருக்கு அந்த வூரிலே யொருஸம்பந்தமுமில்லாமையாலே யவர் கையெழுத்தை யபேக்ஷிக்கவேண்டுவது அனுசிதம். ஆகையாலே யிப்பேர்ப்பட்ட அஸங்கதங்களை யிவிடத்திலே யெழுதிக்கார்யமில்லை. அவரை யுலகத்தார் விகடகோதஹாஸ்யகவியென்று எண்ணி அவர் ச்லோகத்தை யொருவரும் உண்மைக்குரித்தாகக் கொள்ளாதேதள்ளிவிட்டார்கள். இதுவல்லாமல் அவர்சொன்னதாக வெதிரிகளெழுதின ச்லோகத்திலே அநுதியாய் நடந்துவந்த ராமாநுஜதயாபாத்ரந்தனியனை அஸநபல்லி யாசார்யபண்டிதனென்கிறவர் நிவர்த்திப்பித்தாரென் றிருக்கவில்லை; பின்னை யழகியதானவிந்தபத்யத்தை யிங்கேபுகுரவொட்டாமல்பண்ணினாரென்று தாத்பர்யங்காணப்படுகிறது.

பக்திமானாயிருந்து தானிங்கிருக்கும் நாளெல்லாம் எம்பெருமானுக்கடிமைசெய்து தன்னுடைய தேஹாந்தத்திலும் அடிமைசெய்கிறதாக பாவனையாலே தன்னைப்போலே யொரு ப்ரதிமையைப்பண்ணி கோவில்களிலேவைத்து தார்ம்மிகராயிருப்பார் இறந்துபோவதுண்டு. திருமலையிலே கோபுரவாசலுக்குள்ளே க்ருஷ்ணராயனையும் அவர்பார்யைகள்:—திருமலைதேவி, ஸிந்நாதேவி, இருவரையும் ஒருபுருஷப்ரமாணமானமூன்று செப்புப்ரதிமைகளாகப்பண்ணிவைத்திருக்கிறது. அங்கேதானே சின்னதாக ஒரு அறைசட்டி தொண்டர் மல்லுவை செப்புத்தொடுப்பு ப்ரதிமையாகப் பண்ணிவைத்திருக்கிறது. மதுரையிலே கூடலழகர் கோவிலிலே மஹாமண்டபக் கம்பங்களிலே புருருவசக்ரவர்த்தியையும் கல்ப்ரதிமையாகப் பண்ணிவைத்திருக்கிறது. மதுரைதிருமலைநாயகனை ஸந்நிதிமுன்பே ஸேவித்தபாவனையாக கல்ப்ரதிமைபண்ணியிருக்கிறது. இப்படி விஷ்ணுஸ்தலங்களிலுஞ் சிவஸ்தலங்களிலுந் தங்கள்தங்கள் பக்திக்குத் தகத்தாகத் தங்கள்தங்கள் ப்ரதிமைகளைத் தாங்களே வைத்துக்கொள்வதாகையாலே பகவானிடத்திலே மிகவும் பக்தியுடையவனாயிருந்த தொண்டர்மல்லுவும் தன்ப்ரதிமையைக் கோயில்திருமலைப்பெருமாள்கோவில் மூன்றிலும் வைத்துக்கொண்டாராகையாலே இது தென்கலையார் அவர் தயவுபெறு

கைக்காக அவர் ப்ரதிமையைப் பெருமாள்கோவிலிலே வைத்தார்களென்று எதிரிகள் சொல்லுகிறசொல், த்வேஷத்தாலே கல்பிதம். மதுராந்தகத்திலே அநாதியாய் முறப்பாக்கம் திருமணியிலிருக்கும் முதலியாண்டான் திருவம்சஸ்தராகிய கந்தாடையாருக்கு ப்ரதமதீர்த்தம் முதலான மர்யாதைகளும் ப்ரபந்தத்துடக்கத்திலே ஸ்ரீசைலேசதயாபாத்ரம் நடந்துக்கொண்டுவந்தது. பின்பு எண்பது ஸம்வத்ஸரத்திற்குமுன்னே அந்த அக்ரஹாரத்தார் மேலிட்டுக் கந்தாடையார் தீர்த்தத்தையும் ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தனியனையுந் தள்ளிவித்து ராமாநுஜதயாபாத்ரத்தைச் சொல்லிக்கொண்டுவருகிறார்கள்.

முன்னாலே தேவப்பெருமாள் பெரும்பொங்கல்பாரிவேட்டைக்கு மாவலிபுரமென்கிற திருக்கடன்மல்லைக்கு யெழுந்தருளிக்கொண்டிருப்பர். அப்பொழுது ஒருகாலத்திலே எழுந்தருள வநுகூலப்படாமற்போய்விட்டது. மேலெழுதிய கோவில்விசாரணை முத்ரையதிகாரஸ்தரா யிருக்கிற கோயிலழகியமணவாளஜீயர் ஆலோசனைபண்ணி, காஞ்சீபுரத்திற்குஸமீபத்திலேயிருக்கிற பத்மகிரியென்கிற மலையின்மேலே திருமண்டபம் கட்டிவித்து, காஞ்சீபுரத்திலே சேர்ந்திருந்த உள்ளாவூரைச் செங்கற்பட்டிற்கு விடுவித்து செங்கற்பட்டைச்சேர்ந்திருந்த மேலெழுதிய மலைசீழ்க்ராமத்தைக் காஞ்சீபுரத்திலேசேர்த்துத்தம்முடையபெயராலேஜீயர்புரமென்று அதைப்பெரிய நகரமாக்கி மலையின்கீழிலே பெருமாள்கோவிலைப்பெருக்கப்பார்த்து அந்த பெருமாளுக்குத் திருவாராத்நோத்ஸவாதிகளைக் குறைவற நடப்பித்துக் கொண்டு, பெரும்பொங்கலுக்கு பத்மகிரிமலையிலே தேவப்பெருமாளை யெழுந்தருளப்பண்ணிவித்துக்கொண்டிருந்தார். அன்று துடங்கி பஹுநாள்வரைக்கும் ஜீயர் புரத்துஸந்நிதியிலே ஸ்ரீசைலேசதயாபாத்ரம் நடந்து வந்தது. பின்பு சிலநாளிலே அந்த அக்ரஹாரத்தார் அதர்க்கணம்பண்ணி ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தைத் தள்ளிவித்து ராமாநுஜதயாபாத்ரத்தைச் சொல்லிக்கொண்டுவருகிறார்கள். அந்த ஜீயர் புரம்முக்யஸ்தலமல்லாமையாலே தென்கலையாரும் பிடியாமல் விட்டுவிட்டார்கள்.

திருப்பார்க்கடல்(திருப்புட்குழிக்கு மேற்கேயிருக்கிறது)என்கிறஊர், சிவனும் விஷ்ணுவுங் கலந்து வைஷ்ணவர்களுக்கு முக்யஸ்தலமல்லாமையாலே அங்கேராமாநுஜதயாபாத்ரம்நடந்தாலும் அதைநடத்தையாகக்கொள்ளப் போகாது. சோளமண்டலததிலும் முற்காலத்திலே தரணீவராஹராஜாநாளிலும்பின்பு விஜயராகவநாயகன் நாளிலும், அதற்குப்பின்பு ஏகோஜீசாகோஜீ ப்ரதாபஸிம்மராஜா இவர்கள்நாளிலும் ஸ்ரீசைலேசதயாபாத்ரம் நடந்து வந்தது. பின்பு துளஜாராஜாநாளிலே அந்தராஜா விஷயாந்தரபரனாய் ராஜ்யதந்திரத்தைப் பராக்குபண்ணியிருந்தான். அப்போது டபீரென்கிற மராட்டிப்ராமணன்மந்த்ரியாயிருந்தான். அவனண்டையிலேயிருந்த அய்யாவையங்காரென்கிற ஒருவடகலைவைஷ்ணவர் ராமாநுஜதயாபாத்ரமென்

கிற வழக்கைத்தொடுத்துவித்து டபீலண்டையிலே தீர்ப்பாகிறபோது முறட்டுத்தனமாய் வாதியினுடைய பேருக்கும் திசையினுடையபேருக்கும் ஸம்பந்தத்தை யொட்டிக் "கோவில்களிலே வடகலையார் வடதிசையிலிருந்துக்கொண்டு தங்கள் மந்த்ரத்தைச் சொல்லுவது. தென்கலையார் தென்றிசையிலிருந்து தங்கள் மந்திரத்தைச் சொல்லுகிறது" என்று தீர்ப்புபண்ணிவித்தார். அது இரண்டுமூன்று கோவில்களிலேமாத்ரம் நடந்துவருகிறது.

மேலைக்கோட்டைத் திருநாராயணபுரத்திலே ஹைதர்நபாபுநாளையிலே "ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்கிற பழையமந்தரம் மாத்ரஞ் சொல்லிப் பூஜோத்ஸவம் நடப்பிக்கவேண்டியது; ராமாநுஜதயாபாத்ரமென்கிற புதுமந்த்ரத்தைச்சொல்லவேண்டாவென்று" பரமாணிகைபிறந்து டீபுநாளையிலேயும் அப்படியேநடந்துவந்து.பூர்ணையன் அதிகாரத்திலும் அப்படியே நடந்துவந்தது. பின்பு வடகலையார்தாங்களே வேதாந்தாசார்யர் விக்ரஹத்தைக் குளத்திலே நீரிலே யமிழ்த்திவைத்துத் தெங்கலையாரிடத்திலே பழியேறிட்டுவைத்து ராஜாவுக்கு மாறுபாடாகச் சொல்லித் தென்கலையாரைக் கோவிலுக்குள்ளே விடாமற்போனார்கள். பின்பு ராஜா சிலநாளிலே நன்றாகப் பரிசோதனைபண்ணி விசாரிக்குமிடத்தில் வடகலையார் தாங்களேசெய்து தென்கலையாரிடத்திலே பழியிட்டார்களென்று உண்மையையறிந்துகொண்டு வடகலையார் நாமத்தைக்குறித்துப் பிடித்தவழக்கு அநீதமென்று எண்ணிக்கொண்டு தென்கலையார் எப்போதும்போலே கோவிலுக்குவரும்படி திட்டம்பண்ணினார்.

முன்னாலே திருச்சிறுப்பள்ளியிலே சொக்கநாத நாயகனென்கிறவன் ராஜ்யம் பண்ணிக்கொண்டிருந்தான். அவன் சைவன். மதுரை சொக்கநாதர்பெயரை யிட்டுக்கொண்டு சிவபக்தனாயிருந்தான். விஜயராகவநாயகன் தஞ்சைநகரிலே ராஜ்யம் பண்ணிக்கொண்டிருந்தான். அவன் வைஷ்ணவனாய் விஷ்ணுபக்தனா யிருப்பன். அவன் தஞ்சைநகரிலே உயர்ந்த மேடைகட்டி அதிலேயேறி ஸ்ரீரங்க விமானத்தை தர்சித்து பின்பு போஜனம் பண்ணிக்கொண்டிருப்பன். இப்படி இருக்கச்செய்தே ஒருநாள் ராத்ரி சொக்கநாதநாயக்கன் ஒரு ஸ்வப்நங்கண்டான். என்னவெனில்:—தான் ரங்கநாதனை ஸேவிப்பதற்குப் போனதாகவும் அங்கே த்வாரபாலர்கள் உள்ளே போகவொட்டாமல் தடைசெய்ததாகவும், அதேதுக்கென்று கேழ்க்க, விஜயராகவநாயகன் உள்ளேபோயிருக்கிறாரென்று அவர்கள் சொன்னதாகவும், ஆகில் நானுமுள்ளே போகலாகாதோவென்றுகேழ்க்க, நீ சக்ராங்கனம் பண்ணிக்கொள்ளாதபடியாலே போகக் கூடாதென்று சொன்னதாகவும் ஸ்வப்நங்கண்டு, விழித்துக்கொண்டு வெடிந்தபின்பு சக்ராங்கனம் பண்ணிக்கொள்ளவேணுமென்று விசாரித்து பரிசுத்தராய் முக்யராயிருக்கிற ரங்காசார்ய ரிடத்திலே சக்ராங்கனம்பெற்று முன்னாலே முதலியாண்டானுக்கு நடந்துவந்த கோவில்விசாரணை முத்ரையையும்

தீர்த்தத்தையும் பட்டர் ஸந்ததியாரோடொப்பந்தம் நடத்தும்படி இலவு கொடுத்தான். பின்பு ரங்காசார்யரும் அதுகளைப்பெற்று முன்னாலே தங்கள் கூடஸ்தராகிய சாற்றுக்கந்தாடையாருக்கு நடந்துவந்த அத்யாபகம் சாற்றுமுறை ஸ்வதந்த்ரம் முதலானவற்றை ஸ்தாபித்துக்கொண்டார். மற்றப்படி புதியதாகவொன்று மவர்செய்ததில்லை. சொக்கநாதநாயகனும் ரங்காசார்யரிடத்தில் சக்ராங்கனம்பெற்று ரங்கநாதனிடத்திலே மிகவும் பக்தியுடையவனாய் அத்தாலே விஜயரங்கசொக்கநாதநாயகனென்றுபெயர் பெற்றான். இப்படியிருக்க, விஜயரங்க சொக்கநாதநாயக்கன் தாதாசார்யர் சிஷ்யனாயிருந்து ரங்காசார்யரிடத்திலே சக்ராங்கனம் பெற்றானென்றும், அந்தபலத்தாலே ரங்காசார்யர் கோயிலிலே சிறிது புதுசட்டங்கள் பண்ணினாரென்றுஞ் சொல்வது கல்பிதமென்று கொள்ளவேணும். இப்படியே யெதிரிகள் ஒன்றிருக்க ஒன்று மாறுபாடாக யெழுதியிருக்கிறார்கள். அதை நன்றாகப் பரிசோதிக்குமிடத்தில் மனதிற்கு விசதமாகும்.

இனி கோயில்முதலாகிய நூற்றெட்டு திருப்பதிகளிலும் ஸ்ரீ சைலேச தயாபாத்ரம் நடக்கிறவிவரம் எழுதுகிறது. ''ஸ்ரீரங்கத்திலே ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தை அரையர் என்னத்திற்காகச் சொல்லவில்லை'' யென்கிற ஆக்ஷேபம் ஸ்ரீவைஷ்ணவர்களுடையநடத்தையறியாதவர்களுடைய துராக்ஷேபம். என்னவென்றால்:—அரையர்களாவார் ஆழ்வார்களென்றே பாவனையாய் ஆழ்வார்கள் பாடுகிறபாவனையாலே அரையர்கள் த்ரவிடப்ரபந்தங்களைப் பாடுகிறதாயிருக்கும். ஆழ்வார்கள் த்ராவிடவேதம் பாடுகிறபோது தங்களைத் தாங்களே வந்தனஞ்செய்துக்கொள்ளக் கூடாதாகையாலும், தங்கள் சிஷ்யரான நாதமுநிமுதலானவர்களைத் தாங்கள் வந்தனஞ்செய்யக் கூடாமையாலும், ஒருதநியன்களும் ஆழ்வார்கள் சொல்லக்கூடாதாப்போலே, ஆழ்வார்களாகவே பாவனைபெற்றிருக்கிற வரையர்களும் அந்த ஆழ்வார்களைப்போலவே ப்ரபந்தம் பாடுகிறபோது ஒருதநியன்களுஞ் சொல்லுகிறதில்லை. அரையரல்லாத மற்றைப்பேர்கள் ஆழ்வார்ளாக பாவனைபெறாமையாலும் ஆழ்வார்களுடைய சிஷ்யராய்க்கொண்டு அநுஸந்திக்கையாலும் த்ரவிடவேதங்களை யருளிச்செய்த வாழ்வார்களையும், அவைகளை ப்ரவசநஞ்செய்த வாசார்யர்களையும், ப்ரபந்தாரம்பத்திலே வந்தநஞ்செய்யவேண்டுகையாலும் ஆழ்வார்கள் தநியன்களையும் ஆசார்யர்கள் தநியன்களையும் ப்ரபந்தாரம்பத்திலே யநுஸந்திக்கவேணும். ஆகையாலே ஸ்ரீரங்கத்திலே அரையர்கள் ப்ரபந்தம் ஸேவிக்கும்போது மற்றத் தநியன்களொன்று மில்லாதாப்போலே ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தநியனுமில்லை. அரையரல்லாத மற்றவமுதனார் வம்சஸ்தர்கள் பெரியபெருமாள் ஸந்நிதிக்குள்ளே இயற்பா ப்ரபந்தந் துடங்கும்போது ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தநியன்முன்பாக இன்றுவறைக்கும் ஸேவித்துக்கொண்டு வருகிறார்கள். இப்படி. யியற்பாசாற்றிலே யிரண்டுதரம் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தநியனை அமுதனார் முகமாகப்பெருமாள் திருச்செவிசாற்றி யருளுகிறார், கார்த்

திகை மாஸத்திலே கைசிகபுராண ஶ்ரீவணத்திலே யுகாதிமேஷ ஸங்க்ராந்தியில் பஞ்சாங்க ஶ்ரீவணத்திலும் பட்டர் திருவம்சஸ்தர்முகமாக ஶ்ரீசைலேச தயாபாத்ரத் தநியனைப் பெருமாள் கேட்டருளுகிறார். ஆகையாலே ஶ்ரீரங்கத்திலே அரையர் ஸேவையிலே ஶ்ரீசைலேச தயாபாத்ரத் தநியனை யநுஸந்திக்கவில்லை யென்கிற வாக்ஷேபம் துராக்ஷேபமென்று கொள்ள வேணும். ஆகத் தமிழ்பாஷை நடையாடுகிற பாண்டிய மண்டலத்திலுண்டான திருப்பதிகளிலும் புராணஸ்தலங்களிலும் அபிமான ஸ்தலங்களிலும் திருக்குருங்குடி தொடங்கி யெங்கும் ஶ்ரீசைலேசதயாபாத்ரத்தநியனே நடந்துவருகிறது. மலையாளத்திலே திருவண்பரிசாரமென்கிற திருப்பதியிலே திருவாழ்மார்பனென்கிற வெம்பெருமானுக்கு நம்பூரிமார் திருவாராதநம் பண்ணிக்கொண்டிருந்தாலும் தென்கலை திருமண்காப்புசாற்றி யிருக்கிறது. பாண்டியமண்டலத்திலும் மேலெழுதிய விடங்களிலெல்லாம் தென்கலைத் திருமண்காப்பேசாற்றியிருக்கிறது.

சோள மண்டலத்தில் ஶ்ரீரங்கம்முதல் சித்ரகூடம்வரைக்கும் உண்டான திருப்பதிகளிலும் புராணஸ்தலங்களிலும் அபிமானஸ்தலங்களிலும் ஶ்ரீசைலேசதயாபாத்ரத்தநியனும் தென்கலைத்திருமண்காப்பும் நடந்துவருகிறது. நாலைந்து ஸ்தலங்களிலேமாத்ரம் சிறிதுநாளாய் பலத்தினாலே ராமாநுஜ தயாபாத்ரத் தநியனையுங் கூடச்சொல்லிக்கொண்டு சிறிது வடகலைத் திருமண்ணும் வைத்துக்கொண்டு வருகிறார்கள். அதற்கு ந்யாயவிரோதமும் சாஸ்த்ரவிரோதமுமுண்டு. நடுமண்டலத்திலுந் திருக்கோவலூர், ஶ்ரீமுஷ்ணம் முதலானஸ்தலங்களிலும் ஶ்ரீசைலேசதாயாபாத்ரத்தநியனும் தென்கலைத்திருமண்காப்பும் நடந்துவருகிறது. திருவஹீந்த்ரபுரத்திலே மாத்ரம் நாற்பதுவருஷந் தொடங்கி ராமாநுஜதயாபாத்ரமும் வடகலைத்திருமணும் வடகலையார்பலத்தாலே நடப்பித்துக்கொண்டு வருகிறார்கள், அந்தக்கோவில் அஷ்டகோத்ரத்தாருடைய தீர்த்தமாகையாலே யென்றைக்குந் தென்கலைக்கோவிலாயிருக்கும்,

தொண்டமண்டலத்திலும் பெருமாள்கோவில் முதல் திருமலைவரைக்கு முண்டான திருப்பதிகளிலும் புராணஸ்தலங்களிலும் அபிமானஸ்தலங்களிலும் ஶ்ரீசைலேசதயாபாதரத் தநியனும் தென்கலைத் திருமண்காப்பும் நடந்துவருகிறது. ஒன்றிரண்டிடங்களில் சிறிதுநாளாய் அத்தை யும் நடப்பித்துக்கொண்டுவருகிறார்கள், வடநாட்டிலும் அஹோபிலம், பத்ரகிரி, மங்களகிரி, ஸிம்மாத்ரி, ஶ்ரீகாகோலம், தர்மபுரி, ராமதீர்த்தம். ஶ்ரீகூர்மம், ஶ்ரீஜகந்நாதத்திலே ராமாநுஜமடம், முதலான விடங்களிலே ஶ்ரீசைலேசதயாபாத்ரமும் தென்கலைத் திருமண்காப்பும் நடந்துவருகிறது. மேல்நாட்டிலும் மத்தூர், மழலூர், மாகடி, தொண்டனூர், மிதிலை சாலிக்கிராமம், சரியகட்டம், திருநாராயணபுரம்முதலான விடங்களிலே ஶ்ரீசைலேச தயாபாத்ரத் தநியனும் தென்கலைத் திருமண்காப்பும் நடந்துவருகிறது, ஆகவிப்படி தமிழ்நடையாடுகிற பூமண்டலமெங்கும் ஶ்ரீசை

லேசதயாபாத்ரத் தநியனும் தென்கலைத்திருமண்காப்பும் அநுஜ்ஞையாக இன்றுவரைக்கும் நடந்துவருகிறது. வடகலையார் இத்தைப் பொறுக்கமாட்டாமல் புதியதாக விச்வாமித்ரஸ்ருஷ்டிபண்ணி சிறிதிடங்களிலே தூர்வழக்குத் தொடுத்து பின்பு மஹாப்ரபுக்கள் விசாரணைபண்ணுமிடத்தில் உள்ளதுவிளங்குகிறபடியாலே வடகலையார் வழக்குத் தோற்றுப் போய் பங்கப்பட்டுவருகிறார்கள், இப்படியிருக்கச்செய்தேயும் அவர்கள் தூர்வழக்கை விடுகிறதில்லை.

திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய வபிப்ராயத்தை யநுஸரித்துக்கொண்டு உபதேச பரம்பரையாலே பெற்ற ரஹஸ்யார்த்தங்களிலே பிள்ளைலோகாசார்யர் ப்ரதிபாதித்த பதினெட்டர்த்தங்களுக்கும் மாறுபாடாக வேதாந்தாசார்யர் சிலவர்த்தங்கள் சொன்னபடியாலே, நம்பெருமாள் திருமுன்பே அதற்காக ஆசார்யஹ்ருதய ப்ரபந்தமுண்டானகையாலே, ஆசார்ய ஹ்ருதய க்ரந்தத்தாலே வேதாந்தாசார்யர் சொன்னவர்த்தங்கள் கண்டிதங்களாய்ப்போய், பிள்ளைலோகாசார்யர் வெளிப்படுத்தின பதினெட்டர்த்தங்களும் நிலைநின்றது. பின்பு வேதாந்தாசார்யரும் தாம் ப்ரதிஜ்ஞைபண்ணின ப்ரகாரம் நம்பெருமாள் ஸேவையை விட்டிருந்தாரென்று ஸவிஸ்தாரமாக மேலே யெழுதப்பட்டது.

இனி ஆசாரபேதங்களுக்கு ஸமாதானம் எழுதப்படுகிறது. அதில் (க) வது:--யாகாதிகள்பண்ணாலொழிய ப்ராம்மணனல்லன் என்று வேதம்விதிக்கிறபடியாலே யாகாதிகள் பண்ணிக்கொண்டு வருகிறோமென்றிப்படி சில வடகலையார்சொல்லுகிறது வேதவிதியுண்மை தெரியாமையாலே. அதெப்படியென்றால்:—அகரணேப்ரத்யவாயவிதியும், கரணே அதிசயவிதியுமென்றுவிதி யிரண்டு படிப்பட்டிருக்கும். முதலாவது ஸந்த்யாஸாவித்ர்யாதிவிதி. இரண்டாவது பசுயாகாதிவிதி. ஆகையால் யாகம்பண்ணாவிட்டால் அதிசயம் லபியாவிட்டாலும் ப்ராம்மண்யத்திற்குக் குற்றமில்லாமையாலே, யாகம்பண்ணாலொழிய ப்ராம்மணனல்லனென்று சொல்லுமது வேதவிதியுண்மை தெரியாதவன்பேச்சு. யாகம்பண்ணுகிறவர்கள் ஒருவரிருவரொழிந்த மற்றெல்லாப்ராம்மணரும் ப்ராம்மணரன்றிக் கேயாகவேண்டிவரும். வேதாந்தாசார்யரும் யாகம்பண்ணாமையாலே அவருக்கு ப்ராம்மண்யமல்லாமற்போக வேண்டிவரும். வடகலையார் பண்ணின ஸ்ம்ருதிரத்நாகரமென்கிற க்ரந்தத்திலே "யஜ்ஞம்பண்ணவேண்டாம்; ஆசாரமே பண்ணவேணுமெ"தென்று சொல்லியிருககிறது. வைஷ்ணவாதிகாரிக்குக் கொலையாகமாகாதென்று வேதாந்தாசார்யருங் கொள்ளுகையாலே வடகலையாரில் சிலர் கொலையாகம்பண்ணுகிறதுங்கூடாது. இப்படி இன்னமுமனேகபரிகாரமுமுண்டு. (உ) வது:—புருஷன்போனபிற்பாடு விதவைகள் தலைக்ஷவரம் பண்ணிக்கொள்ளுவதில் ப்ரமாணமென்றவர்கள் சொன்ன "[illegible]" என்கிறவசநத்திற்கு "[illegible]

ஹைவகார்யேதி" என்றும், "முமுக்ஷுவுக்கு திஸாத ஸாவபநஸ்நு நிஷித்த்தே" என்றுஞ் சொல்லுகிறவசனங்கள் விசேஷவசனங்களாய் அபவாதகமாகையாலே வைஷ்ணவவிதவைகளுக்கு க்ஷவரங்கூடாதென்று வடகலையான ஸவகுண்ட தீக்ஷிதர் பண்ணின ஆசாரக்ரந்தத்திலே சொல்லுகையாலே க்ஷவரம்பண்ண வேணுமென்று சொல்லுகிறது தம்முடைய க்ரந்தத்தைப்பாராமல்சொல்லுகிறது. இப்படி இன்னமுமனேக பரிஹாரங்களுண்டு. (௩) வது:— பாஷ்யகாரர் பண்ணின நித்யாராதந க்ரந்தத்திலேயும், நடாதூரம்மாள்செய்த நித்யாராதந க்ரந்தத்திலும், ஸ்மிருதி ரத்நாகரமென்கிற வடகலை க்ரந்தத்திலும் க்ருஹாராதநத்திலே கண்டைசொல்லாமையாலே கண்டையில்லாமலுங் க்ருஹாராதநங் கூடும். வலதுகையாலே திருவாராதநம் பண்ணும்போது இடதுகையாலே மணியடிப்பதற்கு வசநமில்லாமையாலே அநாசாரம். (௪) வது:-ப்ராம்மண ஸமுதாயத்திற்கு பஞ்சயஜ்ஞம்விதித்திருக்கிறது. ஆகிலும்வைஷ்ணவாதிகாரிக்குப்ராயச்சித்தகர்மமான பஞ்சயஜ்ஞங் கூடாதென்று வசநமுண்டு. அந்த பஞ்சயஜ்ஞஸ்தாநத்திலே ஹார்யர்ச்சநம் பண்ணச்சொல்லி பரத்வாஜஸம்ஹிதையிலே சொல்லியிருக்கையாலே பகவதாராதநம் பஞ்சயஜ்ஞஸ்தாநத்திலே யாகும். (௫) வது:—பாஷ்யகாரர்பண்ணின நித்யக்ரந்தத்திலே பகவந் நிவேதிதத்திற்குச் சிலவுசொல்லுகிறவகுப்பிலே வைச்வதேவம் பண்ணவேண்டுவதில்லையென்று நிர்ணயப்படுகையாலும், வைஷ்ணவாதிகாரி வைச்வதேவம் பண்ணக்கூடாதென்று ப்ரமாணங்களிருக்கையாலும், வைச்வதேவம் பண்ணவேண்டுவதில்லை. இன்னுமிப்படி யனேகபரிஹாரங்களுண்டு. (௬) வது:-தன்னையொழிந்த பாகவதர்களெல்லாருந் தனக்கு ஸ்வாமிகளாகையாலே தன்னையொழிந்த பெரியோர்களுடைய பாததீர்த்தங்களைத் தான் கொள்ளுகிறது விருவாக, ஸாளக்ராமங்கள்போலே எல்லாரும் ஸமமென்கிறநினைவு தென்கலையார் ஸித்தாந்த மல்லாமையாலே அத்தையவர்கள் ஸித்தாந்தமாகச் சொல்லுகைக் கல்பனைச்சொல்லாயிருக்கும். (௭) வது:-வேதம் முதல்ப்ரமாணம், த்ரவிடவேதம் இரண்டாவது ப்ரமாணமென்றுசொல்லுகிறவிஷவும் ஸ்வமதபரமதங்களை யறியாமையாலே சொல்லுகிறது. அதெங்ஙனே யென்றால்:—ஸம்ஸ்க்ருதவேதமென்றும் த்ரவிடவேதமென்று மிரண்டும் வேதமேயென்றும், வேதாதிகாரிகளான தாமும் ஸமஸ்க்ருதவேதங்களிற்றெளியாத பொருள்நிலைகளை த்ரவிடவேதங்களிற்றெளிந்தாராகவும், வேதாந்தாசார்யர் சொல்லுகையாலே, த்ரவிடவேதம் முக்யமென்று அவர்கள் சொல்லுகையாலே அத்தை யிரண்டாவது ப்ரமாணமென்று சொல்லுகிறது ஸ்வமதந் தெரியாமையாலன்றோ? (௮) வது:-எம்பெருமானுடைய விரண்டு பாதங்கள்போலே திருமண்காப்பிடவேணும்; அதற்கானுகூலமாகப் பாதமிடவேணுமென்று வேதஞ்சொல்லுகையாலே முகம் முதலாகிய பனிரண்டிடங்களிலும் ஆஸநமான பாதத்துடனே திருமண்காப்பணிந்துக் கொள்ளுகிறார்கள். அதிலே நெற்றியிலே நாஸிகாமூலம் நுண்ணியதாகையாலே பாதம் நுண்ணியதா யிருக்கும்;

வயிறு முதலாகியவிடங்கள் பரந்திருக்கையாலே பாதங்களும் பரந்திருக்கும். ஆகையால் பனிரண்டு திருநாமங்களும் பாதங்களுடனே கூடியே யிருக்கும். அதிலே சிலபொட்டுகள் தன்னடையேவருமதொழிய அவை சாஸ்த்ர மூலகமாக இடுமவைகளல்ல. இன்னுமிதற்குச் சொல்லவேண்டுவதுண்டு. (௯) வது:—வைஷ்ணவாதிகாரிக்கு ஏகாதசியிலே ஶ்ராத்தம்பண்ணக்கூடாதென்று பல ப்ரமாணங்க ளிருக்கையாலும், ஸ்மார்த்த க்ரந்தங்களிலு மப்படி நிர்ணயம்பண்ணி யிருக்கையாலும், வைஷ்ணவனுக்கு, உபவாஸதினத்திலே பண்ணத்தக்க ஶ்ராத்தம் பாரணைதினத்திலே பண்ணவேண்டும். அப்படியே பண்ணிக்கொண்டு வருகிறார்கள். இப்படியிருக்க உபவாஸதினத்திலே தென்கலையார் தாம்பூலம்போடுகிறார்க ளென்கிறசொல்லுபொய்யன்றிமெய்யாமோ? எவனுகிலுமொருமூர்க்கனப்படி செய்கிறது ஸித்தாந்தமன்றே! மூர்க்கனுடையசெயல்ஸித்தாந்தமாகில்வடகலையாரிலேயொருமூர்க்கன் ஶ்ராத்ததினத்தில்வேச்யாகமனம்பண்ணுகிறதும் ஸித்தாந்தமாமே! ஆகையால் உபவாஸதினத்திலேவந்த ஶ்ராத்தம் பாரணைதினத்திலே பண்ணிக்கொண்டு வருகிறதே முக்யம். இதற்கின்னுஞ் சொல்லத்தக்க தனேகமுண்டு. (௧௦) வது:-ஸ்நாநமும் மற்றை யநுஷ்டானங்களும் பகவத் கைங்கர்யமாகவும், உலோகங்களையழியாமைக்காகவும், பண்ணவேணுமென்று இரண்டு ஸம்ப்ரதாயங்களிலு மிருக்கையாலும் "ஸ்நாநம் ஆத்மசுத்யர்த்தம்; தேகசுத்யர்த்தம்;" என்று வகையிட்டுச்சொல்லுகையும், மற்றைப்பேர் தங்களை ப்ராம்மணரென்றெண்ணுவதற்காகப் பண்ணுகிறார்களென்று சொல்லுகையும், ஸ்வமதபரமதங்களை யறியாமையாலே சொல்லுகிறது. (௧௧) வது. ஸமுத்ரஸ்நாநம், காம்யஸ்நாநமென்று வடகலையார்பண்ணின க்ரந்தத்திலே யிருக்கையாலே ப்ரபன்னனுக்கு ஸமுத்ரஸ்நாநம் பண்ணக்கூடாது. ஸ்நாநம்பலவிதம். அதிலே:—நித்யஸ்நாநம் நைமித்திகஸ்நாநம் ப்ரபந்நனுக்கு வேண்டுவது. காம்யஸ்நாநம் வேண்டாவென்று ஸித்தாந்தம். (௧௨)வது. கங்காஸ்நாநம் பண்ணாவிடில் ப்ரத்யவாயமுண்டென்று விதியாமையாலே கங்காஸ்நாநம் நித்யஸ்நாநமன்று. கங்காஸ்நாநம் ஸம்பவித்தாலத்தைத் தவிரவுங்கூடாது. அது ஸம்பவியாவிடில் ப்ரத்யவாயமுமில்லை. ஆகையால் ஸம்பவித்தவிடத்திலே தென்கலையாரும் ஸ்நாநம்பண்ணுகிறதுமுண்டு. ஸம்பவியாவிட்டால் வடகலையாருந் தங்களை கங்காஸ்நாநமில்லாமையாலே பதிதராகக் கொள்ளுகிறதுமில்லை. ஆகையால் கங்காஸ்நாநம் விதிப்ரகாரம் பண்ணுகிறோமென்கிற சொல்லும் ஸித்தாந்தந்தெரியாமையாலே சொல்லுகிறது. (௧௩) வது:-எச்சிற்றின்றவருக்கும், பிள்ளைப்பெற்றவருக்கும், மற்றுந்தின்றத்தகாதவைத் தின்றவர்களுக்கும், த்வக்கைப்பற்றியும் என்பைப்பற்றியும் தேகத்திலே கிடக்கிற வசுத்திக்கு ப்ராயச்சித்தமாகப் பஞ்சகவ்யத்தை சாஸ்த்ரஞ் சொல்லிற்றாகையாலே, ஆத்மசுத்யர்த்தமாசப் பஞ்சகவ்யங் கொள்ளுகிறோமென்கிற சொல்லு சாஸ்த்ரந்தெரிந்தவர்கள் சொல்லல்ல. அந்த பஞ்சகவ்யத்திலும் மேற்பட்டதாக பாகவத ஶ்ரீபாததீர்த்தத்தைச் சாஸ்த்ரம்

விதித்தப்படியினாலே பஞ்சகவ்யம் வேணுமென்கிற நியமமுமில்லை. (௧௪) வது:-ஆழ்வார்களும், பாஷ்யகாரர்முதலான பூர்வாசார்யர்களும் அபிநவதசாவதாரமென்று புராணங்கள் சொல்லுகின்றனவென்று வேதாந்தாசார்யருங் கொள்ளுகையாலே ராமக்ருஷ்ணாவதாரங்களுக்கு நிவேதநம்பண்ண வன்னத்தை ச்ராத்தத்திற்குக் கொடுத்தாற் குற்றமில்லாதாப்போலே பகவதவதாரமான வாழ்வார்களுக்கும் பூர்வாசார்யர்களுக்கும் நிவேதநம் பண்ணின வன்னத்தை ச்ராத்தத்திற்குக்கொடுத்தால் குற்றமில்லை. ஆழ்வார்களுக்கு நிவேதனம்பண்ணின வன்னத்தை ச்ராத்தத்திற்குக் கொடுக்கலாகாதென்று நிஷேதசாஸ்த்ரமில்லாமையாலே ஆழ்வார்களுக்கு நிவேதநம்பண்ணின வன்னத்தை ச்ராத்தத்திற்குக் கொடுத்தால் ஒரு குற்றமில்லை. ஸ்ராத்தத்திலே பித்ருக்கள் புஜித்த போஜனபாத்ரத்தி லிருந்த உச்சிஷ்டத்தை யவைஷ்ணவசூத்ரனுக்கும் ஸ்த்ரீபாலாதிகளுக்குங் கொடுக்கலாகாதென்று சாஸ்த்ரஞ் சொல்லுகையாலே, மற்றுக்கழிக்கத் தக்க சேஷத்தைவைஷ்ணவ ஸத்சூத்ரனுக்குக்கொடுத்தாலுங் குற்றமில்லை. அப்படி கொடுப்பதுமில்லை.

வடகலையா ரெழுதிவைத்ததில் அநேகம் மாறுபாடுகளிருக்கின்றன. என்னவென்றால்:—நம்மாழ்வார் பாதுகாவதாரமென்று புராணங்களிற் சொல்லாமையாலே அவரைப் பாதுகாவதாரமென்றெழுதியது மாறுபாடு. ஆண்டாள் பூமிதேவியம்சமென்று புராணங்கள் சொல்லியிருக்கையாலே லக்ஷ்மீ அம்சமென்றெழுதியது மாறுபாடு. திருமங்கை யாழ்வாருடைய வழிபறிப்பு முதலானது புண்யங்களென்றும் ஸ்ரீரங்கநாதனுடைய அநுஜ்ஞையாலே திருக்குறுங்குடியிலேபோய் ரிஷிகளைப்போலே ச்வாஸநிரோதநம்பண்ணி திருமேனியைவிட்டுத் திருநாட்டிற் கெழுந்தருளினரென்று புராணத்திலிருக்க, அவருடையவழி பறிப்புமுதலானசெயல்கள் பாபங்களென்றும், அந்தபாபபரிகாரத்திற்காக தசாவதாரக்கோவில் கட்டிவைத்தாரென்றும், அரங்கநாதன் கோபம்பண்ணினபடியாலே ஸ்ரீரங்கத்தைவிட்டுப் போனாரென்றும், மைத்துனன்பிள்ளை கையாலே தலையறுப்புண்டு போனாரென்றும், எழுதினது மாறுபாடு. ஆளவந்தாருடைய சிஷ்யரான பெரியதிருமலைநம்பியுடைய உடன்பிறந்தார்களுடைய குமாரர்கள் பாஷ்யகாரரும் எம்பாருமென்று க்ரந்தங்களிலே சொல்லியிருக்கையாலே பெரிய திருமலைநம்பியுடைய பெண்கள் குமாரர்கள் பாஷ்யகாரருமெம்பாருமென்றெழுதியது மாறுபாடு. மந்த்ரோபதேசம் பெற்றபின்பு மந்த்ரோபதேசம் பண்ணின வாசார்யருடையபெண்ணை சிஷ்யன் விவாஹம் பண்ணக்கூடாதென்று சாஸ்த்ரஞ் சொல்லுகிறபடியாலே ஆஸூரி கேசவப்பெருமாளும் கமலநயனப்பட்டரும் பெரிய திருமலைநம்பி ஸந்நிதியில் பஞ்சஸம்ஸ்காரம் பெற்று சிஷ்யரானபின்பு பெரிய திருமலைநம்பியினுடைய பெண்களை யாஸூரிகேசவப்பெருமாளும்கமலநயனபட்டரும் விவாஹம்பண்ணிக்கொண்டார்க ளென்றெழுதியது மாறுபாடு. பாஷ்யகாரர் அவதரித்த நாழிகை

முதல் அவர் திருநாட்டிற்கெழுந்தருளின நாழிகைபளவாக இந்தலோகத்தி லே கலிபுருஷன் நஷ்டனாய்ப்போய்க்ருதயுகமாயிருக்குமென்று நம்மாழ் வார் திருவாய்மொழியிலேவெளியிட்டு அப்படியேநடந்திருக்க, பாஷ்யகார ரெதிரே கலிபுருஷன்வந்து நின்றுவார்த்தைசொன்னானென்று எழுதினது மாறுபாடு.

குசும்பட்டனென்பா னொருவனுண்டென்று குருபரம் பராப்ரபாவம் முதலாகிய க்ரந்தங்களிலே ஒன்றிலுஞ் சொல்லியிராமையாலே, குசும் பட்டனென்றொருவ னுண்டென்றும் அவனுக்குப் பெண்களிருவருண் டென்று மெழுதியது மாறுபாடு. பட்டருடைய விரக்தியும், க்ஞானம் முத லான கல்யாணகுணங்களும், அவருடைய புண்யசரிதங்களும், உபயஸம் ப்ரதாயஸ்தருக்கும் ஒப்புதலாயிருக்கிற படியாலே பட்டர்விஷயத்திலே யெழுதிய தூஷணங்கள் மிகவும்மாறுபாடு.

இப்படி பொதுமையாயிருக்கப்பட்ட வர்த்தங்களிலே வடகலையார் மாறுபாடுகள் பலவுங்கல்பித்து எழுதிவித்தபடியாலே, பிள்ளை லோகாசார் யர் விஷயத்திலும் பெரியஜீயர்விஷயித்திலும் அவர்களெழுதிவித்த தூஷ ணங்கள் மிகவும் மாறுபாடாயிருப்பது ஸத்யமென்று நினைக்கவேணும். பிள்ளை லோகாசார்யருக்கும் வேதாந்தாசார்யருக்கும் பதகமலவிஷயத்தி லும் பாதுகாவிஷயத்திலும் கவிசொல்லுகிறத்தில் ஒருவர்க் கொருவர் கலஹப்பட்டு ப்ரதிஜ்ஞைபண்ணிக்கொண்டு ச்லோகங்கள் சொல்லுமிடத் தில் வேதாந்தாசார்யர்மாத்ரம் ஆயிரமும் முடித்தார்; பிள்ளை லோகா சார்யர் முடிக்கமாட்டாதே போனாரென்றுயெழுதியது மிகவும் மாறு பாடு. ஸ்ரீரங்கத்திலே ஐந்தாம்பேரமான செல்வருடையபுறப்பாட்டை, நம்பிள்ளை திருவோலக்கங் கூட்டங்கலையாமைக்காக பெரியபெருமாளே நம்பிள்ளைகாளிலே நிறுத்திப்புகட்டாரென்று லோகப்ரஸித்தமா யிருக்க, விஜயரங்கசொக்கநாயக்கன் தாதாசார்யரிடத்தில் த்வேஷத்தாலே ஐந் தாம்பேரத்திற்கு நித்யோத்ஸவ மில்லாமல் நிறுத்திப்புகட்டானென்று எழுதினது மாறுபாடு. இப்படியே வடகலையாரெழுதிவித்த தங்கள் மத பூஷணமும் இல்லாதவதிசயத்தைக் கல்ப்பித்தெழுவித்தார்களென்றுநினைக் கத்தக்கது.

பாஷ்யகார ஸம்ப்ரதாயஸ்தரனைவருக்கும் நித்யமாக வநுஸந்திக்கத் தக்கதான குருபரம்பராவாக்யம் பதிமூன்றிலே முதல்மூன்று வாக்யம் ச்ருதிவாக்யமாயிருக்கும், மேல் பத்துவாக்யங்களும் பாஷ்யகாரர் நிய மனத்தாலே பாஷ்யகார சரணாரவிந்தமென்று பெயர்பெற்றிருக்கிற கூரத்தாழ்வான் செய்ததாயிருக்கும். இப்படியிருக்க இந்த பதிமூன்று வாக்யத்தின் நடுவே வேதாந்தாசர்யர் விஷயமான வாக்யத்தை நூதந மாகக் கல்ப்பித்து வடகலையார்கூட்டி யநுஸந்திக்கிறது அஸங்கதம்.

இப்படி யாழ்வார்கள் சரிதங்கள்முதல் இதிலே யெழுதிவைத்ததை யெல்லாம் பழமையாயிருக்கப்பட்ட க்ரந்தங்களிலே தென்கலையார் மூதலிப்பார்கள்.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

# பழநடைவிளக்கம்.

முற்றிற்று.

---

ஹரி: ஓம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# த்ரிம்சத்ப்ரச்நோத்தரம்.

శ్లో ॥ శ్రీశైలేశ దయాపాత్రం ధీభక్త్యాది గుణార్ణవమ్।
యతీంద్ర ప్రవణంవందే రమ్యజామాతరమ్మునిమ్॥......※

**ப்ரச்நப்ரகாரங்கள்.**

(க) ஆழ்வார்களவதரித்தக்ரமமும் அவர்களவதரித்த வருஷமாஸநக்ஷத்திரங்களும் அவர்கள் செய்தருளின ப்ரபந்தங்களும் அவர்கள் விஷயமான தனியன்களும் அந்தத் தனியன்களை ஸாதித்தவர்கள் திருநாமங்களும் இருக்கும்படி யெங்ஙனே?

(உ) பெரியபெருமாள் முதற்கொண்டு மணவாளமாமுனிகள்பர்யந்தம் பூர்வாசார்யக்ரமமும்ஸேனைமுதலி யார்க்குப்பிற்பட்டவர்களுடைய வவதார வருஷ மாஸ நக்ஷத்திரங்களு மவர்கள் செய்தருளின கிரந்தங்களும் தத்விஷயத்தனியன்களும் அந்தத் தனியன்கள் செய்தருளினவர்களுடைய திருநாமங்களும் இருக்கும்படி எங்ஙனே?

(ங) பெரியவாச்சான்பிள்ளை செய்தருளின கிரந்தங்களும் வேதாந்தாசார்யர்செய்தருளின கிரந்தங்களும் அஷ்டாதசார்த்தவிஷயபேதமாகிற வஷ்டாதசஸம்வாதமுண்டென்று சொல்லுகிறார்களே அவ்வளவோ இன்னமுண்டோ? அது பாஷ்யப்ரமேய ஸ்பர்சியோ அல்லது எத்தைப்பற்றியிருக்கும். அதிருக்கும்படியும், அது இன்னதென்றும், வேதாந்தார்யர் ஸூக்திகளாலே யவற்றிற் சில பேதமில்லையென்று ஸித்தமென்கிறார்களே அது இருக்கும்படியு மெங்ஙனே?

(ச) வேதாந்தாசாரியருக்குந் தென்னசாரியர்களுக்கும் அந்யோந்ய காலுஷ்யஹேதுவென்? அது ஆர்காலயிலேயுண்டாய்த்தது? அவர் ஏதத்வி

ருத்தமாயென்னென்ன கிரந்தம்பண்ணினர்? ஆசாரிய ஹ்ருதயமவதரித்தத ற்கு ஹேதுவென்? பெருமாள் தூப்பில்பிள்ளையை முனிந்தப்ரகாரமென்? அவர் கோயில்வாஸம் இழந்தபடியென்? அதன்பின்பவர் அனுகூலித்துக் கோயிலுக்கெழுந்தருளிசெய்தருளின கிரந்தங்களென்?

(கு) வேதாந்தாசாரியர் பாஷ்யநிர்வாஹம்பண்ணின க்ரமமென்? அநுக் கவர்விஷயமானத் தனியனெது? அதை ஸாதித்தவரார்?

(சு) குருபரம்பரையிலே வேதாந்தாசாரியர் எங்கேயிருந்து பிரிவு? அவருடைய சிஷ்யபரம்பரை யெதுவரை? அவரவதரித்தருளின வர்ஷ மாஸ நக்ஷத்திரங்களென்?

(எ) அவர் சிறி தாசாரபேதங்களங்கீகரித்தாரோ அவை யெவை? அவ் விஷயத்தில் தென்னசாரியர்களுக் கபிப்ராயமென்?

(அ) வேதாந்தாசாரியருடைய ஸம்பிரதாயஸ்தருக்குத் திருமண்காப்பிலே பேதமுண்டானபடியென்?

(கூ) ச்ருதப்ரகாசிகை யாருடையநியமனத்தாலே யாராலே யவதரித்தது?

(ய) ஆராயிரப்படிமுதல் திருவாய்மொழி வியாக்யானங்களுக்குங் கர்த்தாக்களார்?

(கக) முப்பத்தாராயிரப்படிக்கு பாஷியகாரருடைய நியமனமில்லை யென்கிறார்களாம் அதிருக்கும்படியென்?

(கஉ) எம்பெருமானர் பாஷ்யஞ்செய்தருளுகிறபோது பேரருளாளராறுவார்த்தை யருளிச்செய்தப்பிரகாரமென்? உடையவர் வடக்கேயெழுந்தருளி வ்ருத்தி க்ரந்தம் ஸங்க்ரஹித்தப்ரகாரமென்? ஸரஸ்வதீபீடத்தில் பாஷ்யத்தை யெறுத்துக்கொண்டப்ரகாரமென்?

(கங) உடையவர்செய்தருளின பாஷ்யத்திற்குமுன் விசிஷ்டாத்வைத விஷயபாஷ்யாதிகளுண்டோ?

(கச) டங்கத்ரமிடகுஹதேவாதிகளென்கிறவர்களார்? அவர்கள் பாஷியாதிக்ரந்தங்களைச் செய்திருப்பதுண்டோ?

(கரு) எம்பெருமானர்முதல் பாஷியப்ரவர்த்தகர்களுடைய திருநாமங்களென்ன?.

(கசு) மணவாளமாமுனிகளை யாச்ரயித்த வஷ்டதிக்கஜங்களுடைய திருநாமங்களென்? அவர்களுக்கு மணவாளமாமுனிஸந்நிதியிலே க்ரந்தாங்வயப்ரகாரமென்? அவர்களைக்குறித்து மற்றதுக்கு நியமித்தபடியென்?

(கஎ) வானமாமலை ஜீயர்முதல் இப்போதெழுந்தருளியிருக்கிற ஜீயர்பரியந்தம் திருமுடிவர்க்கமென்?

(௧௮) இந்தமடஸ்தரான வானமாமலைஜீயருடைய வஷ்டதிக்கஜங்களுடைய திருநாமங்களென் ?

(௧௯) ஆதிவண்சடகோபஜீயர் தென்னாசாரியருடைய ஸம்பிரதாயஸ்தராமே அவராருடைய திருவடிகளை யாச்ரயித்தவர் ? அதில் எத்தனைபட்டம் தென்னாசாரிய ஸம்ப்ரதாயஸ்தராயிருந்தார்கள் ? அவர்களுடைய திருநாமங்களென் ?

(௨0) அந்தமடத்திலே வடகலையார் பிரவேசித்தபடியென் ? அவர்களெத்தனைப்பட்டமாச்சுது ? அவர்கள் திருநாமங்களென் ? அம்மடத்திலே முன் நடந்தபடியென் ? இப்போது நடக்கிறபடியென் ? அந்த மடம் ஆர் நியமனத்தாலேயுண்டாச்சுது ?

(௨௧) ப்ரும்மதந்திரஜீயர்மடமென்றும், பரகாலஜீயர்மடமென்றும் இரண்டுமடமிருக்கிறதே அதெங்கேயிருந்துபிரிவு ? அதார் நியமனத்தாலே யுண்டாச்சுது ? அந்த மடத்வயத்திற்கும் திருமுடிவர்க்கக்கிரமமென் ?

(௨௨) ஆதிவண்சடகோப ஜீயர்மடத்தாருக்கும் முனித்ரயத்தாருக்கு மாசாரபேதமுண்டோ ?

(௨௩) தென்னாசாரியர்களிலே யிப்படி தத்வவிஷயத்திலும் ஆசாரவிஷயத்திலும் அந்யோந்ய பேதமுண்டோ ?

(௨௪) எம்பெருமானார்திருவடிகளிலே யாச்ரயித்த வெழுபத்திநான்கு ஸிம்மாஸநாதிபதிகளுடையதிருநாமங்களென் ? அதிலே சுத்த தெங்கலை யெத்தனைபீடம் ? சுத்தவடகலைஎத்தனைபீடம் ? உபயமாய்க்கொண்டு எத்தனைபீட மிருக்கிறார்கள் ?

(௨௫) ஸப்தகோத்திரமும் அஷ்டகோத்திரமும் ஆருடைய நியமனத்தாலே நிபந்தனைப்பட்டுவருகிறது? அவர்கள் எழுபதுபீடத்திற்குள்ளோ ? புறம்போ ?

(௨௬) முப்பத்தாராயிரப்படி மணவாளமாமுனிகள் பரியந்தம் வந்தக்கிரமமும், அவர் நம்பெருமாளுக்கு ஸாதித்தக்கிரமமும், நம்பெருமாளவர் விஷயத்தில் தனியன் ஸாதித்தக்கிரமமும், அந்தத்தனியனை யெல்லாரும் ஸேவிக்கும்படியான மாகாத்மியமுமிருக்கும்படி யென் ?

(௨௭) வேதாந்தாசாரியர் விஷயமான ராமானுஜதயாபாத்திரத் தனியன் பரகாலஜீயர் செய்தாரென் றிருக்கிறதே அது அப்படியா ? அல்லது அவர்காலத்திற்கு முன்னேயுண்டா ? அவரெத்தனைவருஷத்திற்குமுன்னே யித்தை யுண்டாக்கினார் ? அத்தை யாருடையபலத்தினாலே யெங்கெங்கே சொல்லிவைத்தார் ? அவருடைய ப்ரயத்தினம் யெங்கெங்கே மடங்கிப்போயிற்று ? அவர் எங்கெங்கே வேதாந்தாசாரியர் விக்கிரகங்களைப் பிரதிஷ்டை பண்ணிவைத்தார் ?

(உஅ) பரகால்ஜீயர் பெருமாள்கோயிலுக்கெழுந்தருளினவிடத்திலே நடந்த வ்ருத்தாந்தமென் ?

(உகூ) தென்கலையாரென்றும் வடகலையாரென்றுந் திருநாமம் வந்ததற்கு ஹேதுவென் ? தெங்கலையாரென்பது தமிழ்வேதத்தைப் பிரவர்த்திப்பித்தவர்களென்றும், வடகலையாரென்பது ஸம்ஸ்கிருதவேதத்தைப் பிரவர்த்திப்பித்தவர்களென்றுங் கொள்ளுமளவிலே அடைவே யொவ்வொத்தற்கு ஒவ்வொன்று இன்றிக்கேயொழிகையாலே யொருவர்க்கு முபயவேதாந்தப் பிரவர்த்தகத்வமில்லையாகப் பிரசங்கிக்குமே யது நிர்வஹிகிக்கும்படியென் ?

(௩௦) திவ்யதேசங்களிலே எம்பெருமான்கள் புரப்பட்டருளும்போது திவ்யப்பிரபந்தானு ஸந்தானம் முன்னும் வேதபாராயணம் பின்னும் நடந்து வருகிறதற்கு மூலமென் ?

---

### உத்தரப்ரகாரங்கள்.

இப்படி யாழ்வார்க ளவதாரக்கிரமந்துடங்கி ஸங்கதிவிசேஷத்தாலே இவ்வளவும்வந்து ஆழ்வார்க ளருளிச்செய்தப்பிரபந்தத்திலே தலைக்கட்டினவிந்த முப்பதுப்பிரச்னங்களுக்கும் பூர்வக்கிரந்தங்களைக்கொண்டும் ப்ராமாணிகரான பெரியோர்களிடங்களில் கேழ்விகளைக்கொண்டும் யதாமதி அடவேயுத்தரஞ்சொல்லுகிறதுமேல். அவற்றில் ஆழ்வாராதிகளுடையவவதாராதிக்கிரமப் பிரச்னத்திற்கு உத்தரம். அதில் முதலாழ்வார் மூவரிலே முதலானபொய்கையாழ்வார்பாஞ்சஜந்யாம்சம். அவதாரஸ்தலம் காஞ்சீபுரத்திலேபொய்கையிலே ஹேமாப்ஜம். காலம் த்வாபரயுகத்தில் எட்டிலக்ஷத் தறுபத்தீராயிரத்துத்தொள்ளாயிரத்தெண்பத்திரண்டாவதான ஸித்தார்த்திவருஷத்தில் அற்பசிமீ சுக்லபக்ஷம்அஷ்டமீசெவ்வாய்க்கிழமைகூடின திருவோணநக்ஷத்திரம். இதற்குப்ரமாணம். ఆజ్ఞాధీశ్రీచందనేద్వాపరాఖ్యేసిద్ధార్థాఖ్యేఽక్ష్యవత్సరేమాసిమేషే | శుక్లాష్టమ్యాంభౌమవారేశుభక్షేఽవిష్ణుర్జాతస్త్రప్రాపకాసారయోగీ॥ இதி. இவர் செய்தருளின ப்ரபந்தம் வையந்தகளியா வென்கிற திருவந்தாதி. இவருக்குத்தனியன். కాంచ్యాంసరసిహేమాబ్జే జాతంకాసారయోగినమ్ | కలయేయశ్శ్రియఃపత్యై రవిం దీపమకల్పయదితి. த்ரமிடத்தனியன் கைதைசேர்பூம்பொழில் இத்யாதி. இவருக்குத் திருநாமங்கள் பொய்கையாழ்வார் (க) ஸரோயோகி (உ) காஸாரயோகி (௩) இத்யாதி. இவைகளில் பிரமாணம்-மார்க்கண்டேயபுராண பார்க்கவபுராண பாத்மபுராணாதிகள். விஸ்தார பயத்தாலே எழுதித்திலோம். (க)

பூதத்தாழ்வார் அவதாரமெங்ஙனே யென்றால் யுகவர்ஷமாஸங்கள் பூர்வோக்தங்களே. நவமிதிதி புதன்கிழமை. அவிட்டநக்ஷத்திரம். அவதாரஸ்தலம் திருக்கடல்மல்லையில் மாதவிப்பந்தல். இவர் களமோதகீ யென்கிற பகவத்கதாம்சம். இவரருளிச்செய்த பிரபந்தம் அன்பேதகளியா வித்யாதியான திருவந்தாதி. இவர் தனியன். మల్లాపురవరాధీశంమాధవీకుసుమోద్భవమ్ |

భూతన్న హ్మమహదాహ్వ యోగివిష్ణో జ్ఞానదీపమకల్ప యదితి. த்ரமிடத்தனியன். என்பிற விதீரவித்யாதி. இந்தத் தனியன் பிள்ளானருளிச்செய்தது. இதிலும் பூர் வோக்தமான மார்க்கண்டேய புராணாதிகள்ப்ரமாணம். (உ)

பேயாழ்வார் அவதார மெங்ஙனேயென்றில் யுகவர்ஷமாஸங்களதுவே, திதி தசமீ. வியாழக்கிழமை. சதயநக்ஷத்திரம். அவதாரஸ்தலம் திருமயிலையில் கேசவப்பெருமாள் திருக்கிணற்றில் செவ்வல்லிப்பூ. இவர் நந்தகமென்கிற பகவத்கட்காம்சம். இவரருளிச்செய்தப்பிரபந்தம் திருக்கண்டே னென்கிற திருவந்தாதி, இவர்தனியன். దృష్ట్వాహిష్ణుం తదాహ్వాష్టం రమయామయిలాధిపమ్ । కూపేరక్తోత్పలేజాత మ్మహదాహ్వయమాశ్రయే ఇతి. த்ரமிடத்தனியன். சீராரும்மாடவித்யாதி. இது குருகைக்காவலப்பனருளிச்செய்தது. இவர்க்குத்திருநாமம் பேயாழ்வார். இதிலும் பிரமாணம்பூர்வோக்தம். இவர்மூவரும் அயோநிஜர். (ங)

திருமழிசையாழ்வார் திருவவதார மெங்ஙனேயென்றில் யுகவர்ஷங்களதுவே. தைமீத்தில் கிருஷ்ணபக்ஷப்பிரதமையில் பானுவாரத்தில் மகாநக்ஷத்திரம் அவதாரகாலம். இவர் ஸுதர்சநாம்சம். இவருக்குப் பிதா ப்ருகுமகாமுனி. இவரவதாரஸ்தலம் வம்சாரண்யமான மஹீஸாரக்ஷேத்ரம். இவர் செய்தருளினப் பிரபந்தம் திருச்சந்தவிருத்தம் (க) நான்முகன்திருவந்தாதி (உ) இவர் தனியன் మఖాయాంమకరేమాసే చక్రాంశంభార్గవోద్భవమ్ । మహీసారపురాధీశంభక్తిసారమహంభజఇతి॥ த்ரமிடத்தனியன். தருச்சந்தப்பொழிற மூவு தாரணியின்றுயர்தீர வித்யாதியும், உலகுமழிசையித்யாதியும். இந்த விரண்டுதனியன்களுந் திருக்கச்சிநம்பி யருளிச்செய்தது. திருவந்தாதித் தனியன். நாராயணன்படைத்தானித்யாதி. இது சீராமப்பிள்ளை யருளிச்செய்தது. இவர் திருநாமம் மழிசைப்பிரான், பக்திஸாரர், பார்க்கவர், அக்ஷபாதர் இதி. இதற்குப் பிரமாணம் శోభక్తిసారో దేవేశే త్యాదిబ్రహ్మాగ్నాత్మనా పరమ్ இத்யந்தமான மார்க்கண்டேயாதி புராணவசனம். இவர் ருஷிஸம்பவர். (ச)

நம்மாழ்வார் திருவவதாரக்கிரம மெங்ஙனே யென்றில் காலம் கலியுகம் நாற்பத்திமூன்றுவது நாளில் வைசாகமாஸத்தில் பகுதான்னிய வருஷத்தில் பௌர்ணமியில் வெள்ளிக்கிழமையில் கர்க்கடலக்னம். திருவவதாரஸ்தலம் திருத்தாம்ரபர்ணீ தீரத்தில் திருக்குருகை. இவர் கௌஸ்துபாம்சம் ; விஷ்வக் ஸேநாம்சம் ; பகவதம்சம். இவர் செய்தருளின பிரபந்தம் திருவிருத்தம். திருவாசரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி. இவர்தனியன் మాతాపితేత్యాది. இது ஆளவந்தார் அருளிச்செய்தது. திருவாய்மொழித் தனியன். భక్తామృతమిత్యాది. இது நாதமுனி யருளிச்செய்தது. திருவழுதிநாடென்றும் இத்யாதி. இது ஈச்வரமுனிகளருளிச்செய்தது. மனத்தாலும் வாயாலும் இத்யாதி. இதுசொட்டைநம்பி யருளிச்செய்தது. ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமானுசமுனிதன் இத்யாதி. அநந்தாழ்வானருளிச்செய்தது. வான்திகழும்

சோலை யித்யாதியும் மிக்கவிறைநிலையு மித்யாதியும் பட்டரருளிச்செய்தது. இவர்க்குநிவாஸமான திந்திரிணீவிருக்ஷம்சேஷாம்சம். இவர்திருநாமம். சடகோபன். காரிமாறன். நம்மாழ்வார். வகுளாபரணர். இத்யாதி. இதில் பிரமாணம் క్రూరే కలియుగే ప్రాప్తే నాస్తికైః కలుషీకృతే । విష్ణోరంశాంశసంభూతో వేదవేదాంతతత్త్వవిత్ என்று துடங்கி ప్రయాస్యతి పునస్సోపి సాయుజ్యం పరమాత్మనః॥ இத்யந்தமான பாத்மபுராணவசனமும், శ్రూయతాముచ్యతే కించిద్రహస్యమ్మునిసత్తమాః । కాలాంతరేతు మచ్ఛయ్యా భూతో భుజగనాయకః॥ నినీషుర్ద్రవితం త్రిజీశత్వమేష్యత్యహమధేష్టదః । నేతుం ద్రావిడతాం వేదాన్ సత్రైవర్ణికతాంగతః । మద్భక్తశ్శఠకోపాఖ్యో భవిష్యామి మదిచ్ఛయా॥ இத்யாதியான ப்ரம்மாண்ட புராணவசனமும், కౌస్తుభాంశస్థితం తేజః కించిద్భూభారపాతహః । తద్రూపంభాస్వరంజాతం శఠకోప ఇతిస్మృతమ్ இத்யாதியான மார்க்கண்டேய புராணவசனமும் శఠకోపస్య దేవేశ కథయస్వ కథాం మమ என்றுதுடங்கி తతః కలియుగస్యాదౌ వైశాఖ్యాం విశ్వభావనః । విష్ణుభక్తిప్రతిష్ఠార్థం సేనేశోవతరిష్యతీత్యాది விஸ்தரேணச்சொல்லிக்கொண்டுபோந்து, తత్రాగరుడమారోప్య హరిణా నిజమందిరమ్ । శ్రీవైకుంఠమనుప్రాప్య ప్రవేక్ష్యతి నిజాంతనుమ్॥ இத்யந்தமான வ்ருத்தபாத்மவசனமும். இவ்விஷயத்தில் கிரந்தங்களில் வருஷஸங்கியாதி பேதங்கள் தோற்றுகிற விடத்தில் ராமாவதாராதிகளைப்போலேகல்பபேதே ஸமாதானங்கண்டுகொள்வது "ஊழிதோருழியுலகுக்கு நீர்கொண்டு தோழியரும் யாமும்போ" வென்கிற விதிலே யாழ்வார்களுக்குங் கல்பந்தோறும் அவதாரம் உண்டென்பது வ்யஞ்சிதம். இவர் பூவைசியர். (௫)

குலசேகராழ்வார் அவதாரக்கிரமமெங்ஙனேயென்றில் அவதாரகாலம் கலியுகம் பிறந்து இருபத்தெட்டாம்வருஷமான பராபவவருஷத்தில் மாசிமாதம் வியாழக்கிழமையில் சுக்லத்வாதசியில் புனர்வசுநக்ஷத்திரம். அவதாரஸ்தலம் கொல்லிநகர் என்கிறநகரம். இவர் கௌஸ்துபாம்சம். இவர் செய்தருளின பிரபந்தம் பெருமாள்திருமொழி. இவர்தனியன் ఘుష్యతే యస్య నగరే రంగయాత్రా దినే దినే। తమహం శిరసా వందే రాజానం కులశేఖరమ్. த்ரமிடத்தனியன்கள் இன்னமுத மித்யாதியும் ஆரங்கெடவித்யாதியும் மணக்கால்நம்பி யருளிச்செய்தது. இவர் முகுந்தமாலையென்கிற ஸம்ஸ்கிருத ஸ்தோத்திரமு மருளிச்செய்தார். இவர் திருநாமம் கொல்லிகாவலன், கூடல்நாயகன், குலசேகரன் இத்யாதி. இதில் பிரமாணம் కోలవృర్యాం కేరళేషు రాజా కశ్చిద్భవిష్యతి । శృణ్వతో రామచరితం తన్మయీకృత చేతసః॥ இத்யாதியான வ்ருத்தபாத்மவசனம். இவர் க்ஷத்திரியர். (௬)

பெரியாழ்வார் திருவவதாரக்ரம்மெங்ஙனேயென்றில் அவதாரகாலம் "தத்வாப்தாபகமே" என்கிறபடியே கலியுகத்தில் நாற்பத்தேழாம் ஸம்வத்ஸரமான க்ரோதனவருஷத்தில் ஆனிமீ சுக்லபக்ஷத்தில் ஏகாதசியில் பாவைா

ரத்தில் ஸ்வாதீநக்ஷத்திரம். அவதாரஸ்தலம் ஸ்ரீவில்லிபுத்தூர். இவர் கருடாம்சம். இவர் செய்தருளின ப்ரபந்தம் திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி. இவர்தனியன். గురుముఖమనధీత్యేత్యాది. இது நாதமுனிகளருளிச்செய்தது. மின்னார் தடமதிள்சூழ் இத்யாதி. இது பட்டரருளிச்செய்தது. இவருக்குத்திருநாமம். பெரியாழ்வார், பட்டநாதன், விஷ்ணுசித்தன், வில்லிபுத்தூர்க்கோன், இத்யாதி. இதில் பிரமாணம் ఉపాయోపేయరూపేణతమేవైకముపాశ్రితః என்றும், ఇతివిజ్ఞాపితోదేవో ధ్రువస్యైవాత్మదర్శనః என்றும், సమస్తవేదసర్వస్వరహస్యం దర్శయిష్యతి என்றும், తదేవభగవత్తత్వపారమ్యం దర్శయిష్యతి என்றும், శ్రీశోపిగరుడారూఢః இத்யாதியும், ఆశిషశ్శ్రీసహాయస్య இத்யாதியும் భట్టనాథపదంలబ్ధః இத்யாதியுமான வ்ருத்தபாத்மவசனம். இவர் புரச்சிகர் (அதாவது முன்குடிமி பிராம்மணர்.) (எ)

தொண்டரடிப்பொடியாழ்வார் அவதாரக்கிரம மெங்ஙனேயென்றில், அவதாரகாலம் கலியுகத்தில் இருநூற்றெண்பத்தொன்பதாவதான ப்ரபவஸம்வத்ஸரத்தில் மார்கழிமாசத்தில் செவ்வாய்க்கிழமையில் கேட்டை நக்ஷத்திரம். அவதாரஸ்தலம் திருமண்டங்குடி. இவர் வனமாலிகாம்சம். இவர் செய்தருளினப்பிரபந்தம் திருப்பள்ளியெழுச்சியும், திருமாலையும். இவர் தனியன் తమేవమత్వా இத்யாதி. த்ரமிடத்தனியன். மண்டங்குடியென்பர் இத்யாதி. இவ்விரண்டு தனியன்களுந் திருமாலையாண்டானருளிச்செய்தது. மற்றொன்றும் வேண்டா இத்யாதி திருவரங்கப்பெருமாளருளிச்செய்தது. இவர் திருநாமம் தொண்டரடிப்பொடி, விப்ரநாராயணன். இவரும் முன்குடிமிபிராமணர். இதில்ப்ரமாணம் అత్రత్రేకథయిష్యామిమునేజ్ఞాంభావినీంకథామ్ என்றுதுடங்கி భవితామండనగ్రామఇత్యాదియుం, బాల్యేతస్యభవిష్యతిభగవత్యంబుజేక్షణే। ప్రబోధకంభగవతః ప్రబంధంకారయిష్యతి இத்யாதியும், వినియుజ్యశరీరాంతే పరంవ్యోమప్రపద్యతే இத்யாதியுமான வ்ருத்தபாத்மாதிவசனம். (அ)

திருப்பாணாழ்வார் திருவவதாரக்ரம மெங்ஙனே யென்றில் அவதாரகாலம் கலியுகத்தில் முன்னூற்றுநாற்பத்திரண்டிற்குமேற் செல்லாநின்றுள்ள துர்மதிவருஷத்தில் வ்ருச்சிகமாஸத்தில் கிருஷ்ணபக்ஷத்தில் த்விதீயைதிதியில் புதன்கிழமையில் ரோகணிநக்ஷத்திரம். அவதாரஸ்தலம் நிசுளாபுரியென்கிற உறையூர். இவர் ஸ்ரீவத்ஸாம்சம். இவரருளிச்செய்தப் பிரபந்தம் அமலனாதிப்பிரான். இவர்விஷயமான தனியன் ఆపాదచూడమనుభూయహరిమిత్యాది. இது பெரியநம்பி யருளிச்செய்தது. த்ரமிடத்தனியன்.

காட்டவே கண்ட பாதங் கமலநல் லாடை யுந்தி
தேட்டரு முதிர பந்தந் திருமார்பு கண்டஞ் செவ்வாய்
வாட்டமிற் கண்கள் மேனிமுனியேறித் தனிபுகுந்து
பாட்டினாற் கண்டு வாழும் பாணர்தாட் பரவி னோமே.

இது திருமலைநம்பியருளிச்செய்தது. இவருக்குத் திருநாமம் திருப்பாணாழ்வார், முனிவாகனர், இவர் அயோநிஜர். இதில் பிரமாணம். కార్తికేమాసిరోహిణ్యాంగాయకఃప్రభవిష్యతి. என்று துடங்கி விஸ்தரேணச்சொல்லிக்கொண்டு போந்து ఆపాదచూడంసేవిత్వాలయంరంగిణోయాస్యతి॥ என்று மளவாகச்சொன்ன வ்ருத்தபாத்மபுராணாதி வசனம். (௯)

திருமங்கையாழ்வார் திருவவதாரக்கிரம மெங்ஙனேயென்றில் அவதாரகாலம் கலியுகம் முன்னூற்றுத்தொண்ணூறத்தேழுக்குமேல் செல்லாநின்றுள்ள நளவர்ஷத்தில் விருச்சிகமாசம் வியாழக்கிழமையில் கிருத்திகாநக்ஷத்திரம். அவதாரஸ்தலம் திருவாலிதிருநகரியில் திருக்குறையலூர். இவர் சார்ங்காம்சம். இவர்செய்தருளினப் பிரபந்தங்கள் பெரியதிருமொழி. திருவெழுகூற்றிருக்கை. சிறுத்திருமடல், பெரியதிருமடல், திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம். ஆக ஆறுப்பிரபந்தங்கள். இவர் தனியன் కలయామికల్యాద॥ இதுதிருக்கோட்டியூர்நம்பி யருளிச்செய்தது. திரமிடத்தனியன் வாழிபரகாலனித்யாதி. இது உடையவர் அருளிச்செய்தது. நெஞ்சுக்கிருள்கடி யித்யாதி. ஆழ்வானருளிச்செய்தது. எங்கள்கதியே எம்பார் அருளிச்செய்தது. இவர் திருநாமம்பரகாலன். நீலன். கலிகன்றி. அருண்மாரி. ஆடல்மாவலவன். திருமங்கையாழ்வார். இத்யாதி. இவர்கள்ளக்குடி. இவர் சீர்காழியிலேயிருக்கிற சம்மந்தனை வாதத்திலே ஜயித்து அவன்கையில்வண்டயத்தைத்தமக்கு வீரக்கழலாகப்பெற்றவர். இவர்கோயில்முதலான திவ்யதேசங்களிலேப்ராகாரகோபுர மண்டபாத்யனேக கைங்கரியஞ் செய்தவர். இவர், கலியனருளப்பாட்டிலேசொல்லுகிற படியே திருவத்யயனேத்ஸவத்தில் நம்மாழ்வாரை யெழுந்தருளப்பண்ணிவைத்து அவர் திருவடித்தொழும் ப்ரகாரத்தைப் பெரியபெருமா ளனுபவித்துக் காட்டக்கண் டனுபவித்தார். இவர் ஜன்மாந்தரத்திலே உபரிசரவசு என்கிற ராஜா. இவரவதாரத்தின் பிரமாணம் అత్రాపివర్తయిష్యామిభావ్యాంభగవతీంకథామ్। శ్రీపాలనామ్నా విమయేచోళేషుప్రభవిష్యతి। వర్షేచతుర్థే కార్తిక్యాంనీలవర్ణోహరిప్రియః॥ என்று விஸ்தரேணசொல்லிக்கொண்டுபோந்து ఇతిశ్రీకృత్తికాయాంజన్మామోపదేక్ష్యతి॥ இத்யாதியாகச் சொன்ன வ்ருத்தபாத்மாதி வசனம். (௧௦)

இப்படி ஆழ்வார்கள் பதிவரோடொக்க అహంశిష్యాచదాసీచభక్తాచ என்கிற பூமிப்பிராட்டிவசனத்தின்படியே ஸ்ரீ வராகபுராண ச்ரவணத்தால் சிஷ்யையாய் ஆழ்வார்களோ டொக்கப் பிறந்து கவிபாடினமையாலே பக்தையாய் பரதசையி லெம்பெருமானும் பெரிய பிராட்டியாருமான சேற்றியிலே கலசப்பானையெடுப்பாரோபாதி தாஸியுமாயிருக்கையாலே பூம்யம்சமான ஆண்டா ளவதாரத்தையும் வ்ருத்தபாத்மாதி பரமர்ஷிப் பிரணீதபுராணங்களிலுந் திவ்யசூரிசரிதாதி பூர்வாசாரியக் கிரந்தங்களிலும் பிரதிபாதித்துப் போருவதுண்டு. ஆகையால் ஆண்டாளவதாரக்ரமஞ் சொல்லக்கடவது. அதெங்ஙனேயென்றில் திருவவதாரங்கலியுகத்தில் தொண்ணூற்றேழிற்குமேற் சொ

ல்லாநின்றுள்ள நளவருஷம்ஆடிமாசத்தில் சுக்லபக்ஷத்தில் சதுர்த்தியில் செவ்வாய்க்கிழமைகூடின பூர்வபல்குனீநக்ஷத்திரம்.ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதாரஸ்தலம்துளஸீவநம். இவர்பூமிப்பிராட்டியாரம்சம்.இவள் அயோநிஜையானாலும் பெரியாழ்வார்ஸம்பந்தத்தினால்ப்ராம்மணவர்ணம். இவர்செய்தருளினப்ரபந்தம் திருப்பாவையும்,நாச்சியார் திருமொழியும்.இவள்தனியன் నీళాతుంగేత్యాది. இது பட்டரருளிச்செய்தது. த்ரமிடத்தனியன். அன்னவயலித்யாதி. இது உய்யக்கொண்டா ரருளிச்செய்தது. அல்லிநாட்டாமரைமேலித்யாதி. இது திருக்கண்ணமங்கையாண்டா னருளிச்செய்தது. இவள் திருநாமம் சூடிக்கொடுத்தாள், ஆண்டாள், ஆழ்வார் திருமகள், கோதையித்யாதி. கோதை யென்று மயிர்முடிக்கும் பூமாலைக்கும் பூமாலை தொடுப்பவர்களுக்கும் பெயராகையாலே யிவள் பூமாலைபோன்றவளாகையாலும் பூமாலை தொடுக்கும் ஆழ்வார்மகளாகையாலும் இவளைக்கோதை யென்கிறது. கோதையென்று திருக்குழலாய் அத்தைத் திருமாலையோடே யெம்பெருமானுக்குக் கொடுத்தவளாகையாலே గాం దదాతీతి గోదా என்கிற வடமொழி, த்ரமிடத்தில் கோதை யென்று திரிந்துகிடக்கிறது.இவளவதாரத்தில் ப்ரமாணம் "అయోనిజాతుతుళసీ కానసేవిశ్వధారిణీ। దుహితావిష్ణుచిత్తస్యజానకీవజనిష్యతి என்றுதுடங்கி కర్కగోదావతరణంఇத்யாதியால் ஸூத்திரவதீப்ரச்னத்தையுபக்ஷேபித்து ஸ்ரீவிஷ்ணுசித்தமாகாத்ம்யகதந பூர்வகமாக అషాఢేపూర్వఫల్గున్యాం என்றுதுடங்கிதுளసీమూలభూభాగే బాలాముత్తానశాయినీమ్। పద్మాస్యాంపద్మనయనాంపద్మనాభమనఃప్రియామ్॥ ప్రకృత్యతృక్షణవిభవాం సీతాంసీరధ్వజోయథా,, இத்யாதியாலும்; "భగవద్భక్తిపీయూషస్రవైస్స్తుతివచఃక్రమైః,, இத்யாதியாலும்; క్రమేణపంచవర్షాయావిష్ణువేపరికల్పితా। పిత్రాగోవిందగానేనదివ్యప్రకృతిశాలినీ। కృష్ణంసంకల్ప్య రమణంప్రబంధకృతవాఙ్మయైః। దివ్యప్రబంధకరణాత్స్తోష్యతి శ్రీసఖంహరిమ్। తదామనోహరాంమాలాంఆసజ్యాళకభారేస్వే। యన్నిమాల్యస్రజంవిష్ణుస్స్వయం శేఖరయిష్యతి,, என்றுமளவாக ஸ்ரீதேவீவசனமாக ப்ரவ்ருத்தவ்ருத்தபாத்மாதி வசனங்கள். (கக)

நம்மாழ்வாருக்குத் திருவடியாகையாலே மதுரகவியாழ்வார் திருவவதாரக்கிரமமும் இவற்றோடொக்கச் சொல்லுவதுண்டு. அதெங்ஙனேயென்றில் அவதாரகாலம் த்வாபரயுகத்தில் எட்டுலக்ஷத்து மூவாயிரத் தெண்ணூற்தெழுபத்தெட்டுக்குமேற் செல்லாநின்றுள்ள வீச்வரவருஷத்தில் சித்திரைமாஸம் சுக்லபக்ஷத்தில் வெள்ளிக்கிழமை சித்திரைநக்ஷத்திரம். அவதாரஸ்தலம் பாண்டியதேசத்தில் திருக்கோளூரென்கிற திருப்பதி. இவர் குமுதாம்சமும் கருடாம்சமும். இவர் செய்தருளின ப்ரபந்தம் கண்ணிநுண்சிறுத்தாம்பு. இவர் தனியன் అవిదితవిషయాంతరః இத்யாதியும் வேறொன்று நானறியேன் இத்யாதியும். இது நாதமுனிக ளருளிச்செய்தது. இவர் పూర్వశ్చాదబ్రాహ్మణ

வர்ணம். இவர்திருநாமம் மதுரகவிகள், శఠారిభక్తర్, శఠారివాగ్వ్యసక్, இத்யாதி. இவரதவதாரத்தில் ப்ரமாணம்:— తామ్రపర్ణీనదీతీరే కోలగ్రామేద్విజన్మనాం। కులేమధురకవ్యాఖ్యశ్చైత్ర్యాం ప్రాదుర్భవిష్యతి | హరివాహాంశసంభూతశ్శఠకోపపదాశ్రయః என்று துடங்கி ఆచార్యచరణైకేషణః| గురుమేకాన్తమాశ్రితః। స్వకర్మజ్ఞానభజనప్రపత్తిష్వనధిక్రియామ్|అశక్త్యాఖ్యాపయన్నృణాంవసత్యాచార్యసమ్మతౌ| సదాచార్యోపసంయుక్తస్స్వమాప్నోతిపరాంగతిమ్ இத்யாதி யானபாத்மபுராண வசனம். உடையவர் திருவவதாரக்கிரமம் குருபரம்பராக்ரமத்திலே சொல்லக்கடவது. (கஉ)

## ఇతి త్రింశత్ప్రశ్నాఖ్యం ప్రథమప్రశ్నోత్తరం.

ஆழ்வார்களு மாசார்யர்களுமென்று ஆழ்வார்களுக் கனந்தரமாசார்யர்களாகையாலே ஆழ்வார்களுக் கநந்தரம் குருபரம்பரா விஷயமான த்விதீயப்ரச்னத்திற்குத்தரம். குருபரம்பராக்ரம மிருக்கும்படியெங்ஙனேயென்றில் எம்பெருமான்.பெரியபிராட்டியார்,ஸேனைமுதலியார்,நம்மாழ்வார்,நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரியநம்பி, உடையவர், எம்பார்,பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை,வடக்குத்திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாளமாமுனிகள், இது ப்ரசுரமான வாச்ரயணஸம்ப்ரதாய பரம்பரை. இதில் எம்பார் ஸ்தானே ஆழ்வானையனுஸந்திப்பதுமுண்டு. இன்னு முடையவர் துடங்கி ஆழ்வான், ஆண்டான், கிடாம்பியாச்சான், ஆசூரிபெம்மான், நடாதூராழ்வான் முதலானருடைய தத்தத்வம்சக்ரமத்தில் ஆச்ரயண ஸம்ப்ரதாய பரம்பரைகள் பலவுமுண்டு. குருபரம்பரைதான் ஆச்ரயணபரம்பரையும் க்ரந்தபரம்பரையுமாக விரண்டுவகைப்பட்டிருக்கும். அதில் க்ரந்தபரம்பரை ஸ்ரீபாஷ்யாதிபரம்பரையும், திவ்யப்ரபந்த வியாக்யானபரம்பரையும், ரஹஸ்ய க்ரந்த பரம்பரையுமாக மூன்றுவகைப்பட்டிருக்கும். அது மேலே வ்யக்தமாம். ப்ரதமாசார்யன் எம்பெருமான் திருநக்ஷத்திரம் திருவோணம். அநந்தரம் பெரியபிராட்டியார். இவள் த்வயம்முதலான ரஹஸ்யங்களை யெம்பெருமான்பக்கல் பெற்றிருக்கும். திருநக்ஷத்திரம் உத்தரபல்குனி. பெரியபிராட்டியார் பக்கல் ஸகலரஹஸ்யங்களையும் பெறுகையாலே ததனந்தரம் ஸேனைமுதலியார். இவர் திருநக்ஷத்திரம் அற்பசியில் பூராடம். இவர்கள் மூவரும் நித்யராவும் ஓரோதசாபேதங்களைப் பற்ற யுபதேசக்ரமமும் திருநக்ஷத்ரமுமுண்டு. நம்மாழ்வார் திருவவதாரக்ரம முன்பு சொல்லிற்று. இனி நாதமுனிகள்முதல் திருவவதாராதிகள் சொல்லுகிறது. எங்ஙனேயென்றில்-அவதாரகாலம் ஆனிமாதத்தில் அனூராதா நக்ஷத்ரம். அவதாரஸ்தலம் வீரநாராயணபுரம். இவர் பிராம்மணவர்ணம். இவரருளிச்செய்த ப்ரபந்தங்கள் ஸ்ரீபுருஷநிர்ணயமும், ந்யாயதத்வமும். இவருடைய வவதாரமும் తతః కాలేనమహతావినష్టాంభువితచ్ఛ్రుతిం। నాథనామామునివరోయోగజ్ఞానాదవాప్స్యతి, என்று வ்ருத்தபாத்மத்திற் சொல்லப்பட்ட

து. அநந்தரம் இவருடைய திருவடிகளை யாச்ரயித்தவர் உய்யக்கொண்டார். இவர் திருநக்ஷத்ரம் சித்திரையில் க்ருத்திகா நக்ஷத்திரம். இவர் தனியன். నమః పంకజనేత్రాయేత్యాది. இது மணக்கால்நம்பி யருளிச்செய்தது. இவருக்குத் திருநாமம் உய்யக்கொண்டார், புண்டரீகாக்ஷரென்று. அநந்தரம் இவருடைய திருவடிகளை யாச்ரயித்தார்மணக்கால்நம்பி. இவர்ஆளவந்தாருக்கு ஸகலார்த்தமும்ப்ரஸாதித்தார். இவர் திருநக்ஷத்திரம் மாசிமாஸம்மகம்.இவர்திருநாமம் ஸ்ரீராமமிச்ரர். இவர்தனியன் అయత్నతో యామునమిత్యాది. இது பெரியநம்பி யருளிச்செய்தது. அநந்தரமிவருடைய திருவடிகளிலே யாச்ரயித்தவர் ஆளவந்தார். இவர் அவதாரகாலம் ஆடிமாஸம் உத்திராடம். அவதாரஸ்தலம் வீரநாராயணபுரம். இவர் ஸிம்மாஸனும்சம். இவர் திருநாமம் ஆளவந்தார், யமுனைத்துறைவர், யாமுனாசார்யர், யாமுநேயர் என்று. இவர்செய்தருளின ப்ரபந்தம் ஆத்மஸித்தி. ஸம்வித்ஸித்தி. மோக்ஷஸித்தி. ஆகமப்ராமாண்யம். கீதார்த்தஸங்க்ரஹம். ஸ்தோத்ரரத்னம். சதுச்லோகி. மாயாவாதகண்டனம். இவர்தனியன் యత్పదాంభోరుహేత్యాది. இது உடையவருளிச்செய்தது. இவர் சொட்டைக்குலம். அநந்தரம் இவர் திருவடிகளை யாச்ரயித்தவர் பெரியநம்பி. இவர் அவதாரகாலம் மார்கழியிற்கேட்டை. இவர் திருநாமம் பெரியநம்பி. மஹாபூர்ணர். இவர்தனியன் కమలాపతీత్యాది. இது உடையவருளிச்செய்தது. இவர் திருவடிகளை யாச்ரயித்தவருடையவர்.இவருடைய திருவவதாரம் கலியுகத்தில் நாலாயிரத்து நானூற்றுப் பதினெட்டிற்குமேற் செல்லாநின்றுள்ள பிங்களவர்ஷத்தில் சித்திரைமாசத்தில் ஸப்தமீ குருவாரங்கூடினதிருவாதிரை நக்ஷத்திரம். அவதாரஸ்தலம்ஸ்ரீபெரும்பூதூர். இவர் எம்பெருமான் பெரியபிராட்டியார் திருவநந்தாழ்வான் ஸேனைமுதலியார் பஞ்சாயுதங்கள் இவர்களுடைய வம்சாவதாரம். இவருக்குத் திருநாமம் இளையாழ்வார். இராமானுஜன் இத்யாதி. இவர் செய்தருளின ப்ரபந்தங்கள் ஸ்ரீபாஷ்யஸாரஸங்க்ரகதீபங்கள் மூன்றும், கத்யங்கள் மூன்றும், கீதாபாஷ்யம், நித்யம், ஆக ஒன்பது. இவர் ஹரிதகுலதிலகர். இவருடைய வைபவம் எழுதப்புக்கால் ஒரு மகாபாரதத்திற்குப் போருமாகையாலே எழுதித்திலோம். இவர் தனியன் యోనిత్యమచ్యుతేత్యాది. இதுஆழ்வானருளிச்செய்தது. முன்னைவினையகல், நயந்தரும், மணிமுத்தனர். சொல்லுந்தொகைஅமுதனர். இவரவதாரத்திற் ப்ரமாணம் తతః కాలే బహుతిథే భవినష్టాం విష్ణవ ర్షీన్ । త్రిదండమండితో దేవో దేవః ప్రావర్తయిష్యతి. పాషండబహులే లోకే కుదృష్టిజనసఙ్కులే । మోహముహ్యమానే జగతి వినష్టే హరివైభవే। మోహనైరానురాగైస్తైః కుయుక్తిపరికల్పితైః। వేదాన్తమార్గానుగతైరన్యైః కుమతిసుందరైః। సిద్ధాంతైర్వ్యాప్తే లోకం పునరభ్యుద్ధరిష్యతి । బాదరాయణసంజ్ఞస్య శ్రుతస్య మహామునేః। మతం వేదాంతతాత్పర్యం విస్మృతం ప్రేక్ష్యభూతలే। గీతాచార్యమతం చైవ పునరుద్ధారయిష్యతి । త్రిదండధారీభగవాన్ పునరుద్ధారయిష్యతి । త్రిదండపాణిర్భగవాన్ వేత్రపా

తిస్తవప్రియః । భక్తానాంభాగధేయేన భువిప్రాదుర్భవిష్యతి. இத்யாதியும், ఇత్యేవంవిప్లవందృష్ట్వాభక్తాన్ భావయితుంహరిః । బాదరాయణసంజ్ఞస్యమునే ర్దర్శయితుమ్మతమ్ । శారీరకమ్మహాభాష్యం సూరిణా కారయిష్యతి|இத்யாதியுமான வ்ருத்தபாத்ம வசனமும் అనంతఃప్రథమంరూపం లక్ష్మణశ్చతతఃపరమ్ । బలభద్రస్తృతీయస్తుకలౌకశ్చిద్భవిష్యతి. என்கிற யாதவாசல மஹாத்ம்ய வசனமும் பார்க்கவபுராணாதிகளுமென்று கண்டுகொள்ளுவது.

இவர் திருவடியி லாச்ரயித்தவர் எம்பார். இவர் அவதாரகாலம் க்ரோதன வருஷம் தைமாசம் பௌர்ணமி சோமவாரம்கூடின புநர்வஸு நக்ஷத்திரம். இவரவதாரஸ்தலம் மழலைமங்கலம். இவர் வட்டமணிக்குலம். இவருக்குத் திருநாமம் எம்பார், இராமாநுஜபதச்சாயை, கோவிந்தாஹ்வயர், இதி. இவர் விஹிதவிஷய விரக்தர். இவர் திருவடிகளிலே யாச்ரயித்தவர் பட்டர். இவரவதார திருநக்ஷத்திரம் வைகாசிமாசம் அநூரதம். அவதாரஸ்தலம் திருவரங்கம் பெரியகோயில். இவர் ஹாரீதகோத்ரோத்பவர். இவர் ஸ்ரீரங்கநாதப்ரஸாதலப்தர், இவரருளிச்செய்த ப்ரபந்தங்கள் தத்வரத்நாகரம், ஸஹஸ்ரநாம பாஷ்யம். அஷ்டச்லோகி. ப்ரணவவிவரணம். ஸ்ரீகுணரத்நகோசம்,ஸ்ரீரங்கராஜஸ்தவம். க்ரியாதீபம். லக்ஷ்மீகல்யாணம் இத்யாதி. இவர் ச்ரிங்கேரி மடத்தில் ஸ்ரீவேதாந்தியென்று ப்ரஸித்தரான மாதவோபாத்யாயனை வாதத்திலேஜயித்துத்திருவடிகளிலே யாச்ரியிப்பித்துக்கொண்டு நஞ்சீயரென்னும்படி தர்சனோபகாரகராக்கினர். இவர் திருநாமம்-பட்டர்,பெரியபட்டர், ஸ்ரீபராசரபட்டர். ஸ்ரீரங்கநாதபட்டர், வேதாந்தாசார்யர், வேதாந்தியைவெல்லும் விரகர். இவர் வைபவம் எழுதிமுடியாது. இவர் தனியன் “ శ్రీపరాశర భట్టార్యేత్యాది” இது நஞ்சீயரருளிச்செய்தது. இவர்திருவடிகளிலே யாச்ரயித்தவர் நஞ்சீயர். இவருடைய வவதாரகாலம் பங்குனிமாஸம் உத்திரம். அவதாரதேசம் மேல்நாடு. இவரருளிச்செய்தப்ரபந்தங்கள்:-திருவாய்மொழிக்குஒன்பதினாயிரப்படி வ்யாக்யானம். திருப்பாவைக்கு ஸ்வாபதேசவ்யாக்யானம். கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்யானம் శ్రీసూక్తభాష్యం. இத்யாதி. இவர் திருநாமம்-வேதாந்தவேத்த்யர். நஞ்சீயர் இத்யாதி. இவர் திருநாமம் నమో వేదాంత వేద్యాయేత్యాది. இது நம்பிள்ளையருளிச்செய்தது. இவர் திருவடிகளிலே யாச்ரயித்தவர் நம்பிள்ளை. இவர் அவதாரகாலம் கார்த்திகைமாஸம், க்ருத்திகாநக்ஷத்திரம். அவதாரதேசம் நம்பூரென்கிற கிராமம். இவர்திருநாமம் :—நம்பூர்வரதராஜன், நம்பிள்ளை, திருக்கலிகன்றிதாஸன், கலிவைரிதாஸபாதர்,இத்யாதி. இவர் செய்தருளின ப்ரபந்தங்கள்-நம்பிள்ளை ரஹஸ்யம். திருவிருத்தஸ்வாபதேசவ்யாக்யானம். இவர் துன்னுபுகழ்க்கந்தாடை தோழப்பராலேயுலகாரியனென்றுதிருநாமம் சாற்றப்பட்டிருப்பவர். இவர் தனியன் వేదాంత వేద్యామృతేత్యాది. இது பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்தது. இவர் திருவடிகளிலேயாச்ரயித்தவர்வடக்குத் திருவீதிப்பிள்ளை. இவரவதாரகாலம் ஆனிமாஸம் ஸ்வாதிநக்ஷத்

திரம். இவரவதாரஸ்தலம்.கோயில்இவரருளிச்செய்தப்பிரபந்தம்-அஷ்டாக்ஷரதிபிகை. கத்யத்ரயத்திற் கொருவ்யாக்யானம்,திருவாய்மொழிக்குமுப்பத்தாராயிரப்படிவ்யாக்யானம், இத்யாதி. இவர்திருநாமம்வடக்குத்திருவீதிப்பிள்ளை. ஸ்ரீக்ருஷ்ணபாதர். இவர்முடும்பைக்குலம். ஸ்ரீவத்ஸகோத்ரம். இவர்தனியன் శ్రీకృష్ణ పాద పాదాబ్జే. இத்யாதி. இதுலோகாசார்யரருளிச்செய்தது.

இவருக்குக்குமாரராய் இவர்திருவடிகளிலேயாச்ரியித்தவர்பிள்ளைலோகாசார்யர். இவர்திருநக்ஷத்திரம் அற்பிசியில் திருவோணம்.இவரருளிச்செய்தப்ரபந்தங்கள்-அஷ்டாதசரஹஸ்யங்களும், மற்றும்ரஹஸ்யங்களும். இவர்தனியன் లోకాచార్యాయగురవే త్యాది. இவர் பன்னீராயிரந்திருமுடிக்காய் திருத்தினமஹாவிப்லவத்திலே நம்பெருமாளுக்குத் திருமேனிக்காவலாய், காடும்மலையுந் துடர்ந்து நோக்கினர். இவர்திருவடிகளிலே யாச்ரயித்தவர் திருவாய்மொழிப்பிள்ளை. இவரவதாரஸ்தலம் குந்திநகரம். இவருக்குத்திருநாமம் திருவாய் மொழிப்பிள்ளை. திருமலையாழ்வார். ஸ்ரீசைலேசர். சடகோபதாஸர். இவர்திருமலையிற் காடுவெட்டி நாடாக்கி ராமானுஜசதுர்வேதிமங்கலங்கட்டிவைத்து ராமானுஜனுக்குத் தனிக்கோயில் கட்டிவைத்து, ஆழ்வார்ஸன்னிதிக்கு ஜீர்ணோத்தாரணம் பண்ணிவைத்து, ஆழ்வாரையுமெழுந்தருளப் பண்ணிவைத்தார். இவர்செய்தருளினப்ரபந்தம் பெரியாழ்வார் திருமொழிக்கு ஒருவ்க்யாயானமும் ஸ்ரீவசனபூஷணத்திற்கொருவ்யாக்கியானமும் வ்யாப்த்யநுஸந்தானமென்கிற க்ரந்தமும். இவர்தனியன் నమశ్శ్రీశైలనాథాయేత్యాది. இது மணவாளமாமுனிகளருளிச்செய்தது.

இவருடைய திருவடிகளிலே யாச்ரயித்தவர் மணவாளமாமுனிகள். இவருடையவவதாரகாலம் கலியுகத்தில் நாலாயிரத்துநூற்றெழுபத்தொன்றுக்குமேல் செல்லாநின்றுள்ள ஸாதாரணவருஷம்அற்பிசிமாஸம் சுக்லபக்ஷத்தில் மூலநக்ஷத்திரம். அவதாரஸ்தலம்-திருநகரி. இவர்திருநாமம்-மணவாளமாமுனி, சடகோபஜீயர், யதீந்திரப்ரவணர், ரம்யஜாமாதேத்யாதி. இவர்தனியன் ஸ்ரீசைலேசேத்யாதி ப்ரஸித்தம். இதுபெரியபெருமாளருளிச்செய்தது.இவ்வர்த்தம்மேலேஸ்புடமாம்.

இவர்செய்தருளிய ப்ரபந்தங்கள்-ஸ்ரீவசனபூஷணவ்யாக்யானமும்,ஆர்த்தியும்,உபதேசரத்னமாலையும், திருவாய்மொழி நூற்றந்தாதியும்,யதிராஜவிம்சதியும்,முமுக்ஷுப்படிவ்யாக்யானமும்,தத்வத்ரயத்திற்குவ்யாக்யானமும், திருவாராதனக்கிரமமும், கீதாதாத்பர்யதீபமும்,பெரியாழ்வார்திருமொழிக்கு வ்யாக்யானமும்.நூற்றந்தாதியுரையும், முப்பத்தாறாயிரப்படிக்குப்ரமாணத்திரட்டும்,ஞானஸாரவ்யாக்யானமும், ப்ரமேயஸார வ்யாக்யானமும், ஸப்தகாதாவ்யாக்யானமும். இன்னுமுண்டாகிற் கண்டுகொள்வது. இவர்திருவடிகளிலே அஷ்டதிக்கஜங்களாச்ரயித்தார்கள். இவர்நியமனத்தினாலே ஸப்தகோத்ரவ்யவஸ்தைநடந்துவருகிறது. இதின்விஸ்தாரம் ஸ்வாவஸரத்திலேயாகிறது. இவர்சேஷாம்சம். இவ்வர்த்தத்தில் దేవ శ్రీమాన జని సప్తన స్నా, ములజా ము. తో ఔయా నిలో -

ద్రోయ స్తదనుమహితో రాఘవస్యానుజో భూత్ । భూత్వా భూయో వరవరముని భూయసా భాసమానో రక్షత్యస్మాన్ రఘుకులపతేరాశ్రితో భద్రపీఠమ్. என்றுத மக்குத் திருவாராதனமான சக்ரவர்த்திதிருமகனுடைய கோவிலாழ்வாரிலே யெழுந்தருளியிருக்கிற திருவநந்தாழ்வான் முன்புமணவாளமாமுனிகளாய், பின்புமாறி இளையபெருமாளாய், பின்னையுமதுமாறி மணவாளமாமுனிகளாக பரமப்ராமாணிகரான வெரும் பியப்பாவுக்கு ஸாக்ஷாத்கரிப்பித்த ப்ரத்யக்ஷ ப்ரமாணமும், ஒருஸாத்விக வ்ருத்தை பலகணியில் யோகவேளையில் திருவநந்தாழ்வானாக வெழுந்தருளியிருந்தமையை ப்ரத்யக்ஷித்தாளாகையாலே யந்த ப்ரத்யக்ஷப்ரமாணமும், నిత్యం పత్యుః పరిచరణతో వణత్రోనిర్మలత్వాత్ వృత్త్యా వాచాం విబుధసరితశ్చాతురీముద్గిరంత్యా। శేషశ్శ్రీమానితి రఘుపతేరన్తరేణాపివాణీం என்கிற வநுமான ப்ரமாணமும், உத்தமநம்பியைக்குறித்துபெரியபெருமாள் திருவநந்தாழ்வானைத்தொட்டுக்காட்டி நம்மணவாளமாமுனிவரைநந்திருவநந்தாழ்வானாக வறியுமென்று ப்ரதமாப்தனாகையாலே யவரருளிச்செய்த ஆப்தவாக்யமான சப்தப்ரமாணமுமாகிறப்ரத்யக்ஷானுமானசப்தங்கள் மூன்றும் ப்ரமாணமென்று கண்டுகொள்வது. இவற்றுக்கஸித்தி சங்கிக்கில் தூப்பல் பிள்ளையினுடைய கண்டாவதாரத்தில் ப்ரமாணமான உபபத்யாதிகளுக்கு மஸித்திசங்கிக்க ப்ரஸங்கிக்கும். அதற்கு பாதக (బాధక) ப்ரமாணமில்லையாகையலே ஐதிஹ்யத்தாலு முபபத்தியாலும் ஸித்திக்குமென்றில் அதுப்ரக்ருதத்திலும் துல்யம். அதுபுராணஸித்த மென்றில் அந்தபுராணம் ச்ரத்தாஜாட்யகல்பிதமென்றுமிடம் தத்ப்ரதிபாத்யரரான தூப்பிற்பிள்ளையினுடைய ஸூக்தியாலே ஸித்தம். இதுவும்மேலேவ்யக்தமாம். ஆகையாலே யபாதித (అబాధిత)ங்களான வைதிஹ்யத்தாலும் உபபத்திகளாலும் தத்ததவதாரங்களைக் கொள்ளவேணும். నాదేవాంశో దదాత్యన్నం. இத்யாதிகளுமுண்டிறே. இவர் கோயிலிலே ஸகலவிதகைங்கர்யமுஞ்செய்தருளி திருநகரியிலே ஆழ்வார் ஸன்னிதியிலே அழகியமணவாளன் திருமண்டபம்முதலான வனேககைங்கரியங்களுஞ் செய்தருளினர். இதனுடைய விஸ்தரம் பருக்ரந்தங்களிலே கண்டுகொள்ளுவது. இது ப்ரசுரமான வாச்ரயணகுருபரம்பரை. இன்னமும் நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வாதிகேஸரியழகிய மணவாள ஜீயர், வாதிகண்டீரவர், இத்யாதியாக வெகுபரம்பரையுமுண்டு. அதிலேபெரியவாச்சாம்பிள்ளை யருளிச்செய்தது பெரியாழ்வார்திருமொழிமுதல் நூற்றந்தாதியளவான வங்கோபாங்கபாவேநவர்த்திக்கிற விருபத்திநாலுதிவ்ய ப்ரபந்தங்களுக்கும் வ்யாக்யானங்களும், பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை முதலான ரஹஸ்யக்ரந்தங்களும், ஸ்ரீராமாயணாதிகளிலே சிலதனிச்லோகங்களுக்கு வ்யாக்யாநங்களும், அபயப்ரதாநவ்யாக்யாநமும், வராஹசரமச் லோகவ்யாக்யாநமும், ஸ்தோத்ரரத்நசதுச்லோகீகத்யத்ரயங்களுக்கு வ்யாக்யானங்களும், இன்னுமனேகங்களுமுண்டு. இவர் திருநாமம். க்ருஷ்ண ஸமாஹ்வயர். க்ருஷ்ணபாதர். இவர்திருநக்ஷத்ரம்-ஆவணிமாஸம் ரோஹிணீநக்ஷத்ரம். இவர்தனியன் శ్రీమత్కృష్ణసమాహ్వయేతాద్యది.

இது நயினாராச்சாம்பிள்ளையருளிச்செய்தது. இவர்புரச்சிகர். அநந்தரம்இவர்திருக்குமாரராய் இவர்திருவடிகளிலே யாச்ரயித்தவர் நயினாராச்சாம்பிள்ளை. இவர்செய்தருளினப்ரபந்தம். ஜ்ஞானார்ணவம், முமுக்ஷூபாவளி, தத்வ ஸங்க்ரஹம், சரமோபாயநிர்ணயம் முதலாகப்பலவுமுண்டு. இவர்திருநாமம்-அபயப்ரதராஜபுத்ரர், நயினாராச்சாம்பிள்ளை யித்யாதி. இவர் தனியன் ச்ருத்யர்த்தஸாரஜநகமித்யாதி. இதுவாதிகேஸரியழகியமணவாளஜீயரருளிச்செய்தது. அநந்தரம் இவர்திருவடிகளிலே யாச்ரயித்தவர் வாதிகேஸரியழகிய மணவாளஜீயர். இவர்செய்தருளின ப்ரபந்தங்கள்-திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி, த்ரமிடோப நிஷத்தாத்பரியஸாரம், தத்வதீபம், தீபஸங்கிரஹம், தீபப்ரகாசம், ரஹஸ்யாம்ருதம், புத்யாத்மசிந்தை, கீதாவ்யாக்யாநம். உடையவர் விஷயமாக ஒருக்ரந்தம், ந்ருஸிம்மாஷ்டகம். இவர் தனியன் அஸ்து த்வ்யர்த்தமித்யாதி, ஸுந்தரஜாமாத்ருமுநேரித்யாதி. அனந்தரம் இவர் திருவடிகளிலே யாச்ரயித்தவர் வாதிகண்டீரவர். திருமாலையாண்டான் திருவம்சத்திலவர். இவர்செய்தருளின ப்ரபந்தம்ரஹஸ்யத்ரயஸாரமும் இன்னமும் க்ரந்தங்களுமுண்டு.

இன்னமும் நம்பிள்ளை,பெரியவாச்சான்பிள்ளை, ஸ்ரீரங்காசார்யர் கேசவாசார்யர், ஸ்ரீநிவாஸாசார்யர், ஆதிவண்சடகோபஜீயர். நாராயணஜீயர், பராங்குசஜீயர், சடகோபஜீயர், பராங்குசஜீயர்முதலான பரம்பராவிசேஷமுமுண்டு. இது அஹோபிலமடஸம்ப்ரதாயம். இவர்கள்செய்தருளின ரஹஸ்யத்ரய ஜீவாதுமுதலானஷஷ்டிப் ரபந்தங்களும், புருஷார்த்த (ஸுதாநிதி.)சுதாநிதியென்கிற ஸ்மிருதி நிபந்தநக்ரந்தமும், புருஷகாரமீமாம்ஸை,மிமாம்ஸாமணிதீபம், முதலானவை பலவும் பெரியவாச்சாம்பிள்ளை திருவுள்ளத்தை யநுஸரித்திருக்கும்.

மணவாளமாமுனிகள், திருவாய்மொழிப்பிள்ளை, குருகுலோத்தமதாஸர், பிள்ளைலோகாசார்யர், வடக்குத்திருவீதிப்பிள்ளை இத்யாதி. இது ரஹஸ்யக்ரந்த ஸம்ப்ரதாய குருபரம்பரை.

ஸூத்திரகாரரானவ்யாஸபகவான், அவர் சிஷ்யர் ப்ரும்மநந்தி, நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி ஆளவந்தார், பெரியநம்பி எம்பெருமானர், திருக்குருகைப்பிரான் பிள்ளான், எங்க ளாழ்வான். நடாதூர் பெரியம்மாள், கிடாம்பியப்பிள்ளார், வேதாந்தாசார்யர், ப்ரதிவாதிபயங்கரமண்ணன். இது ப்சுரமான ஸ்ரீபாஷ்யஸம்ப்ரதாயகுருபரம்பரை.

ஆழ்வான், ஆண்டான், ஆச்சான், அநந்தாழ்வான்,ஆஸுரிபெம்மான் முதலானருடைய வம்சஸ்த்தருக்குஸ்வவம்ச்யரில் ஸ்ரீபாஷ்யஸம்ப்ரதாயகுரு பரம்பராவிசேஷங்களுமுண்டு. இதில் கிடாம்பியாச்சான் திருவம்சஸ்தரான கிடாம்பிநயினர் பக்கலிலே மணவாளமாமுனிகளுக்கு ஸ்ரீபாஷ்யம். நடாதூர் பெரியவம்மாள், ஸுதர்சனபட்டர், வேதாந்தாசார்யர் இத்யாதிச்ருதப்ரகாசிகாஸம்ப்ரதாய குருபரம்பரை.

இவர்களில் பிள்ளான் திருவாய்மொழிக்கு ஆராயிரப்படியும், பரமரஹஸ்யமும், அருளிச்செய்தார். எங்களாழ்வான் புராணரத்நவ்யாக்யாநமும், ஸாரார்த்தசதுஷ்டயமென்கிற ரஹஸ்யமும், ஸங்கதி மாலையும், அருளிச்செய்தார். இவருக்கு ஸ்ரீவிஷ்ணு சித்தரொன்று திருநாமம். இவர்புரச்சூடர். பெரியவம்மாள் தத்வஸாரமும்,ப்ரமேயமாலை,ஸாரார்த்த சதுஷ்டயகாரிகைகள், ஸத்ஸங்காதித்யாதிச்லோகத்ரயமும், அருளிச்செய்தார். அப்புள்ளார் ஸ்ரீபாஷ்யத்திற்கு ஒருவ்யாக்யாநமும், ந்யாயகுலிசம்முதலானவையுமருளிச்செய்தார். வேதாந்தாசார்யர் சதாதிகக்ரந்தமருளிச்செய்தார்.

நயினாராசார்யர் அநிர்வசநீயகண்டனம், விரோதபரிஹாரம், ஆசார்யமங்களம்,முதலானவையருளிச்செய்தார்.ப்ரதிவாதிபயங்கரமண்ணன். ஸ்ரீபாஷ்யத்துக்கொருவ்யாக்யாநமும், ப்ரபத்தியோககாரிகைகளும், பாகவதவ்யாக்யாநமும், சுகபக்ஷீயம், సుబాలోపనిషద్వివరణం இன்ன மனேகக்ரந்தங்களுமருளிச்செய்தார். இந்தஸ்ரீபாஷ்யஸம்ப்ரதாயபரம்பரைகளில் ஷடர்த்தஸங்க்ஷேபம், ப்ரக்ஞாபரித்ராணம், மாநயாதாத்ம்யநிர்ணயம், ப்ரபதநகவசம், ந்யாயஸுதர்சனம், முதலானவை யருளிச்செய்தவர்களுமுண்டு.

இதித்ரிம்சத்ப்ரச்ன்யாம் குருபரம்பரா

விஷயத்விதீய ப்ரச்நோத்தரம்.

இப்படி யுபயஸம்ப்ரதாயகுருபரம்பரா ப்ரஸ்தாவத்தாலே ததப்யுபகதார்த்தங்களில் அஷ்டாதசார்த்தமான பக்ஷபேதத்தை அஷ்டாதசஸம்வாதமென்று வ்யவஹரிப்பார்களாகையாலே தத்விஷயத்ருதீய ப்ரச்னத்திற்குத்தரம் எங்ஙனே? யென்றில் பகவத்க்ருபை ஸஹேதுகையென்று வேதாந்தாசாரியருடையபக்ஷம்; அது நிர்ஹேதுகையென்று லோகாசாரியருடையபக்ஷம். க-மோக்ஷரூபபலத்தில் பேதமில்லையென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம்; அதிகாரிபேதேநபேதமுண்டென்று லோகாசார்யருடையபக்ஷம். உ. கர்மக்ஞானங்களுக்கு பக்த்யங்கத்வமல்லது ஸ்வதந்த்ரஸாதநத்வமில்லையென்று*வேதாந்தாசார்யருடைய பக்ஷம். அவற்றுக்கு ஸ்வதந்த்ரஸாதநத்வமும் அதிகாரிகளுடைய வபிப்ராய பேதேந உண்டென்று லோகாசார்யருடையபக்ஷம். ௩-ஸ்ரீக்குஸ்வரூபதோவிபுத்வமுண்டென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம். அவளுக்குஸ்வரூபதோவிபுத்வமில்லை; ஜீவாந்தரவத் அணுத்வமேயாகிலும் சக்திவிசேஷத்தாலேயுகபத் அனேகத்ரஸ்திதியும் விக்ரகவ்யாப்தியு முண்டென்று லோகாசார்யருடையபக்ஷம். ௪-பிராட்டிக்கு மோக்ஷோபாயத்வமுண்டென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம்; அதில்லை, புருஷகாரத்வமேயுள்ளதென்று லோகாசார்யருடையபக்ஷம். ௫-வாத்ஸல்யம் தோஷாதர்சனமென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம். அது தோஷபோக்யத்வமென்று லோகாசார்யருடையபக்ஷம்.௬-தயை, பரதுக்கநிராகரணேச்சாருபையென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம். அது பரதுக்கதுக்கித்வரூபையான பரதுக்காஸஹிஷ்ணுதையென்று லோகாசார்யருடையபக்ஷம். எ.

ப்ரபதநம் பக்திவன்மோக்ஷோபாயமென்று வேதாந்தாசார்யருடை யபக்ஷம் அது ஸித்தோபாயாதிகாரிவிசேஷணுதி ரூபமென்னு லோகாசாரியருடைய பக்ஷம். அ - ப்ரபத்தி அகிஞ்சனமாத்ராதிகாரையென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். அது ஸகிஞ்சனுகிஞ்சன ஸாதாரண்யேனஸ்வரூப யாதாத்ம்யக் ஞானயுக்த வதிகாரையென்று லோகாசார்யருடையபக்ஷம். ௯ - ப்ரபத்திவிதியிலே உபாயாந்தரத்யாகவசநம் அசக்திப்ராப்தத்யாகாநுவாதமென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். அது உபாயாந்தரங்கள் ஸ்வரூபவிருத்தங்களாகையாலே ப்ராப்த்யங்க பூதத்யாக விதிரூபமென்று லோகாசார்யருடைய பக்ஷம். ௧௦ - உபாயாந்தரம் ஸ்வாதிகாரிகளுக்கு அனுரூபமென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம். அது பரதந்த்ர ஸர்வசேதநனுக்கு ஸ்வரூபவிருத்தமென்று லோகாசார்யருடைய பக்ஷம். ௧௧ - ப்ரபன்னனுக்கு விஹித கர்மானுஷ்டானம் பகவத்ப்ரீத்யர்த்தம் பகவதாக்ஞாமூலகமென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம். அது ஆசாரு சம்ஸயமூலகமென்று லோகாசார்யருடைய பக்ஷம். ௧௨. ஆனுகூல்யாதி பஞ்சகம் ப்ரயோஜநாதிகளைப்போல் ப்ரபத்யங்கமென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். அது அவகாத (ఆవఘాత) ஸ்வேதம் போலே ஸம்பாவிதஸ்வபாவமென்று லோகாசார்யருடையபக்ஷம். ௧௩-ப்ரபத்தி நியமேந அபூர்வஸ்தாநீய ப்ரஸாத ஹேதுவென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம். அது பரதப்ரபத்தியிலே வ்யபிசாரதர்சனத்தாலே ப்ரஸாதஹேதுவன்றென்று லோகாசார்யருடைய பக்ஷம். ௧௪-ப்ரபன்னனுக்கு மஹாபாதகம் ப்ரஸக்தமானுல் அகிஞ்சன விஷயத்தில் புநஃப்ரபதநம்ப்ராயச்சித்த மென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். பூர்வக்ருதப்ரபத்தி ஸ்மரணம் தத்ப்ராயச்சித்தமென்று லோகாசர்ர்யருடைய பக்ஷம். ௧௫-உத்தமாதிகாரியான நிக்ருஷ்டவர்ணப்ரபன்னன் வர்ணுச்ரமாநுகுணமாக வாங்மாத்ரேண பூஜ்யனென்று வேதர்ந்தாசார்யருடைய பக்ஷம். அவன் குலதெய்வத்தோடொக்க பூஜ்யனென்று லோகாசார்யருடைய பக்ஷம். ௧௬ - அணுபரிமாணஜீவஸ்வரூபத்திலே விபுஸ்வரூபனுன ஈச்வரனுக்கு பரிஸமாப்யவ்ருத்தியாவது அணுவஸ்துவிலேயிருந்துகொண்டே ஸர்வநிர்வஹண சக்தியுக்தனுயிருக்கையென்று வேதாந்தாசார்யருடையபக்ஷம். க்ருசமஹத்தீர்க்கஹ்ருஸ்வங்களான கடவ்யக்திகளிலே கடத்வஜாதி பரிஸமாப்யவர்த்திக்குமாப்போலே ஈச்வரன் பரிஸமாப்ய வர்த்திக்குமென்று லோகாசார்யருடையபக்ஷம். ௧௭ - கைவல்யம் அநித்யமென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். அது நித்யமென்று லோகாசார்யருடையபக்ஷம். ௧௮. இதொருப்ரகாரம் அஷ்டாதசவாதம்.

ப்ரகாராந்தரமுமுண்டு. எங்ஙனேயென்றில்-ஈச்வரலாபம் சேதநனுக்கு பலமென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். உடைமையினுடைய லாபம் உடையவனுக்காகையாலே சேதநலாப மீச்வரனுக்கு பலமென்று லோகாசார்யருடையபக்ஷம். ௧ - வ்யாப்தி, தசதிக்ஸம்பந்த ரூபையென்று வேதாந்தாசார்யருடை பக்ஷம். அகடிதகடனு ஸாமர்த்யத்தாலே அணுக்களிலே அந்தர்வ்யாப்தியென்று லோகாசார்யருடையபக்ஷம். ௨ - என் றிதொருபிரகாரம். இங்ஙனுமன்றிக்கே ப்ரணவத்தை யொழியவே திருமந்த்ரத்திற்கு அஷ்டாக்ஷ

ரத்வமென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். ஸ்வரரஹித ப்ரணவத்தோடே கூடியே அஷ்டாக்ஷரத்வம் ஸர்வாதிகாரமென்று லோகாசார்யருடைய பக்ஷம். க. நித்யமுக்தர்களுக்கு ஸ்ருஷ்ட்யாதி சக்தியில்லையென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். பகவந்நியமனமடியாக வவர்களுக்கும் ஸ்ருஷ்ட்யாதிசக்தியுண்டென்று லோகாசார்யருடையபக்ஷம். உ-கைவல்யாநுபவாநந்தரம் பகவதநுபவ முண்டென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். அதில்லையென்று லோகாசார்யருடைய பக்ஷம். ங—கைவல்யஸ்தாநம் ப்ரக்ருதி மண்டலத்திலே யென்று வேதாந்தாசார்யருடைய பக்ஷம். அதற்குப் புறம்பென்று லோகாசார்யருடையபக்ஷம். ச. இந்த நாலுபேதங்களையுங் கீழ்ச்சொன்ன பதினெட்டிலே பதினாலு பேதங்களையுங் கூட்டி அஷ்டாதசபேதமாக்கி ஒருப்பிரகாரமாகச் சொல்லுவர்கள். இன்னமும் ஸ்தோத்ரரத்ந சதுச்லோகி கத்யத்ரயாதிகளுக்குப் பெரியவாச்சாம்பிள்ளை செய்தருளின வ்யாக்யாநங்களோடே வேதாந்தாசார்யர் செய்தருளின வ்யாக்யானங்களுக்கு பகு விரோதங்களுண்டாய் தத்தத் பேதங்கள் பலவுமுண்டு. இது விஸ்தரபயத்தாலே யெழுதித்திலோம். இவற்றிற் கீழ்ச்சொன்ன பதினெட்டிலே ப்ரதமத் விதீய ஸப்தம தசமைகாதச த்வாத சாஷ்டாதசங்கள் வேதாந்தாசார்யருக் கபிமதமென்று அவர் ஸ்ரீஸூக்திகளிலே லபிக்கையாலே சில வாதங்கள் இவராலே கண்டிதங்களென்று சொல்லுகிறது. ரஹஸ்யத்திரயத்திற்கும் ச்ருதீதிஹாஸ புராணங்களுக்கும் ஸ்ரீபாஷ்யாதிகளுக்கும் புத்தி வைசித்ரியத்தாலே அர்த்தாந்தரவர்ணநம் பண்ணுகையாலே இந்த பேதங்களுண்டாய்த்தன.

## இதித்ரிம்சத்ப்ரச்நயாம் த்ருதீய ப்ரச்நோத்தரம்.

இவர்களுக்கு அந்யோந்ய விரோதம் ஆர்நாளிலே என்னகாரணத்தினாலே யுண்டாய்த்ததென்றில்:—உபயஸம்ப்ரதாய கூடஸ்தரான பிள்ளான் செய்தருளின வாறாயிரப்படி பரமரஹஸ்யம் முதலானவற்றை யடியொற்றிக்கொண்டு பெரியவாச்சான்பிள்ளை லோகாசார்யர்கள் செய்தருளின க்ரந்தங்களை யநுவதித்து தூஷிப்பதாக வேதாந்தாசார்யர் ப்ரவர்த்திக்க, வது பொறாமல் அதிப்ரபலராய் அதிவாக்மியான நயினாராச்சாம்பிள்ளை அத்தைப் பரிகரித்து அவர்க்ரந்தங்களை யநுவதித்து தூஷிப்பதாக க்ரந்தங்களைச் செய்ய, வாதிகேசரியழகியமணவாளஜீயர் முதலானரும் அப்படியே செய்ய,லோகாசார்யாநுஜராய் பெரியபெருமாளுடைய வவதாரமான வழகிய மணவாளப்பெருமாள் நயினாரும் வேதாந்தாசார்யரோடே ப்ரத்யவஸ்தாநம்பண்ணி வாதங்களுங் க்ரந்தங்களுஞ் செய்தருள, ஒருநாள்வரையிலே நம்பெருமாள் புறப்பாட்டிலே நயினாருக்கும் தூப்பில் பிள்ளைக்கும் சில ப்ரதிக்ஞைகள் நடக்க, நயினாரும் பெருமாளெழுந்தருளுகிற நாலுவீதியிலும் நாலுப்ரகரணமாக பரமாசார்யரான பராங்குசருடைய ஹ்ருதயத்தை யுபந்யஸிக்க நாலுப்ரகரணத்திற்கும் நாலு திருமாலைகள் கழல, அவற்றை நம்பெருமாள் நயினாருக்கு ஸாதித்தருளி தூப்பில்பிள்ளையை முனிந்தோமென்ன, தூப்பில்ப்பிள்ளையும் மேல்நாட்டிற் கெழுந்தருளி சிலகாலங் கழிந்தபின்பு மீண்டும் கோயிலுக் கெழுந்தருளி லோகாசார்ய

ருடைய ஹ்ருதயாநுஷ்டாநமாக சில க்ரந்தங்களைச் செய்தருளினரென்று சொல்லுவர்கள். தூப்பில்பிள்ளை பெரியவாச்சாம்பிள்ளையினுடைய வைபவத்தை ஸ்வப்நத்திலேகண்டு அநுதப்தராய் ஆச்சாம்பிள்ளை ஸந்நிதியிலே சென்று தேவரீர் திருவுள்ளத்திற்குப்புறம்பாக சிலவற்றைப்ரவர்த்திப்பித்தேன்;அபசாரப்பட்டேனென்று க்ஷமைகொள்ள வாச்சாம்பிள்ளையு முகந்தருளித்திருப்பாணாழ்வாரைத் திருவாராதனமாகப் பெறும்படி நியமித்தருளி விடைகொடுக்க தூப்பில்பிள்ளையு மன்றுமுதல் அவர் திருவுள்ளத்திற் கநுகுணமாக சில க்ரந்தங்களைச் செய்தருளினரென்று சொல்லுவார்கள். இது தூப்பில்பிள்ளை யீடுபாட்டிலே வ்யக்தம். திருப்பாணாழ்வார் திருவாராதநமானமையும் தயாசதகந்யாஸதிலகாதிகளும் ஸம்வாதியாயிருக்கிறபடியாலே ஏகதேசாநுமதி ந்யாயத்தாலே தூப்பில்பிள்ளை யீடுபாட்டை ப்ரமாணமாகக்கொள்ளத் தட்டில்லை. அபிநவக்த்ருகக்ரந்தங்களுக்கு அந்யோந்ய விரோதத்தை யந்யதராநுகுணமாக நயிப்பித்து சமிப்பிக்கப்பார்த்தால் குகவிக்ருதவத் (శుకవిక్రుతవదస్వారస్యం) அஸ்வாரஸ்யம் வரும். வைபவவாதமென்றால் ப்ராமாண்யத்திற்குக் கொற்றையாம். ஆகையாலே திருமழிசைப்பிரானுடைய சைவவைஷ்ணவஸூக்திகளுக்குப்போலே தசாபேதேந விரோதம் சமிப்பிக்கவேணும். அதில் தசைகளுக்கு பௌர்வாபர்யநிச்சாயக (పౌర్వాపర్యనిశ్చాయకః) ஹேத்வாகாங்க்ஷையிலே ஸூத்ய సర్వార్థసిద్ధిயில் ப்ரஸித்தமான தூப்பில்பிள்ளையீடுபாட்டை நிச்சாயகமாக வவர்களுக்கும் கொள்ளவேணும்.

## இதித்ரும்சத் ப்ரச்நயாம் துரீய ப்ரச்நோத்தரம்.

வேதாந்தாசார்யர் ஸ்ரீபாஷ்யநிர்வஹணம் பண்ணினபடி யென்னென்றில்- முற்காலத்திலே கோயிலுக்கு துருஷ்கராலே விப்லவம்வர லோகாசார்யர் நம்பெருமாளுக்குத் திருமேனிக்காவலாகவலசையெழுந்தருள,துருஷ்கர் பின்தொடராமைக்காக மற்றுள்ள பன்னீராயிரம் திருநாமங்களும் இருந்தபடியே யிருந்து தங்கள் திருமேனியைக் கத்திக்கிரையாக்க வப்போது வேதாந்தாசார்யர் யௌவநஸ்தரா யிருந்தபடியாலே அபீதிஸ்தவம் అభీతిస్తవం செய்தருளித் தம்மையும் தப்பவைத்துக்கொண்டு ச்ருதப்ரகாசிகாகோசத்தையும் ரக்ஷித்து அநந்தரம் பாத்திரங்களிலே விநியோகித்தும் (అనయాభాష్యం భాష్యం) அநயாபாஷ்யம் பாஷ்யமென்கிறபடியே யம்முகத்தாலும் சததூஷண்யாதி க்ரந்தகரண முகத்தாலும் ஸ்ரீபாஷ்யநிர்வஹணம் பண்ணினர். இத்தை (శ్రుతప్రకాశికా భూమౌయేనాదౌ పరిరక్షితేత్యాదియில்) ஆசார்யமங்களத்திலே நயினாராசார்ய ரருளிச்செய்தார். இவர்விஷயமாக (శ్రీమాన్వేఙ్కటనాథార్యః) என்கிற தனியனை நயினாராசார்ய ரருளிச்செய்தார். திருவேங்கடமுடையான் ஸாதித்தருளினரென்றுஞ் சொல்லுவர்கள். இவருக்கு பட்டர் திருநாமமான வேதாந்தாசார்யரென்கிற திருநாமத்தைப் பெரியபெருமா

ள் ஸாதித்தருளினார், ஸர்வதந்திர ஸ்வதந்திரனென்கிற திருநாமத்தை ஸ்ரீ ரங்க நாச்சியார் ஸாதித்தருளினார், என்றுஞ் சொல்லுவார்கள்.

இதித்ரிம்சத் ப்ரச்ந்யாம் பஞ்சம

ப்ரச்நோத்தரம்.

வேதாந்தாசார்யர், குருபரம்பரையி லெங்கேயிருந்து பிரிவென்றில் - எம்பெருமானார், கிடாம்பியாச்சான், கிடாம்பிராமநுஜாசார்யர், ஸ்ரீரங்கராஜ குரு, கிடாம்பியப்புள்ளார், வேதாந்தாசார்யர், என்று க்ரமமாகையாலே கிடாம்பியாச்சான் வகுப்பிலே பிரிவு. அதிலிவர் திருவடிகளிலே யாச்ரயித்த வர் நயினாராசார்யரும் ப்ரம்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயரும். அதில் ப்ரம்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர் திருவடிகளிலே யாச்ரயித்தவர் வாத்ஸயவரதாசார்யர். அவ ரை யாச்ரயித்தவர் வரதவிஷ்ணவாசார்யர். அவரை யாச்ரயித்தவர் தயாதீச குருத்தமர். அவரை யாச்ரயித்தவர் ந்ருஸிம்மார்யர். அவரை யாச்ரயித்தவர் வரதார்யர். அவரை யாச்ரயித்தவர் பராங்குசார்யர். அவரை யாச்ரயித்தவர் தாதாசார்யர். அநந்தரம் ராமாநுஜாசார்யர். அநந்தரம் ஸ்ரீவேங்கடார்யர். அநந்தரம் ஸ்ரீவீரராகவார்யர். அநந்தரம் ஸ்ரீரங்கபதி தேசிகர். அநந்தரம் ஸ்ரீ ரங்கநாதார்யர். அநந்தரம் ஸ்ரீதத்வஸித்தாஞ்சநநிர்ணமாத்ரு வேதாந்தராமாநு ஜஜீயர். அநந்தரம் கோபாலாசர்யர். அநந்தரம் வேதாந்தராமாநுஜ ஜீயர். இவர்களுக்குள் சிலருக்கு தப்தசங்ராங்கனமும் க்ரந்தமுமுண்டு. சிலருக்கு க்ரந்தமாத்ரம் வேதாந்தாசார்யர் ஸம்ப்ரதாயத்திலே யென்று சொல்லுவார் கள். ப்ரம்மதந்த்ர ஜீயர்துடங்கி ஜீயர்கள்க்ரமமாகவந்த மடம் ப்ரம்மதந்த்ர ஜீயர் மடமென்று சொல்லுவர்கள். வேதாந்தாசார்யர் தம்முடைய சிஷ்யரா ன ப்ரம்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயருக்கு தம்முடைய திருவாராதநமான ஸ்ரீஹய க்ரீவரை யெழுந்தருளப்பண்ணிக் கொடுத்தாரென்று சொல்லுவர்கள். இவ ருக்கு பிதா அநந்தாசார்யர். அவருக்கு பிதா புண்டரீகாக்ஷயஜ்வா. வேதாந் தாசார்யர்குடி தூப்பில். அவதாரஸ்தலம் பெருமாள்கோவில். அவதரித்தவ ருஷம் கலியுகத்தில் சகாப்தம் ஆயிரத்து நூற்றுத் தொண்ணூரத்திரண்டாவ தான சுக்லவர்ஷம். திருநாட்டிற் கெழுந்தருளினது சகாப்தத்தில் ஆயிரத்தி யிருநூற்றி முப்பத்திரண்டாவதான ஸௌம்யவருஷம்.

இதித்ரிம்சத் ப்ரச்ந்யாம் ஷஷ்ட

ப்ரச்நோத்தரம்.

இவர்களுக்கும் அவர்களுக்கும் ஆசாரபேதம் வந்தபடி யென்னென்றி ல்-ஸ்மிருதி வெவ்வேறு பட்டிருக்கையால் அநுஷ்டாந விகல்பங்களுண்டாய் அதிகாரிகளுடைய ருசிபேதத்தாலே சிலர் சிலவற்றை யநுஷ்டிப்பதும், சிலர் சிலவற்றை யநுஷ்டிப்பதுமாயிருக்கும். வஸ்துநி விகல்பங்களுண்டாகாமையா லே தத்வவிஷயத்தில் அந்யோந்யவிருத்த பக்ஷங்களில் ஒன்றையழித்தல்லது ஒன்று ஜீவியாது. அநுஷ்டாநவிஷயத்தில் தேசாதிகாரி ருசிபேதத்தாலே ஐச்சிகவிகல்பமும் வ்யவஸ்திதவிகல்பமுங்கூடும். இன்னும்ஏகப்ரமாணத்திற்கு

புத்திவைசித்ரிய ப்ரயுக்த வாக்யார்த்த வர்ணநபேதத்தாலே யநுஷ்டாந பேதமுமுண்டு. ஸத்யம்வதந்தஸ்ருதி என்கிற ஸந்யாஸி விஷயவசனத்திற்கும் சிகைவபநம் பண்ணவேணுமென்று சாங்கரமாத்வர்களும், சிகை வித்யமாநமாயிருக்கும்படி மற்றயது வபநம்பண்ணவேணுமென்று பாஸ்கரீயரும், நம்முடைய வர்களும், வாக்யார்த்தவர்ணநம் பண்ணுகையாலேயவர்களுக்குமிவர்களுக்கும் சிகித்வமுண்டாய்த்தது. அப்படியே இங்கு உபவாஸதிநத்திலேச்ராத்கரணமும் தத்த்யாகமும் வந்தது. அதில் அதத்பரசாஸ்த்ரத்தில் தத்பரசாஸ்தரம் ப்ரபலமாகையாலே ஸர்க்காதிபரபுராணாதிகளிற்காட்டில் ஆசாரபர ஸ்ம்ருதிக்கு ப்ராபல்யமுண்டென்று ஸ்ம்ருத்யுக்தப்ரகாரேண உபவாஸாதிதினத்திலும் மாத்ருபித்ருச்ராத்தம் பண்ணவேணுமென்று வேதாந்தாசார்யருக்கு தாத்பர்யம். வைஷ்ணவாவைஷ்ணவஸாதாரணாசாரபர ஸ்ம்ருதியில் காட்டில் அநந்யபஜநப்ரவ்ருத்த வைஷ்ணவாசாரபரபுராணாதிகளுக்கு ப்ராபல்யம் தத்பரசாஸ்த்ரந்யாய ஸித்தமாகையாலே தாத்ருச புராணாத்யுக்தமாகையாலும் தத்ததநுகுண ஸ்ம்ருதிவிஹிதமாகையாலும் உபவாஸதினத்தில் ச்ராத்தத்யாகமென்று தென்னாசார்யர்களுக்குத்திருவுள்ளம். இன்னமும் பகவத்வந்தநத்தில் ஸக்ருத்வமும் அநேகத்வமுமாகிறபேதமும் வைச்வதேவவிஷயத்திலும் ப்ரபத்தி யோகத்திலும் பேதமுண்டாயிருக்கும். க்ருஹாராதநத்தில் கண்டாநாதம் கூடுங் கூடாதென்றும் ஸமுத்ரஸ்நாநம்வேணும் வேண்டாவென்றும் இத்யாதிகள் பலவுமுண்டு. விதவாகேசகண்டனம் அதிகாரிவிசேஷத்தில் கூடாவென்றுமிடம் ஸதாசாரஸ்ய ஸம்ப்ரூதம் இத்யாதிவசநங்களைக்கொண்டுவடகலையார்பண்ணின ஸ்ரீவைகுண்ட தீக்ஷிதீயமென்கிற ஸ்ம்ருதி நிபந்தநக்ரந்தத்திலே ஸ்பஷ்டம். இவ்வுபயாசாரங்களுக்கும் ப்ரமாணோபபத்திகளை விஸ்தரபயத்தாலே எழுதித்திலோம்.

இதித்ரிம்சத் ப்ரச்நயாம் ஸப்தம
ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் திருமண்காப்பு பேதப்ரச்நத்திற்குத்தரம். ஆசாரபேதத்திலே அந்தர்பூதமானாலும் ப்ருதக்ப்ரச்நம்பண்ணினபடியினாலே ப்ருதகுத்தரஞ்சொல்லுகிறோம். இங்கும் பூர்வோக்த ஸ்ம்ருதிவைவித்யத்தாலே ப்ரகாரபேதமுண்டு. அதில் ஹரே: பாதாக்ருதிம் என்றும், ஸபத்மம் ஹரிபாதாக்ருதிம் என்றும் ப்ரமாண வசநங்க ளிருக்கையாலே அடிப்பாதமில்லாத திருமண்காப்பை யவர்க ளநுஷ்டிக்கிறார்கள். நாஸாதாரப்ய ஸம்ஸ்ப்ருசம் பாதம் என்கிற பராசரஸம்ஹிதாவசநமாகிற உபபத்தியும், கோயிற்றிருமலை பெருமாள் கோயில் முதலானவிடங்களிலே திருக்கோலங்களிலும் கோபுரமண்டபப்ராகாராதிகளிலும் சிலாதாம்ரஸுதாரூபேண உபபாதத்தோடேகூடின ஊர்த்வபுண்ட்ரப்ரதிக்ருதிகள் பஹுகாலமாயிருக்கிற ஸம்ப்ரதாயமுமாகிய விந்த ப்ரமாணோபபத்தி ஸம்ப்ரதாயங்களாலே அடிப்பாதத்துடனே கூடத்திருமண்காப்பைத்தென்னாசார்யர்கள் அநுஷ்டிக்கிறார்கள். இன்னமும் (ஹரே: பாதாக்ரு

௰) என்கிற ஸாமாந்ய வசநத்திற்கு ( [Telugu-script text] ) என்கிற விசேஷத்திலே பர்யவஸாநமாகையாலே குண்டலீத்யாதி விசேஷண ஸாமர்த்யத்தாலே அடிப்பாதம் ஸித்தம். இப்படியே புண்ட்ரங்களிலே திர்ய க்த்வோர்த்வத்வங்களாகிற வாக்ருதிபேதமும் பஸ்மம்ருத்திகாதி ரூபமானத்ர வ்யபேதமும், ஊர்த்வாக்ருதியிலே ஸச்சித்ராச் சித்ரபேதமும், மிருத்திகாத் ரவ்யத்திலே ச்வேதபீதாதிபேதமும் ஸ்ம்ருதிவைசித்ரயத்தாலே வந்ததிறே. அப்படியே இதிலும் ருசிபேதத்தாலே யநுஷ்டாநபேதமும் வந்தது.

இதித்ரிம்சத்ப்ரச்நயாம் அஷ்டம
ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் ச்ருதப்ரகாசிகா வதரண ப்ரகாரப்ரச்நத்திற் குத்தரம் எங்ஙனேயென்றில்:-பட்டர் திருவம்சத்திலவரான வாக்விஜயபட்டர்குமார ரான சுதர்சநபட்டர்கோயில் நின்றும் சிஷ்யாநுக்ரஹார்த்தமாகவும் திவ்யதே சயாத்ரார்த்தமாகவும் தொண்டீரமண்டலத்திற் கெழுந்தருளி பெருமாள் கோயிலுக் கெழுந்தருள அங்கே அஸ்திகிரியினுடைய வடியிலே நடாதூர் பெரியம்மாள்,கிடாம்பியப்புள்ளார் முதலானுர்க்கு ஸ்ரீபாஷ்யம் நடத்தியருள அவற்றைக்கண்டு அநிதர ஸாதாரணமான அம்மாளுடைய உபந்யாஸ வை தக்த்யத்தை யநுபவித்து, அவர்ஸந்நிதியிலே தாமும் ஸ்ரீபாஷ்யம் அதிகரிப்ப தாகத் திருவுள்ளம்பற்றி தேசஸஞ்சாரந் தவிர்ந்து பன்னிரண்டு ஸம்வத் ஸரம் பெருமாள்கோயிலிலே வாஸம்பண்ணிக்கொண்டு அம்மாள் ஸந்நிதியி லே பாஷ்யம் அதிகரித்துக்கொண் டிருந்தார். இவர் உருக்கள்தோரும் உபந் யாஸ வைசித்ரயத்தை யஸங்கீர்ணமாக தரித்துக்கொண்டு மிதபாஷியாயிரு ப்பர். இவர் ஒருநாள் காலக்ஷேபத்திற் கெழுந்தருளுவதற்கு விளம்பப்பட அம்மாள், அப்புள்ளான்முதலான ஸ்ரீபாதமுதலிகள் திரண்டிருந்தவளவிலும் காலக்ஷேபம் துடங்காமல் இருக்க முதலிகள் எதற்காகவென்ன,சுதர்சநபட் டர் வரக்காணுமேயென்ன, இவர் க்ரஹணதாரணக்ஷமரன்றென்று கொ ண்டு முதலிகள் சிலவற்றை விண்ணப்பஞ்செய்ய அம்மாள், பட்டரெழுந்தரு ளின வளவிலே பட்டரோ நாம் சொன்னத்தி லேதாகிலுமக்குப் போருமாகில் ஒன்றைச்சொல்லுமென்ன எந்தவுருவிலுபந்யாஸத்தை யடியேன் விண்ணப் பஞ்செய்வதென்ன ஆகிலுருத்தொரு முபந்யஸியுமென்ன, பட்டரும் உருத் தொருமஸங்கீர்ணமாக சப்தாநுவாதத்தோடேகூட வுபந்யஸிக்க,அம்மாளும் முதலிகளும் போரவிஸ்மயப்பட்டார்கள். இப்படிபழுக்க குருகுலவாஸம்பண் ணி லபித்த கஹநகம்பீரபாஷ்ய தாத்பர்யார்த்தங்களைப் பெரியபெருமாள் நியமனத்தாலே பட்டோலைகொண்டு ச்ருதார்த்தங்களை ப்ரகாசிப்பிக்கையா லே ச்ருதப்ரகாசிகையென்று திருநாமஞ்சாற்றினர். புறம்புள்ள க்ரந்தகாரர டங்கலும் ஸ்வஸ்வ க்ரந்தங்களுக்கு [Telugu-script text] க்ருதாயாமென்றும், விரசி தாயாமென்று மித்யாதி விசேஷணமிடுவர்கள். இவர் அங்ஙனன்றிக்கே பரம ப்ராமாணிகராகையாலே ஸ்வகபோலகல்பிதத்வசங்காகளங்கமற விலிகிதாயா மென்று விசேஷணமிட் டருளினர். இத்தைப் பெருமாள்கண்டருளிப்போ

ரவுகந்து இவர்க்கு வேதவ்யாஸரென்று திருநாமஞ் சாற்றினர். ஆகையிறெ "ஸ்ரீரங்கராஜ திவ்யாக்ஞாலப்த வேதவ்யாஸா பரநாமதேயேந" வென்கிறது.

இதித்ரிம்சத்ப்ரச்நயாம் நவம

ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் ஆறுயிரப்படி முதலாகிய பகவத்விஷய க்ரந்தங்களுக்கு ப்ரச்நோத்தரம் எங்ஙனேயென்றில் - ஸமஸ்க்ருத வேதாந்தங்களுக்கு வ்யாக்யாநஞ் செய்தருளின பாஷ்யகாரர் மாறனடிபணிந் துய்ந்தவராகையாலே தாமே த்ரமிடவேதாந்தமான திருவாய்மொழிக்கு வ்யாக்யாநஞ் செய்தருள ப்ராப்தமாயிருக்க அது செய்யாமல் பிள்ளானை நியமித்தது, இன்னும் இப்படி வ்யாக்யாநந்தரங்க ளவ தரிக்கவேணுமென்று மபிப்பிராயத்தாலே யென்று தோற்றுவிக்கைக்காகவாயிற்று. ஆக உடையவர் "𑌪𑍁𑌤𑍍𑌰𑍀𑌕𑍃𑌤𑍋 𑌭𑌾𑌷𑍍𑌯𑌕𑍃𑌤𑌾 𑌸𑍍𑌵𑌯𑌂𑌯𑌃" "புத்ரீக்ருதோ பாஷ்யக்ருதாஸ்வயம்ய:" என்று தமக்கு புத்ரஸ்வீகாரமான திருக்குருகைப்பிரான் பிள்ளானை நியமிக்க வவர் ஆறுயிரப்படி யருளிச்செய்தார். அநந்தரம் நஞ்சீயர் ஆதர்சவ்யாக்யாநமென்றலாம்படி யொன்பதினுயிரப்படி செய்தருளினர். அநந்தரம் அதற்கு நான்மடங்காக நம்பிள்ளை யுபந்யாஸமான முப்பத்தாறுயிரத்தை வடக்குத் திருவீதிப்பிள்ளை பட்டோலைகொண்டார். அநந்தரம் பெரியவாச்சாம்பிள்ளை ஆறுயிரப்படிக்கு நான்மடங்காக இருபத்திநாலாயிரப்படி செய்தருளினர். அநந்தரம் திருவாய்மொழிக்கு ப்ரதிபதார்த்தகதந ரூபமான பன்னீராயிரப்படியை வாதிகேஸரி யழகிய மணவாள ஜீயரருளிச்செய்தார். இவர்கள் பகவத்விஷய க்ரந்தகர்த்தாக்கள்.

இதித்ரிம்சத்ப்ரச்நயாம் தசம

ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் முப்பத்தாறுயிரப்படிக்கு பாஷ்யகாரர் நியமனமில்லையென்று சிலர் சொல்லுகிருர்களாம். அதென்னவென்கிற ப்ரச்நத்திற் குத்தரம் எங்ஙனேயென்றில் - பாஷ்யகாரர் காலத்திற்கும் முப்பத்தாறுயிரப்படி யவதரித்தகாலத்திற்கும் பகு வ்யவதாநமாநபடியினுலே இது பாஷ்யகாரர் நியமநத்திற்கு யோக்யதை யில்லாமையாலே இதற்கு பாஷ்யகாரர் நியமநம் இல்லையென்று சொல்லுமது வ்யர்த்தோக்தி. நியமநயோக்யதை யுண்டாயிருக்க வதில்லாவிடிலிறே குற்றமாவது. ஆகையால் அது தோஷமன்று. இன்னமும் கீழ்ச்சொன்னபடியே பாஷ்யகாரர் தாமும் செய்தருளாதே பிள்ளானை நியமித்த விது மேலும் வ்யாக்யாநாந்தராநு மிதி வ்யஞ்ஜநார்த்தமிறே. ஆகையால் பவிஷ்யத்த்ருஷ்ட்யா வ்யாக்யாநங்கள் நாலுக்கும், ஆறுயிரப்படி நியமனமேநியமனமென்று ஸித்தமாகையாலே இதற்கு பாஷ்யகாரர் நியமநமில்லையென்றுசொல்லுகை துருக்தி. பரந்து 𑌪𑌰𑌸𑍍𑌤𑍁 இதற்குநம்பிள்ளை நியமநமில்லையென்பதொன் றுண்டு. அது பெரியபெருமாள் நியமனமுண்டாகவந்தால் லோகத்திற்கு அத்யந்தவிச்வஸநீயமாயிருக்குமென்று மபிப்பிராயக்காலே இவ

நாள் அதை நியமனமில்லையென்கிற வ்யாஜத்தாலே வாங்கி வைத்துக்கொண்டிருந்து பின்பெரியபெருமாள் நியமனத்தாலே ஈயுண்ணிமாதவர் முகமாக ப்ரவர்த்திப்பித்தாராகையாலே குற்றமாகாது. ஆகையால் இதுக்கொரு குற்றமில்லை.

இதி த்ரிம்சத்ப்ரச்னயாம் ஏகாதச

ப்ரச்னோத்தரம்.

அநந்தரம் ஆறுவார்த்தை முதலானவை விஷயமான ப்ரச்நத்திற்குத்தரம். எங்ஙனேயென்றில் - இளையாழ்வார் திருக்கச்சிநம்பி மடத்தேரவெழுந்தருளி நம்பியுடனே சென்று அடியேன் சில நினைவுகளை நினைத்திருந்தேன்; அவை யேதென்று பெருமாளுக்குத் தேவரீர் விண்ணப்பம் செய்து அவரருளிச்செய்ததை அடியேனுக் கருளிச்செய்ய வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் அன்றிராத்திரி பெருமாளை யநுபவித்து இளையாழ்வார் விண்ணப்பத்தை விண்ணப்பஞ்செய்து அவற்றை யருளிச்செய்ய வேணுமென்ற அதற்குத் தேவப்பெருமா ளரருளிச்செய்யும்படி :— பரதத்வம் நாமே. பேதமே தர்சநம். உபாயமும் ப்ரபத்தியே. அந்திமஸ்ம்ருதி வேண்டா. சரீராவஸானத்திலே மோக்ஷம். பெரியநம்பி திருவடிகளிலே யாச்ரயிப்பது. என்றிவ்வாறுவார்த்தைகளை யருளிச்செய்தார். இப்படி யிளையாழ்வா ரபிப்ராயத்தின்படியே திருக்கச்சிநம்பி முகமாகத் தேவப்பெருமா ளாறுவார்த்தை யருளிச்செய்தார். இப்படி தேவப்பெருமாள் அருளிச்செய்த பேததர்சநத்தை நிர்வஹிக்கைக்காக வேதாந்த ஸூத்ரபாஷ்யஞ் செய்தருளத் திருவுள்ளம்பற்றி யதற்கு போதாயன வ்ருத்திக்ரந்த கோசம் வேணுமென்று விசாரித்து, முற்காலத்திலே உத்தரதேசத்திலே ஒருராஜா விம்சதிலக்ஷ பரிமிதமான வ்ருத்திக்ரந்தத்தை யத்யேதாக்களுக்கு சுகாத்யயனார்த்த (సుఖాధ్యయ నార్థ) மாக லக்ஷக்ரந்த பரிமிதமாக்கி வைத்தான். அது அந்தராஜவம்சபரம்பரையிலே யிருக்கிறதென்று கேட்டு ஆழ்வானுமுடையவரு மங்கேறவெழுந்தருளி ப்ரயத்நத்திலே கோசத்தைவாங்கித் திருக்கண்மலர்சாற்றி யநந்தரம் கோசம் துர்க்கடமானவாறே உடையவர் திருவுள்ளம் கன்ற, ஆழ்வான் உடையவரைப் பார்த்து கோசமில்லையென்று திருவுள்ளம் கன்றவேண்டா, அந்த வ்ருத்திக்ரந்தமடைய அஸ்கலித வர்ணாநுபூர்வீகமாக தேவருடைய கடாக்ஷத்தினாலே அடியேனுடைய சித்தத்திலே விகிதமாயிருக்கிறதென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் போரவுகந்தருளி கோயிலேறவெழுந்தருளி ஸ்ரீபாஷ்யஞ் செய்தருள வுபக்ரமித்து வ்ருத்யனுஸாரேண செய்தருளுவதாக ப்ரதிக்ஞைபண்ணியதற் கனுகுணமாக வாழ்வான் விண்ணப்பஞ்செய்த வ்ருத்திக்ரந்த சகலங்களைத் தாம் ஸ்வக்ருதபாஷ்யார்த்த ஸம்வாதமாக மத்யே மத்யேயெடுத்துக்கொண்டு ஸ்ரீபாஷ்யாதிகளைத் தலைக்கட்டி யருளினார். அநந்தரம் ஸ்ரீபாஷ்யத்தைக் கொண்டு திக்விஜயம் பண்ணவேணுமென்று திருவுள்ளம்பற்றி அங்கு நின்றும் புறப்பட்டு பூர்வதிகுபக்ரம పూర్వదిగుపక్రమ மாக சோளபாண்டிய கேரளதேசங்களுக்கெழுந்தருளி அங்கு ஸாளக்ராமாதி திவ்யதேசங்களை யெல்லாம் சேவித்துக்கொண்டு அங்கிருக்கிறகுத்ருஷ்டி

வித்வான்களை ஜயித்து பட்டிமண்டபத்தைக்கிட்டி ஸரஸ்வதீபண்டாரத்தே ற வெழுந்தருளினவளவிலே ஸரஸ்வதிதானே வாசலைத்திறந்துகொண்டு எதிரே புறப்பட்டு உடையவரைப் பார்த்து ஶ்லோக கப்யாஸ வாக்யத்திற்கு அர்த்தம் கேழ்க்க, இவரும் கப்யாஸமென்று இரவிகர விகஸிதமென்றபடி யென்ன, ஸரஸ்வதியும் ஸந்துஷ்டையாய் ஸ்ரீபாஷ்யத்தை சிரஸாவஹித்து பாஷ்யகார ரென்று திருநாமஞ்சாற்றி ஹயக்ரீவரையு மெழுந்தருளப் பண்ணிவைத்துக் கொடுத்து மிகவு முபலாளித்து முன்னிங்குவந்த சங்கரன் "கப்யாஸமென்று மர்கடப்ருஷ்டமென்றபடி" யென்று நிஹீநார்த்தத்தைச் சொன்னான். நீரோன் கருத்தறிந்து யதார்த்தமாக ஶ்லோகார்த்தத்தைச் சொன்னீரென்று சொன் னாள்.

## இதித்ரிம்சத்ப்ரச்நயாம் த்வாதச ப்ரச்நோத்தரம்.

பாஷ்யகாரருக்கு முன் விசிஷ்டாத்வைத விஷயமான பாஷ்யாதிகளு முண்டோவென்கிற ப்ரச்நத்திற்குத்தரம் எங்ஙனேயென்னில் - த்ரமிடபாஷ் யகாரர் செய்தருளின த்ரமிடபாஷ்யமென்கிற பாஷ்யமும், தத்விஷயமான டீகையென்கிற வ்யாக்யாநமும், அதிப்ராசீனரான பகவத் ஸ்ரீவத்ஸாங்க மிச்ர ராலே செய்யப்பட்ட விசிஷ்டாத்வைத விஷய ப்ரம்மஸூத்ர பாஷ்யமுமுண் டு. டங்கத்ரமிடகுஹதேவ பாருசி ப்ரப்ருதிகள் பண்ணின விசிஷ்டாத்வைத விஷய க்ரந்தங்களுமுண்டு. போதாயனவ்ருத்தியும் விசிஷ்டாத்வைத விஷ யையாய் எல்லாத்திற்கும் ப்ரதம ப்ரவ்ருத்தையாயிருப்பதுண்டு. நாதமுனி களுமாளவந்தாரும் விசிஷ்டாத்வைத விஷயமாகச் செய்தருளின க்ரந்தங் கள் பலவுமுண்டு.

## இதித்ரிம்சத்ப்ரச்நயாம் த்ரயோதச ப்ரச்நோத்தரம்.

இத்தால்டங்க த்ரமிடகுஹ தேவாசார்யராரென்கிற சங்கைப்ரச்நத்தி ற்கு உத்தரம் அர்த்தாதுக்தம். இவர்கள் ப்ரம்மஸூத்ர வ்ருத்திகாரரான போதாயந சிஷ்யபரம்பராந்தர்ப் பூதர்.

## இதித்ரிம்சத்ப்ரச்நயாம் சதுர்தச ப்ரச்நோத்தரம்.

பாஷ்யகாரர்முதல் பாஷ்யப்ரவர்த்தக ரின்னாரென்று மிடம் த்விதீய ப்ரச்நத்திலே சொன்னோம். எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் செய்தருளி தம்மு டைய திருத்தங்கையாரான பூமிப்பிராட்டிக்குக் குமாரரான வாத்ஸயவரத விஷ்ண்வார்யர் என்னப்படுகிற நடாதூராழ்வானுக்கு ஸ்ரீபாஷ்ய ஸிம்மாஸ னாதி ராஜ்யத்தை ஸாதித்தருளினார். அவர்முதலாயு மொரு பரம்பரையுண்டு.

## இதித்ரிம்சத் ப்ரச்நயாம் பஞ்சதச ப்ரச்நோத்தரம்.

இப்படி மணவாளமாமுனி பர்யந்தத்தில் நடுவுள்ள வர்த்த விஷயங்க ளான ப்ரச்நோத்தரங்களுக் கநந்தரம் மணவாளமாமுனிகளுக் கநந்தரம்

ததீயாஷ்டதிக்கஜ விஷயப்ரச்நத்திற்குத்தரம் எங்ஙனேயென்றில் - வாநமாமலை ஜீயர், திருமலையிலே யெம்பெருமானார் ஜீயர், கோயிற்கந்தாடை யண்ணன், எரும்பியப்பா, அப்பிள்ளான், அப்பிள்ளை, பட்டர்பிரான் ஜீயர், ப்ரதிவாதி பயங்கரமண்ணுவென்று இப்படி அஷ்டதிக்கஜங்களுக்குத் திருநாமம். இவர்களுக்குத் திருவிலச்சினையும் உபயவேதாந்தமும் மணவாளமாமுனிகள் ஸாதித்தருளினர். இவர்களிலே வாநமாமலை ஜீயர் (బాల్యాత్ప్రభృతిసుస్నిగ్ధ) பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தராய் துடர்ந் தடிமைசெய்யு மவராயிருப்பர். கந்தாடையண்ணன் அனவரதம் ஸேவித்துக்கொண்டு அத்யந்தம் ப்ரீதிவிஷயரா யிருப்பர். ப்ரதிவாதி பயங்கரமண்ணன் ப்ரதிபக்ஷநிரஸ நபூர்வகம் ஸ்ரீபாஷ்யத்திற்கு உசாத்துணையா யிருப்பர். அப்பிள்ளை ஜீயர் நியமனத்தாலே யைந்து திருவந்தாதிக்கு முறைசெய்தருளி யதிராஜவிம்சதிக்கு வ்யாக்யாநமுஞ் செய்தருளினர். அப்பிள்ளான் மடத்திற்கு ஸர்வபரத்தையும் நிர்வஹித்துக் கொண்டு போருவர். பட்டர்பிரான் ஜீயர் பாதச்சாயாபந்நராய் தேவுமற்றறியேனென் றிருப்பர். அது தோற்ற வந்திமோபாய நிஷ்டையென்கிற க்ரந்தத்தை யருளிச்செய்தார். கோயிற்கந்தாடை யண்ணனையும் ப்ரதிவாதிபயங்கரமண்ணனையும் தம்முடைய திருப்பேரனரான ஜீயர் நயினருக்கு ஸ்ரீபாஷ்யமும் முப்பத்தாறாயிரப்படியும் ஸாதிக்கும்படி நியமித்தருளினர்,

## இதித்ரிம்சத்ப்ரச்நயாம் ஷோடச ப்ரச்நோத்தரம்.

வாநமாமலை ஜீயர் திருமுடிவர்க்க ப்ரச்நோத்தரம் எங்ஙனேயென்றில் - மணவாளமாமுனிகள், வாநமாமலை ராமானுஜஜீயர் - க - களமூர் வரதமுநி - உ - செண்டலங்கார ஸ்வாமி - ௩ - பெரியரங்கப்ப ஸ்வாமி - ௪ - திம்மய்யங்கார் ஸ்வாமி - ௫ - எம்பெருமானார் ஸ்வாமி - ௬ - பெரியதிருவேங்கட ஸ்வாமி - எ - கோனப்பமுனிகள் ஸ்வாமி - அ - சின்னரங்கப்பஸ்வாமி - ௯ - சின்னதிருவேங்கடஸ்வாமி - க0 - பெரியதெய்வநாயக ஸ்வாமி - கக - திருவேங்கடஸ்வாமி - கஉ - கூரத்தாழ்வான்ஸ்வாமி - க௩ - ஸ்ரீவத்ஸசிந்நஸ்வாமி - க௪ - திருவேங்கடஸ்வாமி - க௫ - திருவேங்கட ராமானுஜஸ்வாமி - க௬ சடகோபராமானுஜஸ்வாமி - கஎ.

## இதித்ரிம்சத்ப்ரச்நயாம் ஸப்ததச ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் வாநமாமலை ஜீயருடைய வஷ்டதிக்கஜங்கள் விஷயமான ப்ரச்நத்திற்குத்தரம். எங்ஙனேயென்னில்-தொட்டய்யங்காரப்பை-க. ஸமரபுங்கவாசாரியர் - உ. சுத்தஸத்வம் அண்ணு - ௩. அப்பச்சியாரண்ணு - ௪. இராமாநுஜப்பிள்ளை - ௫. திருக்கோட்டியூரையர் - ௬. க்ஞானக்கண்ணராத்தான்-எ. வெள்ளைக்கால்சிற்றுன் - அ. శ్రీమన్మహార్యరణపుంగవశుద్ధసత్వశ్రీశ్రీనివాసభరతానుజశుద్ధపాదాః। గోష్ఠీపురేశవరదా ఖ్యగురూజయంతివానాద్రియో

గిన ఇమేఽష్టదిశాంగజాస్తే. வாநமாமலைஜீயர் தம்முடைய தனியன்க்ரமம். శ్రీశైల, రమ్యజామాతృ యోగీంద్ర, కృపావ్యూమమహాశైల, శ్రీరామానుజయోగీంద్ర, సౌమ్యోపయన్తృమునివర్య, శ్రీమద్వానమహాశైల, శ్రీమద్వరమునీంద్రాంఘ్రి, శ్రీమద్యతీంద్ర శఠజిచ్ఛరణారవింద, శ్రీమచ్ఛఠారియతిరాట్పద పద్మభక్త, శ్రీవానాచలయోగివర్య కృపయాసంసిద్ధబోధోజ్జ్వలం, శ్రీమద్వానాద్రియోగీంద్ర పదపఙ్కజసంశ్రయం, వానాచలయతీంద్రాంఘ్రి సరసీరుహషట్పదమ్, శ్రీమద్వ్యమమహాశైల యతిరాట్పద సంశ్రయం, శ్రీమద్వ్యమాద్రి యోగీంద్ర పాదపద్మమధువ్రతం, శ్రీవేంకటేశ కరుణాప్త సమస్తవిద్యం, శ్రీమచ్ఛఠారిచరణాంబుజరాజహంసం, శ్రీవానాద్రిమునీంద్ర పాదజలజ ద్వంద్వాశ్రయాదుల్లసద్భక్త్యాదిగుణాంబురాశిం, విద్యాజ్ఞానసువృత్త మంగళగుణైః పూర్ణస్య గోప్తుస్సతాం. ஆக - கஅ - தனியன்கள். ஸமக்ரமாக வெழுதப்புக்கால் க்ரந்தவிஸ்தரமாமென்று தனியன்களுடைய ப்ரதிகோபாதானமாத்ரம் பண்ணிற்று. வாநமாமலைஜீயருடைய வஷ்டதிக்கஜங்களான தொட்டையங்காரப்பை, ஸமரபுங்கவாசார்யர். சுத்தஸத்வமண்ணு. அப்பச்சியாரண்ணு. முதலானவர்களுடைய தனியனுமுண்டு.

இதிஸ்ரீம் சதப்ரச்நயாம் அஷ்டாதச

ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் ஆதிவண் சடகோப ஜீயர்மடத்தி லவர்விஷயமான ஏகவிம்சதி ப்ரச்நோத்தரம் எங்ஙனே யென்றில் :—பெரிய வாச்சாம்பிள்ளை துடங்கியாதிவண் சடகோபஜீயரளவும் இப்பால் மூன்று நான்கு பட்டத்தளவிலும் திருவிலச்சினை விஷயமாகவும் க்ரந்தவிஷயமாகவும் பெரிய வாச்சாம்பிள்ளையொன்றேயாகக் கலப்பற்று நடந்துவந்தது. இப்பால் ருசிபேதத்தாலே ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரம் ஸ்வாசார்ய ஸம்ப்ரதாய விருத்தமே யாகிலும் அத்தையதிகரித்துக்கொண்டு போந்து ததனுகுணப்ரதிபத்யநு வர்த்தனமும் பண்ணிக்கொண்டு போந்தார்கள். இப்படி யிருந்தாலும் ஐயந்த்யுத்ஸவ தத்பாரணாதி விஷயங்களிலே ஸம்ப்ரதாயாதிலங்கநம் பண்ணினார்களில்லை. ஈடு முப்பத்தாறாயிரம்முதல் திருமந்திரார்த்த விஷயமான முமுக்ஷுப்படி பர்யந்தமான பூர்வஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் விட்டார்களில்லை. ஆகையால் இப்படி உபயஸம்ப்ரதாயமிச்ரராயிருப்பர்கள். இந்தஆதிவண் சடகோபஜீயருடைய மடம் மணவாளமாமுனிகளுடைய நியமநத்தாலே யுண்டாய்த்தென்று தத்ஸம்ப்ரதாயஸ்தருஞ் சொல்லுவார்கள். ஆதிவண் சடகோபஜீயர்திருநாராயண புரத்திலே செல்வப்பிள்ளை ஸன்னிதியிலே மணவாளமாமுனிகளைத் திருப்ரதிஷ்டைபண்ணிவைத்து தனிக்கோவிலும் கட்டிவைத்தாரென்று மவர்கள் சொல்லுவர்கள். இவர் திருநக்ஷத்ரம் - புரட்டாசியில் கேட்டை.

இதிஸ்ரீம் சதப்ரச்நயாம் ஏகோநவிம்ச

ப்ரச்நோத்தரம்.

இந்தமடத்தில் வடகலையார் ப்ரவேசவிஷயமான ப்ரச்நத்திற்கு உத்தரம்:- முன்னெழுதிய நாலு மூன்று பட்டத்திற் கிப்பால் வரவர ஸஹவாஸ விசேஷத்தாலும் ருசிவிசேஷத்தாலும் புண்ட்ரபேதமும் ஸம்ப்ரதாயவிருத்தமாக மடத்து சிஷ்யர்கள் ஏகாதசிச்ராத்தாதிகள் பண்ணிக்கொண்டு வர, அத்தை நிவாரியாமல் ராமாநுஜ தயாபாத்ரத்தையுங் கூட்டி யநுஸந்தித்துக் கொண்டும் போருகையாலே இந்தமடத்திலே வடகலையார்கள் ப்ரவேசித்தார்களென்னும்படி யிருந்தார்களல்லது பெரிய வாச்சாம்பிள்ளையோடே திருவிலச்சினை ஸம்பந்தமற்ற சுத்தவடகலையார் இந்த மடாதிபதிகளாய் இருப்பதில்லை. இந்தமடத்தில் ஜீயர்களுடைய திருமுடிவர்க்கத்தின் தனியன்கள் విష్ణుశ్రీప్ప్రుతనాపతిః. என்று துடங்கி శ్రీకృష్ణపాదాభిధం శ్రీరంగేశ్వరకేశవార్య కమలావాసాఙ్ఘ్రి భజేకేశవం, కేశవార్యకృపాపాత్రం, ప్రపద్యేఽరవద్యానాం, శఠారినారాయణ సంయమీంద్ర, ప్రణమ్య నారాయణ, శ్రీమన్నారాయణముని శ్రీశఠారి పదాశ్రయం, శ్రీనివాసమునిశ్రేష్ఠాల్లబ్ధ వేదాంతసంపదమ్, వేదాంతోత్తర వీరరాఘవ, విద్యాంభోధిపరాంకుశాఖ్య మునిరాట్, వీరరాఘవవేదాంతమునివర్య పదాశ్రయమ్, శ్రీవీరరాఘవముని శ్రుతిశాలి సూరి, శ్రీవాసవీర రఘువర్య పరాంకుశాది, శ్రీవీరరాఘవ యతీంద్ర పరాంకుశాది రామానుజార్య కమలానిధి యోగివర్యః. సంప్రేక్షితం కరుణయా పరిపూర్ణబోధం శ్రీరంగనాథముని శేఖరమాశ్రయామః. இதுஇப்போதிருக்கிறஜீயர் தனியன். மற்றவைகளும்ஸமக்ரச் லோகலேகநம் பண்ணினால் க்ரந்தவிஸ்தரமா மென்று ப்ரதீகங்கள் மாத்ரம் யெழுதித்து. அவை கண்டுகொள்வது.

இதித்ரிம் சத்ப்ரச்நயாம் விம்ச

ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் ப்ரம்மதந்த்ர ஜீயர்மடத்திற்கும் பரகாலஜீயர் மடத்திற்கும் நிஷ்பத்தி க்ரமப்ரச்நத்திற்குத்தரம். எங்ஙனேயென்றில்:- வேதாந்தாசார்யர் திருவடிகளிலே யாச்ரயித்த பேரருளாளய்யனென்கிறவர் அவர் ஸன்னிதியிலே ஸகலசாஸ்த்ரங்களையுமதிகரித்து வேதாந்தத்திலே அதிநிபுணராயிருக்கையாலே நீர் ப்ரம்மதந்த்ர ஸ்வதந்த்ரரென்று வேதாந்தாசார்யராலே திருநாமஞ் சாற்றப்பட்டு பின்பு ஸந்யஸித்து ஆசார்ய பரதந்த்ரரா யிருந்தார். இவருக்கு வேதாந்தாசார்யர் தம்முடைய ஹயக்ரீவரை யெழுந்தருளப்பண்ணிக் கொடுத்தார். ப்ரம்மதந்திர ஜீயரும் பின்பொருஜீயருக்கு ஹயக்ரீவரை யெழுந்தருளப்பண்ணிக்கொடுக்க அன்றுமுதல்அவர் நியமனத்தாலே அந்தமடம்நடந்து வருகிறது. இந்த ஜீயர்களுடைய திருமுடிவர்க்கம் வண்சடகோபஜீயர் மடத்திலே பிரிவு. இதை பரகாலஜீயர் மடமென்று வண்சடகோபஜீயர் மடத்தார் சொல்வர்கள்.

இந்தமடம் நூற்றைம்பது ஸம்வத்ஸரமாய் நடந்து வருகிறதென்றுஞ் சொல்லுவர்கள்.

இதித்ரிம் சத்ப்ரச்நயாம் ஏகவிம்ச
ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் முனித்ரயமென்று லோகத்தில் வ்யவஹரிக்கிற வேதாந்த ராமாநுஜஜீய ரவர்களுக்கும் வண்சடகோபஜீய ரவர்களுக்கும் மடத்தாருக்கும் ஆசாரபேத மென்னென்ன வித்யாதி ப்ரச்நோத்தரம். எங்ஙனே யென்றில்:— முனித்ரய ஸம்ப்ரதாயத்தில் அவர்கள் ஸ்ரீஜயந்திவிஷயத்திலே ஸர்வ விதவேதாத்யாகம் வைஷ்ணவர்களுக்கு ஆவச்யகமாயிருக்க, சந்த்ரோதயவேதாத்யாகம்மாத்ரம் ஆவச்யகம், மற்றை வேதாதோஷமன்றென்றும்; அஹோராத்ரம் உபவாஸமும் மற்றைநாள் பாரணையும்; ஸ்ரீராமநவமி விஷயத்திலும் ந்ருஸிம்மஜயந்தீ விஷயத்திலும் அஹோராத்ரோபவாஸமும் மற்றைநாள் பாரணையும் ; ஸ்ரீதத்வவிஷயத்தில் ஈச்வரதத்வாந்தர்ப்பாவமும் ஐச்சிக பகவச்சேஷத்வமும்; பரந்யாஸவிஷயத்தில் பிராட்டிக்குப்ரயோகபேதேந ஸமப்ராதாந்யேநோத்தேச்யத்வமும் விசேஷணவிசேஷ்யபாவேந உத்தேச்ய த்வமும்; இன்னும் சிலபேதங்களையுங்கொள்ளுவர்கள். வண்சடகோபஜீயர் ஸம்ப்ரதாயஸ்தர் ஜயந்திவிஷயத்தில் ஸர்வவேதாத்யாகமும்ராத்ரியிலே உத்ஸவாந்தத்திலே பாரணையும் ந்ருஸிம்மஜயந்தியிலே ஸாயங்காலமானவாறே உத்ஸவாந்தத்தில்பாரணையும் ஸ்ரீராமநவமி விஷயத்தில்திவாபாரணையும் பிராட்டிவிஷயத்தில்வேதாந்தாசார்யோக்தபஞ்சகங்களிலே ಏಘತ್ವೇನ ಜೀವತ್ವೇನ ಜೀವಃ என்கிறத்விதீயபக்ஷமும் பிராட்டிக்கு வ்யாஸஜ்ய வ்ருத்யுபாயத்வமாதல் ஸமப்ராதாந்யேநப்ரத்யேக வ்ருத்யுபாயத்வமாதல் விசேஷணவிசேஷ்யபாவேந உபாயத்வமாதல் விசேஷ்யகதோபாயத்தில் லக்ஷணமான விசேஷணோபாயத்வமாதலில்லை; பின்னை புருஷகாரத்வமாத்ரமுள்ளது. என்றுங் கொள்ளுவர்கள். இன்னுமிரண்டு மடஸ்தர்களுக்கும் ப்ரபத்திப்ரயோகாதிகளிலும் பேதமுண்டு. இந்த விரண்டுமடஸ்தர்களுக்கும் பரகால ஜீயர்மடஸ்தர்களுக்கும் தத்வ விஷயத்திலும் பேதமுண்டு. எங்ஙனேயென்றில்:— பரகால ஜீயர்ஸம்ப்ரதாயஸ்தர் பிராட்டிக்கு ப்ரம்மத்வமும் ஜகத்வ்யாபாரமும் நிக்ரஹ கர்த்ருத்வமாகிற தத்வவிஷயத்தில் ப்ரகாரபேதமும் யதிவந்தநவிஷயத்தில் ஆசார்யனுக்ரஹியையுங்கூட யதியானவன் வந்தநம்பண்ணக் கூடாதென் றித்யாத்யாசாரபேதங்களுங் கொண்டார்கள். கீழ்ச்சொன்ன விரண்டு ஸம்ப்ரதாயஸ்தரும் இவையொன்றுங் கொண்டார்களில்லை. ஆகையா லிந்த ஸம்ப்ரதாயந்திற்கு தத்வவிஷயத்திலும் ஆசாரவிஷயத்திலும் பரஸ்பரபேத முண்டு.

இதித்ரிம் சத்ப்ரச்நயாம் த்வாவிம்ச
ப்ரச்நோத்தரம்.

தென்னாசார்யர்களிலே யிப்படி தத்வவிஷயத்திலும் ஆசாரவிஷயத்திலும் பேதமுண்டோவென்கிற த்ரயோவிம்சதி ப்ரச்நோத்தரம். எங்ஙனேய

ன்றில்:– கீழ்ச்சொன்னவர்களைப்போலே தத்வவிஷயத்திலும் ஆசாரவிஷயத்திலும் நிபந்தந க்ரந்தங்களிலே அநுவாதமும் தூஷணமும் பண்ணும்படியான ப்ரபலவிரோத மொன்றுமில்லை. கிந்து, ஸ்ரீபாததீர்த்த க்ரஹணவிஷயத்தில் த்விவாரமென்று வானமாமலையார். த்ரிவாரமென்று கந்தாடையார். இங்ஙனே ஸூக்ஷ்மபேதங்கள் சிலதுண்டு. அவ்விரண்டிற்கும் [illegible] என்றும் [illegible] என்றும் ப்ரமாணமுண்டு.

## இதித்ரிம்சத்ப்ரச்ங்யாம் த்ரயோவிம்ச ப்ரச்நோத்தரம்.

சதுஸ்ஸப்ததி பீடஸ்தவிஷயமான சதுர்விம்சதி ப்ரச்நோத்தரம் எங்ஙனேயென்றில்:– ஆளவந்தார் திருப்பேரனாரப்பிள்ளையப்பன் - க. பெரியநம்பிகுமாரர் ஸ்ரீபுண்டரீகர் - உ. திருக்கோட்டியூர் நம்பிகுமாரர் தெக்காழ்வான் - ங. திருமலையாண்டான் குமாரர் சுந்திரத்தோளிணையார் - ச. பெரிய திருமலைநம்பிகுமாரர்களில் இராமாநுஜநம்பியும்-திருமலைநம்பியும் - ரு. கூரத்தாழ்வான் குமாரர்களான பட்டரும் ஸ்ரீராமப்பிள்ளையும் - சு. முதலியாண்டானவர்குமாரர் கந்தாடையாண்டான் - எ. நடுவிலாழ்வான் - அ. கோமடத்தாழ்வான் - கூ. திருக்கோவலூராழ்வான் - கO. திருமோகூராழ்வான்-கக. பிள்ளைப்பிள்ளையாழ்வான்-கஉ. நடாதூராழ்வான்-கங. எங்களாழ்வான்- கச. அனந்தாழ்வான்-கரு. மிளகாழ்வான்-கசு. நெய்யுண்டாழ்வான் - கஎ. சேட்டலூர் சிறியாழ்வான் - கஅ. வேதாந்தியாழ்வான்-ககூ. கோவிலாழ்வான்-உO. உக்கலாழ்வான் - உக. அரணபுரத்தாழ்வான் - உஉ. எம்பார் - உங. கிடாம்பியாச்சான் - உச. கணியனூர்சிறியாச்சான் - உரு. கொங்கிலாச்சான்-உசு. ஈச்சம்பாடியாச்சான் - உஎ. திருமலைநல்லான் - உஅ. செட்டம்பள்ளிஜீயர்-உகூ. ஈச்சம்பாடிஜீயர் - ஙO. திருவள்ளறைஜீயர் - ஙக. ஆட்கொல்லிஜீயர் - ஙஉ. திருநகரிப்பிள்ளை - ஙங. காராஞ்சிஸோமயாஜியார் - ஙச. அலங்காரவேங்கடவர் - ஙரு. நம்பிகுருந்தேவர் - ஙசு. செருப்பள்ளிதேவராஜபட்டர் - ஙஎ. பிள்ளையுரந்தையுடையார் - ஙஅ. திருக்குறுகைப்பிரான் பிள்ளான் - ஙகூ. பெரியகோயில்வள்ளலார் - சO. திருக்கண்ணபுரத்தெச்சான்-சக. ஆசுரிப்பெருமாள் - சஉ. முனிப்பெருமாள் - சங. அம்மங்கிப்பெருமாள் - சச. மாருதிப்பெரியாண்டான் - சரு. மாறொன்றில்லா மாருதியாண்டான்–சசு. ஸோமயாஜியாண்டான் - சஎ. ஜீயராண்டான்- சஅ. ஈச்வராண்டான்-சகூ. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான் - ருO. பெரியாண்டான் - ருக. சிறியாண்டான் - ருஉ. குஞ்சிப்பூர்சிறியாண்டான் - ருங. அம்மங்கியாண்டான் - ருச. ஆளவந்தாராண்டான் - ருரு. அருளாளப்பெருமாள் எம்பெருமானார் - ருசு. தொண்டனூர்நம்பி - ருஎ. மருதூர்நம்பி - ருஅ. மழூவூர்நம்பி - ருகூ. திருக்குருங்குடிநம்பி - சுO. குரவிநம்பி - சுக. முடும்பைநம்பி - சுஉ. வடுகநம்பி - சுங. வங்கிப்புரத்துநம்பி - சுச. ஸ்ரீபாரங்குசநம்பி - சுரு. அம்மங்கியம்மாள் - சுசு. பருத்திக்கொல்லையம்மாள் - சுஎ. [illegible]

ருவோலர், சொட்டையம்மாள் - ௬௯. முடும்பையம்மாள் - ௭௦. குமாண்படியை - ௭௧. குமாண்டூர் இளையவில்லி - ௭௨. கிடாம்பிப்பெருமாள்-௭௩. நடந்துடுப்பிள்ளான்-௭௪. இவர்களுடைய தனியன் శ్రీలక్ష్మణార్య చ్యుతి మాత్ర... ప్రముఖ... | సంప్రాప్య... ... భజేచతుస్సప్తతి ... సంస్థాన. என்றுஇவர்கள் எழுபத்திநாலு சிம்மாஸநாதிபதிகள். பாஷ்யகாரர் நாளையிலே தத்வவிஷயத்திலும் ஆசாரவிஷயத்திலும் அந்யோந்யம் ஸ்புடவிரோதத்தை யுடைத்தான தென்கலை வடகலை பேதமில்லை. பின்பு வேதாந்தாசார்யர்நாளிலே ஸ்புடவிரோதத்தாலே பேதமுண்டாயிற்று. அப்போது எழுபத்திநாலு ஸிம்மாஸநாதிபதிகளுடைய வம்சஸ்தரிருந்தார்கள். அவர்களிலே சிலர் வேதாந்தாசார்யருடைய ஸம்ப்ரதாயஸ்தராய்க் கொண்டு வடகலையானார்கள். அவர்களாவன் றில்பெரிய திருமலைநம்பி வம்ச்யர் - க. நடுவிலாழ்வான் வம்ச்யர் - உ. நடாதூராழ்வான் வம்ச்யர் - ௩. கிடாம்பியாச்சான் வம்ச்யர் - ௪. ஈச்சம்பாடியாச்சான் வம்ச்யர் - ௫. திருமலைநல்லான் வம்ச்யர் - ௬. ஸோமாஜியாண்டான் வம்ச்யர் - ௭. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான் வம்ச்யர் - அ. வங்கிப்புரத்து நம்பிவம்ச்யர் - ௯. இவர்களெல்லாரிலும் நாலு திருமாளிகையார் தென்கலையாரும் நாலுதிருமாளிகையார் வடகலையாருமாக நடந்துக்கொண்டு வருகிறது. மற்ற அறுபத்தியைந்து ஸிம்மாஸநாதிபதி வம்ச்யரில் பூர்த்தியாய்ப் போனது போக இருக்கிறவர்களெல்லாரும் அன்றுமுதல் இன்றளவாக தென்கலையாராகவே நடந்துவருகிறார்கள். இதிலே பிள்ளை லோகாசார்யரும் ப்ரதிவாதிபயங்கர மண்ணனும் எழுபத்திநாலு பீடஸ்தரிலே ஒருவரான முடும்பைநம்பியினுடைய திருவம்ச்யரென்று சொல்லுவர்கள்.

இதித்ரிம்சத் ப்ரச்நாம் சதுர்விம்ச
ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் இந்த எழுபத்திநாலு ஸிம்மாஸநாதிபதிகளிலே ஸப்தகோத்ரத்தாரும் அஷ்டகோத்ரத்தாரும் அந்தர்ப்பூதர். இந்த ஸப்தகோத்ர வ்யவஸ்த்தையாருடைய நியமனத்தாலே யென்கிற பஞ்சவிம்ச ப்ரச்நத்திற்கு உத்தரம். எங்ஙனேயென்றில்:— கோயிற்கந்தாடை யண்ணனும் எரும்பியில் ஸ்ரீரங்கராஜரும் முன்பு லாடபுரத்திற்கு ஸ்தாலீபாகார்த்தம் போனவிடத்திலே நடந்த லாடபுரஸ்தருடைய வாசார வைகல்யாதிகளையும் தமக்கு அந்த தேஹாநுபந்தத்தில் ருசியில்லாமையையும் பெரியஜீயருக்கு விண்ணப்பஞ்செய்ய, அதைக்கேட்டருளிய பெரியஜீயரும் வைலக்ஷண்யமுடையராய் பூர்வமேபிடித்து அந்யோந்ய ஸம்பந்தமுடையராய்ஸமான ப்ரவரதோஷமில்லாமலிருக்கிறவாதூலஹாரீத ஸ்ரீவத்ஸகௌண்டிந்யகௌசிக பரத்வாஜாத்ரேயகோத்ரஸ்தர் எழுவர்களையும் அந்யோந்ய ஸம்பந்தம் பண்ணிக்கொண்டு வரும்படியும் கோத்ராந்தரத்திலே ஸம்பந்தம் பண்ணாதே யிருக்கும்படியும் ஏதத்கோத்ரங்களிலே குடிக்கந்தாடைமுதலான வந்ய ஸம்பந்தமில்லாதிருக்கும்படியும் அண்ணனையும் வேடலப்பையையும் எரும்பியிலப்பா முதலானோரையும் தி

யமித்து அத்தைத் தப்பாமைக்குத் தம் ஸ்ரீபாதத்திலாணையிட்
இச்சேதிக்கு எரும்பி, விராலி, வேடல், திருவிண்ணகர், திருக்குட
ப்பாக்கம், கடிகை, கச்சிநகர், ஸ்ரீபெரும்பூதூர், திருநாவூர்,திருவெ
திருமழிசை, முதலானவிடங்களி லுண்டான தாசரதிவம்சயரான வ..
க்கும் ஸ்ரீபாஷ்யகாரவம்சயரான ஹாரீதருக்கும் மற்றும் ஏததநுபந்திகள..
கோத்ராந்தரஸ்தருக்கும் ஜீயர் ஸ்ரீமுகம்வர அத்தை சிரஸாவஹித்து அன்று
முத லின்றளவும் அந்த நியமனத்தாலே நடந்துவருகிறது. వాధూలవత్సగో
త్రన్య హారీతాత్రేయకౌశికాః । భారద్వాజశ్శ్రీవత్సో వాధూలాః పరికీర్తితాః.

என்று இந்த நியமனத்திற்குட்பட்ட விந்த ஏழுகோத்ரத்தார்க்கும் கந்தா
டையாரொன்று வ்யபதேசம் நடந்துவருகிறது. இவர்களெல்லாரும் எழுபத்தி
நாலு ஸிம்மாஸநாதிபதிகளுக்குள் சேர்ந்த முதலியாண்டான் முதலானோரு
டைய திருவம்சயர். இது ஸப்தகோத்ர வ்யவஸ்தா ப்ரகாரமிருக்கும்படி. இந்
த ஸப்தகோத்ரத்தாரில் வாதூலவம்சயராய் ஸ்ரீபாஷ்ய ஸம்ப்ரதாய ப்ரவர்த்
தகராய் ஜகஜ்ஜீவாதுவான போளிப்பாக்கம் நயினார்,பெரியதிருமலை நம்பி வம்
சயராய் சடமர்ஷணகோத்ரரான எட்டூர் சிங்கராசாரியரையும் மற்றவேழு
கோத்ரஸ்தரையுங் கூட்டி யஷ்டகோத்ரமாக நியமித்தருளினர். போளிப்
பாக்கம் நயினார் ஸப்தகோத்ரஸ்தர் ; அஷ்டகோத்ரத்திற்கு நியமனகர்த்தா.
இதுஅஷ்டகோத்ர வ்யவஸ்த்தை. இவர்களிலும் ப்ரயாச: எழுபத்திநாலு ஸிம்
மாஸநாதிபதி வம்சயர்களுண்டு. திருவனந்தாழ்வான் பூமியைவஹிக்க அஷ்ட
திக்கஜங்கள் ஸஹகரிக்க ஸப்தகுலபர்வதங்களும் பூமிக்குஅஞ்சுராணி விட்
டாப்போலே யிருக்கும். அதுபோலதிருவநந்தாழ்வானுடைய திருவவதாரமா
ன பெரியஜீயர் பராங்குசபரகால யதிவரர்களுடைய ஸம்ப்ரதாயநிர்வஹண
மாகிற பாரத்தை வஹித்தருளுவதற்கு அஷ்டதிக்கஜங்களும் ஸஹகரித்துஸ
ப்தகோத்ரமும் ஸம்ப்ரதாயத்திற்கு ஆணிவிட்டாப்போலே வ்யவஸ்தாபகமா
யிருக்கும்படி. கோத்ரமென்று பர்வதத்திற்கும் குலத்திற்கும் பேரொன்று
சொல்லுவர்கள்.

இதித்ரிம்சத் ப்ரச்நயாம் பஞ்சவிம்ச

ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் ஏவம்பூதரான மணவாளமாமுனிகளுக்கு ஈடுவந்தக்ரமம்
அவர் பெருமாளுக்கு ஸாதித்தருளினக்ரமம் முதலானவை விஷயமான ப்ச்ர
நத்திற் குத்தரம். எங்ஙனேயென்றில் ஈடுவந்தக்ரமம் த்விதீயப்ரச்நோத்த
ரத்திலே சொல்லித்தே. ஒருநாள் முதலிகளுடனேகூட பெருமாளை பெரி
யஜீயர் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டிருக்கப் பெருமாளும் ஜீயரை யரு
ளப்பாடிட்டருளி நம் பெரியதிருமண்டபத்திலே திருவாய்மொழிப் பொருளை
ஈடுமுப்பத்தாறுயிரம் துடக்கமான வ்யாக்யாநங்களோடே நடத்துமென்று
நியமித்தருள, ஜீயரும் மிகவும் ஹ்ருஷ்டராய் உபக்ரமிக்கிறவளவிலே பெரு
மாளும் நாச்சிமாரும் எழுந்தருளி ஸ்ரீஸேநாபதியாழ்வான் நம்மாழ்வார் துடக்
கமான ஆழ்வார் பதின்மரோடும் அனைத்துப் பரிகரத்தோடும் கூடப்பெருந்தி

ருவோலக்கமாக வெழுந்தருளியிருக்க, இவர் துடங்கி யர்த்தம் நடத்தும்
படியைத் திருச்செவிசாற்றியருளி,இப்படி யொருஸம்வத்ஸரம் நிர்விக்நமாக
நடந்து சாற்றியருளும்போது முன்புபோலே பெரியபெருமாள் பேரோலக்க
மாக வெழுந்தருளியிருந்து திருச்செவிசாற்றியருளி, மிகவு முவந்து தீர்த்தம்
முதலான வரிசைகளைப்ரஸாதித்து அந்த வுகப்பின்மிகுதியாலேஅகில ஸ்ரீவை
ஷ்ணவர்களையுங் குறித்து நம் வீடு முதலான நூற்றெட்டு திருப்பதியிலும் இவ
ர் தனியனான శ్రీశైలేశదయాపాత్ర ச்ரீசைலேசதயாபாத்ரமாதியாய் ப்ரபந்தா
நுஸந்தாநம் நடத்திப்போருங்கோளென்று நியமித்தருளினார். இது யதீந்த்ர
ப்ரவணப்ரபாவத்தின்படி. இது ஸ்ரீபாதத்து முதலிகள் மூவர் நாலுபாதமரு
ளிச்செய்தாரென்று மதற்குச்சேரும். அப்பெரியதிருவோலக்கத்திலே சாற்று
முறை திருச்செவிசாற்றி யருளினபின்பு பெரியபெருமாள் ஒரு பாலனாய்
வந்து இந்த ஸ்ரீசைலேசதயாபாத்ரமாதியாய் இந்தத் தனியனை யருளிச்செய்
து அந்தர்த்தாநகதரானார். அது முன்பே பதரிகாச்ரமத்தி லெம்பெருமான்
அங்கே யிந்தத்தனியனை யனுஸந்திக்கும்படி நியமித்தருளினானென்று பின்பு
சில நாளையிலே யங்குநின்றும் வந்தவர்கள் சொன்னார்களாய், இங்குநடந்த
வித்தையு மங்குநடந்தவத்தையுங் கூட்டி யநுஸந்தித்துக் கோயில் முதலான
ஸர்வதேசங்களிலுண்டான ஸகலப்ராமாணிகரும் இந்தத்தநியனை பகவத்ப்ர
ணீதமென்று நிர்ணயித்துக் கோயில்களிலும் திருமாளிகைகளிலும் இந்தத்த
னியனைப்ரபந்தாதியிலே யநுஸந்தித்துக்கொண்டு வருகிறார்களென்றுஞ் சொ
ல்லுவர்கள். இது அயோத்யை ராமாநுஜய்யங்கார்படி, என்கிற க்ரந்தத்தில்
படி. இன்னும் தடஸ்தங்களான திருவரங்கம் பெரியகோயில் ஒழுகுகளிலே
யிவ்வர்த்தங்கள் ஸ்பஷ்டங்களாயிருக்கும். இன்னமும் மாசிமாஸத்திலே க்ரு
ஷ்ணபக்ஷத்வாதசியிலே பெரியபெருமாள் தம்முடைய திருக்கோயிலனைத்து
ப்பரிஜநங்களுடைய படித்தனத்தைக்கொண்டு பெரிய ஜீயருடைய திருவத்
யயநத்தை அத்யாபி நடத்துகிற விதுவும் இவரிடத்தில் அவர் முப்பத்தாறயி
ரப்படி கேட்டமையில் ப்ரமாணம். இதுவும் - "வாசியறிந்த வதரிநாராயண
னார்மணங்கொட்டேசுடையெந்தை மணவாளமுனி சீர்தழைப்பச்சிரீசை,லே
சதயாபாத்திரமென்று மிம்மாமந்திரத்தைத்,தேசிகராய்க்கண்டுரைத்தார் வை
யகஞ்சீருறையவே." என்று கோயில் கந்தாடையண்ணனும் பெரியஜீயர்விஷய
மான "கண்ணினுண்சிறுத்தாம்பு"என்கிற ப்ரபந்தத்திலே முடிவிலே யருளிச்
செய்தார். இன்னமும் సోయంభూయస్స్వయముపగతో దేశికైస్సంసదం తే
శ్రుత్వాగూఢం శఠరిపుగిరా మర్థతత్త్వం త్వదుక్తమ్ । ఆగోపాలం ప్రథయతితరా
మద్వితీయం త్వదీయం వాచాందూరం వరవరమునే వైభవం శేషశాయీ என்றும்
ఆచార్యత్వం త్వధికమితియత్ ఖ్యాతమామ్నాయముఖ్యై శ్శేషశ్శ్రీమాన్ భవతి భగ
వానీశ్వరత్వం విహాయ । మంత్రం దత్వా వరవరమునే మహ్య స్త్రిరత్నం త్వదీయం
దేవశ్శ్రీమాన్ వరవరమునే వర్తతే దేశికత్వే என்றும் பரமாப்தரான வெறும்பி
யப்பாவும் அருளிச்செய்தார். இப்படி யநர்யநாஸித்த అనన్యథాసిద్ధ ப்ரபல

ப்ரமாணங்களாலே இதினுடைய மாஹாத்ம்யம் வ்யக்தம். இன்னாரின்னாரெ ன்னாதே ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களையும் குறித்து நம் வீடுமுதலான நூற்றெட் டு திருப்பதியிலும்இவர் தனியனை ஸ்ரீசைலேச தயாபாத்ரமாதியாய் திவ்ய ப்ரபந்தாநுஸந்தாநம் நடத்திப்போருங்கோளென்று பெரியபெருமாள் ஆஜ்ஞா பித்தருளியிருக்க, ராமாநுஜதயாபாத்ரமாதியாய் திவ்யப்ரபந்தானுஸந்தாநம் நடக்கவேணுமென்று நிர்ப்பந்தித்துக்கொண்டு திவ்யதேசக்ஷோபம் பண்ணு மவர்களுக்கு பகவதாஜ்ஞாதிலங்கநமன்றி வேறு ப்ரயோஜந மில்லையென்று மிடம் நிரூபகர்களுக்கு ஸுஜ்ஞேயம்.

இதித்ரிம்சத் ப்ரச்'யாம் ஷட்விம்ச

ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் பூர்வப்ரஸ்துதமான ராமாநுஜ தயாபாத்ரவிஷயமான ஸப் தவிம்சதி ப்ரச்நோத்தரம் எங்ஙனேயென்றில்:- இந்த "ராமாநுஜதயாபாத்ர ம்" என்கிற தநியன் பரகாலஜீயர் நியமித்தாரென்கிற லோகப்ரஸித்திக்கு மப வாதக ப்ரமாணமில்லாமையாலே அவருண்டாக்கினாரென்று மிடம் யுக்தம். இந்தத் தநியன் அவருக்குமுன்னே யுண்டு, அவர் இதற்கு ப்ரவசநமாத்ரம் ப ண்ணினார், அதுகொண்டு அவர்செய்தாரென்று லோகப்ரஸித்தி; என்று சொ ல்லப்பார்க்கில் வேதாந்தாசார்யருடைய வைபவவிஷயமாக நடுவிலாழ்வான் திருவம்சஸ்தரான மத்யேஸுதர்சநாசார்யர் முதலானார்பண்ணின அநுஷ்டுப் ச்லோகப்ரபந்தத்திலும் ஆசார்யவ்ருத்த ச்லோகப்ரபந்தத்திலும் இந்தத் தநி யனை ப்ரதிபாதியாமையாலே யிதுமுன் புண்டென்று மிடம் அநுபபந்நம். வேதாந்தாசார்யருடைய வவதாரவிஷயமாகவும் ராமாநுஜதயாபாத்ரமென் கிற தநியன்விஷயமாகவும் ப்ரம்மாண்டபுராணத்தில் க்ருஷ்ணார்ஜுந ஸம்வா தமான நாலு அத்யாயமுண்டென்று வைத்துக்கொண்டிருக்கு மவர்கள் அத் யந்தம் அபஹாஸ்யர். எங்ஙனேயென்றில்:- "విత్రాసినీ విబుధ వైరివధూధనీనాం పద్మాసనేన పరిచారవిధౌ ప్రయుక్తా। ఉత్ప్రేక్ష్యతే బుధజనైరుపపత్తిభూమ్నా ఘంటా హరేస్సమజనిష్ట యదాత్మనేతి" என்று ஸ்வப்நவ்ருத்தாந்தாதிகளாகிற உபப த்திகளாலேபுதஜநங்கள் தம்மைகண்டாவதாரமாக உத்ப்ரேக்ஷிக்கிறார்கள்; அ தாவது:- உத்கடகோடிக ஸம்சயமான ஸம்பாவநாத்மகஜ்ஞாநத்திற்கு விஷய மாக்குகிறார்களென்று புராண ப்ரதிபாத்யராக ஸ்வாபிமதரான வேதாந்தா சாரியரே யருளிச் செய்கையாலே புராணமில்லையென்று மிடம்ஸித்தம். புத ஜநங்கள் கண்டாவதாரமென்று ஸம்சயிக்கிறாரென்று மிதிற் காட்டில் ப ரம ரிஷிகள் புராணங்களிலே கண்டாவதார மென்று தம்மை நிச்சயரூ பேண ப்ரதிபாதித்தார்கள் என்றால் ப்ரசம்ஸாதிசயம்ஸித்திக்குமே. ஆகையா லிவ்விஷயத்தில் புராணமில்லையென்று மிடம் ஸித்திக்கையாலே யிவ்விஷய த்தில் புராணமுண்டென்று மவர்கள் அத்யந்தமபஹாஸ்யர். இந்தத்தநியன் உ ண்டாய் நூற்றிருபது ஸம்வத்ஸரமுண்டு. இத்தை மேல்நாட்டிலே க்ருஷ்ண தேவராய வுடையார், சிங்கதேவராயவுடையார், கண்டீரவ நரஸதேவராயவு

டையார் என்கிற விவர்களை பரகாலஜீயர் அனுவர்த்தித்து வச்யராக்கிக்கொண்டு அவர்கள் பலத்தினாலே இந்தத் தநியனையுங் கூட ப்ரபந்தாதியிலே யநுஸந்திக்கும்படி திருநாராயணபுரத்திலே சைவித்தார். இந்த ராஜக்ருஹத்திலே போக்குவரத்தாயிருக்கிற சிங்காரம்மனென்கிற ஸ்வசிஷ்யை யடியாக ராஜாநுமதியாலே வேதாந்தாசார்யரைத் திருநாராயணபுரத்திலே ப்ரதிஷ்டைபண்ணி வைத்தாரென்று சொல்லுவர்கள். இவருடைய யத்நம் தொண்டைமண்டலத்தில் பலியாமற்போச்சுது. பலுவிடங்களிலே பலியாமலிருந்தது. கோயிலிலே யிந்தபரகாலஜீயர் ப்ரஸக்தியில்லை.

இதித்ரிம்சத்ப்ரச்நயாம் ஸப்தவிம்ச

ப்ரச்நோத்தரம்.

பரகாலஜீயர் பெருமாள்கோவிலுக்கு வந்த விஷயமான வஷ்டாவிம்ச ப்ரச்நோத்தரம் எங்ஙனேயென்றில்:- பரகாலஜீயர் பெருமாள் கோவிலுக்குவந்து அழகிய மணவாளஜீயர், ஆத்தான்ஜீயர், திருமலைதாதாசார்யர், இவர்கள் யெழுந்தருளியிருக்கிற நாளையிலே திருமலைதாதாசார்யர் திருமாளிகையிலேவந்து "ராமாநுஜதயாபாத்ரம்" என்கிற தநியனை இந்தகச்சிநகர் பதினெட்டுத்திருப்பதியிலும் ப்ரபந்தானுஸந்தானத்திற்கு ஆதியிலே யநுஸந்திக்கும்படி பண்ணவேணுமென்ன,திருமலை தாதாசார்யரும் "கோயிலழகிய மணவாளஜீயர் அயோத்யை ராமாநுஜய்யங்கார் நாள்துடங்கி பலுகாலமாய் நடந்துவந்து முன்பு அஸ்மத்கூடஸ்தரான தாததேசிகரும் நடப்பித்து பெரியஜீயருக்குத் தனிக்கோவிலுங் கட்டிவைத்து அங்கே யெழுந்தருளப்பண்ணி வைத்து இப்படி யன்றுமுத லின்றளவு மவிச்சிந்நமாய் நடந்துவருகிற விந்த ஸ்ரீசைலேச தயாபாத்ரமென்கிற தநியனை நாம் விரோதிப்பதில்லை" யென்று சொல்ல, பரகாலஜீயரும் அத்யந்தம் கோபித்துக்கொண்டு தம்முடைய கமண்டலுவைத் திருமலைதாதார்யர் திருமாளிகைவாசலிலே யுடைத்து சபித்துப்போனார். திருமலை தாதாசார்யரும் பேரருளாளருடையவும் பெரியஜீயருடையவும்பெருங்கருணையாலே நிர்த்துக்கராய்ஸுகோத்தரராய்க்கொண்டு பதினெட்டு திருப்பதியிலும் அத்தைச் சேர்ந்த ஆழ்வார்கள் ஆசார்யர்கள் ஸன்னிதிகளிலும் "ஸ்ரீசைலேச தயாபாத்ரமென்கிற" தநியனை நடப்பித்துக்கொண்டு வந்தாரென்று ப்ரஸித்தம். கூடஸ்தரான தாதாசார்யர் தம்முடைய சிஷ்யரான ராயனுடைய ராஜ்யதந்த்ரம் பண்ணிக்கொண்டு வருகிறபோது தென்னேரி உடைந்துபோனதாய் ஸர்வப்ரகாரத்தாலும் கட்டுப்படாததாய் தாமேபோய் கட்டிவைக்க வேணுமென்று புறப்பட்டு, வழியாக வஸ்திகிரியிலே யேறிப்பேரருளாளரைஸேவிக் கவர,அப்பொழுது சதிராகவாழ்திடுவர் தாமென்கிற சாற்றுமுடிவு செவிப்பட, அத்தை யுபச்ருதியாகக்கொண்டு ஹர்ஷைப்பட்டு நாம்போகிற கார்யம் தலைக்கட்டினால் இப்ரபந்தகர்த்தாவான பெரியஜீயருக்குத்தனிக்கோவில் கட்டிவைக்கிறேனென்றுப்ரதிஜ்ஞைபண்ணிக்கொண்டு போனவிடத்தில் யேரியுடைப்பு ஸுகமாய்க் கட்டுப்பட்டதாய் மீண்டு

அதித்வரையுடனே வந்து பெருமாளுடைய திருநந்தநவநத்துள்ளிருக்கிற சதுஸ்தம்பமண்டபத்தை மூன்றுபக்கம் சுவரடைத்து கர்ப்பக்ருஹமாக்கி யதிலே பெரியஜீயரை ப்ரதிஷ்டைபண்ணிவைத்து க்ரமேணமஹாபண்டபம் மடப்பள்ளி முதலானவை கட்டிவைத்தாரென்று ப்ரஸித்தமிறே.

## இதித்ரிம்சத் ப்ரச்ந்யாம் அஷ்டாவிம்ச

## ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் தென்கலையார் வடகலையார் என்கிற வ்யபதேச பேதவிஷயமான ப்ரச்நத்திற்குத்தரம் எங்ஙனேயென்றில்:— கலையென்று வித்யையாய் தென்கலையென்றுதமிழ்வித்யை. வடகலையென்று ஸம்ஸ்க்ருதவித்யை. அதில் விவக்ஷாவிசேஷத்தாலே தென்கலையென்று ஆறாயிரப்படி முதலான திவ்யப்ரபந்த வ்யாக்யாநங்களையும், வடகலையென்று ப்ரம்மஸூத்ரபோதாயந வ்ருத்தி ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களையும் வ்யபதேசிப்பதாய், தத்ப்ரவர்த்தகத்வத்தாலே ஆழ்வான், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, முதலானோரைத் தென்கலையாரென்பதாய், ஸ்ரீபாஷ்யாதி ப்ரவர்த்தகத்வத்தாலே நடாதூர் பெரியம்மாள் முதலானோரை வடகலையாரென்பதாய், உபயர்க்கு முபயப்ரவர்த்தகத்வமுண்டாயிருக்கச் செய்தேயும் “பூயஸாவ்யபதேசோ மல்லக்ராமாதிவத்” என்கிற ந்யாயத்தாலே தத்தத்ப்ரவர்த்தகத்வ ப்ராசுர்ய மடியாகத் தென்கலையாரென்றும்வடகலையாரென்றும் வ்யபதேசபேத மிருக்கிறது. இன்னமும் இவர்களுக்குத்தென்னாசார்யரென்றும் வடமாசார்யரென்றும் வ்யபதேசபேதமுண்டு. இது பரீக்ஷக வ்யவஹாரபேத மிருக்கிறபடி. இதுவன்றிக்கேயிராமானுஜரோடே கூடினதிருமண்காப்பும் “ஸ்ரீசைலேசதயாபாத்ர”மாகிற தனியன்விஷயமான ப்ராவண்யமாகிற விவற்றையிட்டு சிஷ்யாசார்ய ஸாதாரண்யேந தென்கலையாரென்கிற வ்யவஹாரமும், ஸ்ரீராமாநுஜநிழந்த திருமணும் ராமாநுஜதயாபாத்ரத் தனியன்விஷயமான ச்ரத்தையுமாகிற விவற்றையிட்டு வடகலையாரென்கிற வ்யவஹாரமுமுண்டு. இது பரீக்ஷகபாமரஸாதாரண வ்யவஹாரமிருக்கிறபடி. அயமத்ரநிஷ்கர்ஷ:—தென்கலையாரில் வாநமாமலைமடம். கோயில் ஸ்ரீரங்கராஜஜீயர்மடம், திருமலையில் பெரியஜீயர்மடம், சிறியஜீயர்மடம், பெருமாள்கோவில் அழகியமணவாளஜீயர் மடம், முதலானமடங்களும் தத்ஸம்பந்திகளும், முதலியாண்டான், பட்டர், அநந்தாண்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, முதலான அசேஷாசார்ய புருஷவம்ச்யர்களும் தத்ஸம்பந்திகளுமாகவிவர்களெல்லாம் பிள்ளான்முதலான கூடஸ்த ஸம்ப்ரதாயத்திற் கனுகுணமான பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலானோர் ஸம்பந்தத்திலே பஞ்சஸம்ஸ்காரத்தைப் பெற்று, மந்த்ரோப தேஷ்டாக்களானவர்களருளிச்செய்த மந்திரார்த்தவிஷய ப்ரபந்தங்களை யத்யாதரத்துடனே யதிகரித்துக்கொண்டு, ததுக்தங்களான ஸ்வரூபாநுரூப வ்ருத்தங்களையும் நிஷித்தகாம்ய ஸ்பர்சரஹிதங்களுமாய் அத்யாவச்யகங்களுமான வர்ணாச்ரமதர்மங்களையும் அநுஷ்டித்துக்கொண்டு தத்வவிஷயத்திலும் அநுஷ்டாநவிஷயத்தி

னும் அந்யோந்யவைஷம்ய விரஹிதராய் ஸ்ரீபாஷ்யவிஷயத்தில் வேதாந்தாசார்ய ஸம்ப்ரதாயமுடையரா யிருக்குமவர்கள் தததநுகுணமாக ஸ்ரீபாஷ்யகுரு பரம்பராக்ரமத்திலே "ஸ்ரீமாந்வேங்கடநாதார்ய:" என்கிற தநியனை யநுஸந்தித்துக்கொண்டு ஸ்ரீபாஷ்யகர்த்தா விஷயத்தில் வேதாந்தாசார்யாபிப்ராயாநுகுணமாகவே வசநப்ரவசநங்களைப் பண்ணிக்கொண்டு இப்படி ஏககண்டராய்ப்போருவர்கள். வடகலையாரில் அஹோபில மடத்தாரும் தத்ஸம்பந்திகளும் தங்களுக்கு பஞ்ச ஸம்ஸ்காரப்ரதரான பெரியவாச்சாம்பிள்ளை முதலானோருளிச்செய்த மந்த்ரார்த்தவிஷய க்ரந்தங்களை யநாதரித்துத் தத்விருத்தங்களான ரஹஸ்யத்ரயஸாராதிக்ரந்தங்களை யாதரித்து அதிகரித்துக்கொண்டு ஸம்ப்ரதாயாதி லங்கநம் பண்ணுகிறார்களாகையாலே அதவர்களுக்கு மநுசிதம். முநித்ரயஸம்ப்ரதாயஸ்தருக்கும் பரகாலஜீயர் ஸம்ப்ரதாயஸ்தருக்கும் அஹோபிலமடத்திற் கதிபதியான ஷஷ்டபராங்குச ஸ்வாமியினுடைய ஸம்ப்ரதாயமுண்டாகையாலே ஷஷ்டபராங்குச ஸ்வாமிக்குப் பெரிய வாச்சாம்பிள்ளை ஸந்நிதியிலே பஞ்சஸம்ஸ்கார ஸம்ப்ரதாயமுண்டாகையாலே யவரினி யிரண்டு ஸம்ப்ரதாயஸ்தருக்கும் தத்ச்சிஷ்ய ப்ரசிஷ்யர்களுக்கும் ஸ்வபரமாசார்யரான ஷஷ்டபராங்குச ஸ்வாமிக்குப் பரமாசார்யரான பெரியவாச்சான்பிள்ளை திருவடிகள்விஷயத்தில் அநாதரம்பண்ணுகை யநுசிதம். வேதாந்தாசார்யரருளிச்செய்த தாத்பர்யசந்த்ரிகை, மணிப்ரவாளமான ரஹஸ்யத்ரய விரோத பரிஹாரம், ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷை, இவைக ளாகாங்க்ஷிதாம்சங்களிலே யந்யோந்ய மேகவாக்யங்களாய்க்கொண்டு நாதயாமுநயதிவர ஸம்ப்ரதாயவ்ருத்திகளாகிற கார்த்தயுகதர்ம்ம நிஷ்டாதிகாரிகளுக்கு பிஷ்டபசுயாக மல்லது ஸாக்ஷாத்பசுயாகங்கூடாதென்று வேதாந்தாசார்யருக் கபிமதமென்று ப்ரதிபாதியா நிற்கச்செய்தேயும், அத்தை யதிலங்கித்து ப்ரத்யக்ஷபசுயாகம் பண்ணுகையும், இப்படி தத்விருத்தங்களுமாய் தம்மில் மிதோ விருத்தங்களுமான తద్విరుద్ధంగళుమాయి తమ్మిల్ మిథో విరుద్ధంగళుమాన தத்வாநுஷ்டாநங்களை ப்ரதிபாதித்துக் கொண்டு திவ்யதேசங்களைத் தநியனுக்காக க்ஷோபிதங்களாக்கிக்கொண்டு இப்படிஜகத்க்ஷோப பர்யவஸிதராகிறார். ஆகையாலவர்களெல்லார்க்கு மிது அத்யந்தமநுசிதம். இவ்வர்த்தம் நிரூபகமத்யஸ்த த்ருஷ்டியாக நிரூபித்துப் பார்க்குமளவில் ஸஹ்ருதய ஹ்ருதயாரூடமாம்.

இதித்ரிம்சத் ப்ரச்நயாம் ஏகோநத்ரிம்ச

ப்ரச்நோத்தரம்.

அநந்தரம் திவ்யதேசங்களிலே பெருமாள்புறப்பாடுகண் டருளுகிறபோது திவ்யப்ரபந்தாநுஸந்தாநம் முன்னும் வேதபாராயணம் பின்னுமாக நடந்துப் போருகைக் கு மூலமென்னென்கிற சரமப்ரச்நத்திற்குத்தரம் எங்ஙனேயென்றில்:— ఋగ్యజుస్సామాథర్వణవేదంగళ్ ருக்யஜுஸ்ஸா மாதர்வண வேதங்கள் நாலுந் தனித்தனியே ஸ்வஸ்வமாத்ர பர்யவஸிதங்களாகையாலும் திவ்யப்ரபந்தம் சதுர்வேத ஸம்மிதமாகையாலும் இந்த ப்ராதாந்யாப்[illegible]

யங்களை யிட்டு சதுர்வேத ஸம்மிதங்களான ப்ரபந்தங்கள் முன்னும், சதுர்வேதங்களி லொன்றான ருகாதிகள் பின்னும், அநுஸந்திக்கப் படுகிறது. இன்னமும் வேதம் பரத்வப்ரவண மாகையாலும் திவ்யப்ரபந்தம் அர்ச்சாவதார ப்ரவணமாகையாலும் இவற்றிற்கு ப்ரக்ருதோபயோகாநுபயோக ப்ரயுக்தவைலக்ஷண்ய நிபந்தனமாக திவ்யப்ரபந்தம் முன்னும் வேதம் பின்னுமாகிறது. இன்னமும் "ராஜவத்சோபசாராத்" என்கிறபடியே ராஜாக்களுக்கு போகாவலி பிருதாவலிகள் முன்னும் ஸ்வஸ்திவாசநம் பின்னும் ஆகிறாப்போலே யிங்கு மர்ச்சாவதாரம் ராஜவதுபசரணீய மாகையாலே விருதாவலி ஸ்தாநீயங்களான திவ்ய ப்ரபந்தங்கள் முன்னும் ஸ்வஸ்திவாசந ஸ்தாநீயவேதபாராயணம் பின்னுமாயிருக்கும். இன்னமும் "సవితుర్మండలే బ్రహ్మా న్విష్ణుశ్శక్రః ప్రబంహితాః। స్తువంతిమునయస్సూర్యం గంధర్వాగేయస్తేపురః" என்று ஸூர்யனுக்கு முன்னே கானமும் பின்னே ஸ்துதியும் நடக்கிறாப்போலே யிங்குங் கோடிஸூர்யஸமரான வர்ச்சாவதாரத் தெம்பெருமான்களுக்கு முன்னே திவ்யப்ரபந்தாநுஸந்தானமும் பின்னே பகவத்ஸ்துதிபரமான வேதபாராயணமும் நடக்கிறது. இன்னமு மிதற்கு மூலாந்தரமுங் கண்டுகொள்வது.

இதித்ரிம்சத் ப்ரச்ந்யாம் த்ரிம்ச

ப்ரச்நோத்தரம்.

இனி ப்ரகீர்ணம் சொல்லுகிறது. அதெங்ஙனே யென்றால்:- முதலாழ்வார் மூவருக்கும் அவதாரகல்யப்தஸங்க்யையில் ப்ரமாணம். "ఆజ్ఞాధీశ్రీచంద నేద్వాపరాఖ్యే" என்று. இதில் "ఏకస్థానం దశస్థానం శతస్థానం సహస్రకం। అయుతంలక్షకఞ్చేతి" என்கிற க்ரமத்திலே அகாராதி கடபயாதியைப்பற்றி ஆ=உ. க்ஞா=அ௦. தீ=௯௦௦.ர=உ௦௦௦.ச=௬௦௦௦௦. ந்த=அ௦௦௦௦௦ஆறு என்றபடி. திருமழிசைப்பிரான் அவதாரத்திற்குக் கலியுகஸங்க்யை="ద్వాపరాజ్ఞానధారాఖ్యే" என்று. நம்மாழ்வார் திருவவதாரத்திற்கு கல்யப்தஸங்க்யை "శ్రీవిజ్ఞానదీనోత్తరే" என்று குலசேகராழ்வார் திருநக்ஷத்ரத்திற்கு கல்யப்தஸங்க்யை "కల్యబ్దేసుఖసంఖ్యయావ్యపగతే" என்று. பெரியாழ்வார் திருவவதாரத்திற்கு கல்யப்தஸங்க்யை "తత్త్వాబ్ధావపగమేకలౌ" என்று. தொண்டரடிப்பொடியாழ்வார் திருவவதாரத்திற்கு கல்யப்தஸங்க்யை "దేహశ్రీశరదుత్తరే" என்று. திருப்பாணாழ்வார் திருவவதாரத்திற்கு கல்யப்தஸங்க்யை "శ్రీవేలాబలనిగమేకలియుగే" என்று. திருமங்கையாழ்வார் திருவவதாரத்திற்கு கல்யப்தஸங்க்யை" సుధాగానాబ్ధానాం కలియుగభవానామపగమే" என்று. ஆண்டாள் திருவவதாரத்திற்கு கல்யப்தஸங்க்யை "సిద్ధానాంశరదాం కలావపగమే" என்று. உடையவர் திருவவதாரத்திற்கு சகாப்தஸங்க்யை. "ధీలబ్ధా" என்று. திருநாட்டிற் கெழுந்தருளியதற்கு சகாப்தஸங்க்யை "ధర్మోనష్టః" என்று. வே

தாந்தாசார்யருடைய் வவதாரத்திற்கு சகாப்தஸங்க்யை- “[illegible]” என்று. திருநாட்டிற் கெழுந்தருளினதற்கு சகாப்தஸங்யை “[illegible]” என்று. மணவாளமாமுநிகள் திருவவதாரத்திற்கு கல்யப்தஸங்க்யை= “[illegible]” என்று. சகாப்தஸங்க்யை “[illegible]” என்று. திருநாட்டிற் கெழுந்தருளின சகாப்தஸங்க்யை “[illegible]” என்று. சகாப்தத்தில் ககளஉ - வதான விபவவர்ஷத்தில் வேதாந்தாசார்யருடைய திருவவதாரம். அதற்கு நாற்பத்தைந்தாவதான பரீதாபிஸம்வத்ஸரத்திலே பன்னீராயிரம் திருமுடிதேச விப்லவம் வந்தது. அப்போது நம்பெருமாள் கோயிலைவிட்டு வலசை யெழுந்தருள, வ்ருத்தரா யெழுந்தருளியிருந்த பிள்ளை லோகாசார்யர் ப்ரேமபரவசராய்க் கொண்டு பெருமாளுக்குத் திருக்காவலாகக் கூடவெழுந்தருளினர். இப்படி பிள்ளை லோகாசார்யர் வேதாந்தாசார்யரில் காட்டில் ஜ்ஞானதோஜஞ் மதச்ச ச்ரேஷ்டராகையாலே கூரம்பிள்ளை வேதாந்தமென்று வேதாந்தாசார்யருக்கு முன்னே பிள்ளை லோகாசார்யருக்கு பெரியபெருமாள் அருளப்பாடு ஸாதித்துக் கொண்டுவருகிறார். ஆகையாலே சங்காந்தரத்திற் கவகாசமில்லை. லோகாசார்யர், ச்ரீஸூக்தியை ச்லாகித்ததுண்டாகில் குணநிபந்தனமாமித்தனே. பரீதாபிவருஷத்திற் கைந்தாவதான நளவருஷத்திலே வேதாந்தாசார்யருடைய வவதாரம். அதற்கைம்பத்தி ஞாலாவதான ஸௌம்யவருஷத்திலே வேதாந்தாசார்யர்திருநாட்டிற்கெழுந்தருளினர். ஸாதாரணவர்ஷம் மணவாளமாமுநிகள் திருவவதாரம். விரோதிக்ருத்வர்ஷத்தில் நம்பெருமாள் மீளவுங் கோயிலுக் கெழுந்தருளினர். ஆக பரீதாபிவருஷம் முதல் விரோதிக்ருத்வருஷத்தளவும் அருபதுவர்ஷம் வலசைசெய்ய, அந்தவிரோதிக்ருத் வருஷத்திற்கு நாற்பத்திமூன்றுவதான ஜயவர்ஷத்திலே நயினாசார்யர் திருநாட்டிற் கெழுந்தருளினர். அந்த ஜயாக்யவருஷத்திற்கு முப்பத்தோராவதான ருத்ரோத்காரிவருஷத்திலே மணவாளமாமுனிகள் திருநாட்டிற் கெழுந்தருளினர். இது அவதாரதீர்த்தவருஷாதிக ளிருக்கும்படி. இன்னமும் மணவாளமாமுநிகள் வண்டுவராபதி மன்னனென்கிற மந்த்ரலிங்கமடியாக தக்ஷிணத்வாரகாதீசரான மன்னனுருக்குமாசறுசோதியென்கிறதிருவாய்மொழியை நித்யாநுஸந்தேயமாக ஸமர்ப்பித்தார். மணவாளமாமுநிகளுக்கநந்தரம் அவர் திருப்பேரனாரானஜீயர் நயினார் திருநகரியில் திருக்கோபுரங்களையும் ப்ராகாரங்களையும் பெரியஜீயர்நாளையில் குறையிருந்ததைத் தலைக்கட்டினார். ஆழ்வார் விஷயமான நக்ஷத்ரமாலிகையென்கிற சப்தார்த்தோ பயசித்ர ப்ரபந்தத்தையருளிச்செய்தார்.

நம்பெருமாள் தம்முடைய ஸந்நிதிவாசல்படியைப்பிடித்துக்கொண்டு உள்ளே யிருந்துகொண்டு நம்பிள்ளை திருவோலக்கத்தைக் கடாட்சித்துக் கொண்டு பிள்ளையுபந்யாஸத்தைத் திருச்செவிசாற்றி யருளாநிற்க, திருவிளக்குப் பிச்சனென்கிறவன் “இப்படி கலியிலே அர்ச்சாவதாரஸமாதியைக் குலைத்துக்கொள்ளக்கடவீரோ” வென்று அடர்த்து வார்த்தைசொல்ல,ஆகிலுள்ளே போகிறேனென்று பூபாலராயனிலே யெழுந்தருளுவராம். இப்படியிறே

நம்பெருமாள் பிள்ளையுபந்யாஸத்திலே செவிசாய்த்திருப்பது? பட்டருக்கு
உடையவர் வேதாந்தசார்ய பதத்தையும் ஸ்ரீஸூக்தி ஸிம்மாஸனத்தையும்
ஸாதித்தருளி நம்மைப்போலே இவரை ப்ரதிபத்தி பண்ணுங்கோளென் றரு
ளிச் செய்கையாலே கிடாம்பியாச்சான் முதலானாரும் பட்டரை யநுவர்த்தி
த்துக்கொண்டு போந்தார்கள். உடையவர் திருவெள்ளறை யெம்பெருமான்
விஷயமாக ஒருச்லோகமும் ஆழ்வார்விஷயமாக ஒருச்லோகமும் ஆண்டாள்
விஷயமாக ஒருச்லோகமும் முக்தகமாக வருளிச்செய்தார். இன்னமும் இங்
ஙனே கண்டுகொள்வது. மணவாளமாமுநிகள் அவ்வோ திவ்யதேசங்களி லெ
ம்பெருமான்களை மங்களாசாஸனம் பண்ணும்போது முக்தகங்களாகப் பாட்
டுக்களைப் பலவு மருளிச்செய்தார். விசேஷித்து திவ்ய ப்ரபந்தவிஷயமாக
"విద్యన్తేహి పరాశరాదిమునిభిః ప్రోక్తాః ప్రబంధాః పురా భక్తా ఏవహితే తథా
పి సకలం త్యక్త్వా కురంగేశ్వరః భక్తానేవ పరాంకుశాదిపురుషాంస్తత్ప్రబంధాం
శ్చైతాన్ నత్యాదృత్య సదోపలాలయతి యత్తజ్జ్ఞాపనం తత్క్రియా" என்று ஸர்வஜ்ஞ
நங்களுக்கும் திவ்யப்ரபந்த ப்ரமாண ப்ரத்யயம்வரும்படி யருளிச்செய்தார்.
ஏவம் பூதரான மணவாளமாமுநிகள் விஷயமான ஸ்ரீசைலேசதயாபாத்ரத் த
நியனை விரோதிக்கவேணுமென்று சில அத்யந்தார்வாசீநர் திருமலையிலேபோ
ய் அவிடத்தில் அதிகாரியாயிருக்கிறவன் தம்முடையவனென்று அவன்முகத்
தாலும் அர்த்த ப்ரதாநமுகத்தாலும் அர்ச்சகனை யநுகூலிப்பித்துக்கொண்டு
அநாதிகாலமாகத்திருவாராதநோப க்ரமத்திலே "துடங்கண்டி ஸ்ரீசைலேசத
யாபாத்ர"மென்று பெரியஜீயர் முதலானாருக்கு அருளப்பாடிடுமத்தைத்தவிர்
த்துராமாநுஜதயாபாத்ரமென்று அர்ச்சகனைச்சொல்லும்படிகற்பித்துவைக்க,
வவனு மத்தை யங்கீகரித்துக்கொண்டிருக்க, பெரிய திருவோலக்கமாய் வடக
லையாரும் ராஜகீயருமாய்த் திரண்டிருக்கிற வளவிலே திருவாராதநோபக்ரம
த்திலே யந்தவர்ச்சகன் பரவச ஹ்ருதயனாய் அத்தை மறந்துப்பழையபடியே
தானே "துடங்கண்டி ஸ்ரீசைலேசதயாபாத்ர" மென் றருளப்பாடிட, வவர்
கள் பக்னோத்ஸாஹராய்நம்முடைய யத்நம் பெருமாளுக்குத்திருவுள்ளமில்லை
யென்று ஸ்வயமேவ நிவ்ருத்தரானார்களென்று ப்ரஸித்தம். மற்றொருகாலத்
திலே யொரு வடகலைஜீயர் அதிகாரிபலத்தாலே பெருமாள் புறப்பாட்டிலே
இயல்துடக்கத்திலே ராமாநுஜதயாபாத்ரத்தைச் சொல்லுவதாக வுருப்பட்டு
எல்லாரும் திரண்டிருக்கிறவளவிலே வாத்யவாஹமான அநட்வாஹமானது ஜீ
யர் மேலேபாய்ந்துவிழ,வெல்லாருங் கூட்டங்கலைந்து பெருமாளுக்குத் திருவு
ள்ளமில்லையென்று நிவ்ருத்தரானார்களென்று ப்ரஸித்தமிறே. இன்னமும்,
ஏதத்தேசாதிபத்யம் பண்ணிக்கொண்டிருப்பா னொருதுஷ்டனுடைய ராஜத்
வாரத்திலே கிஞ்சி ததிக்ருதனாய் வடகலையாருடைய சிஷ்யனுமான ஒரு

கோலகொண்ட வ்யாபாரி வைஷ்ணவன், தன்னுடைய ராஜகுலபலத்தாலே பெருமாள்கோயிலிலே ராமாநுஜதயாபாத்ரத் தநியனே யநுஸந்திப்பிக்க வேணுமென்று நினைத்து, ராஜபடையையிட்டு தென்னாசார்யர்களை பெருமாள்கோயிலி னின்றும் ராயவேலூருக்கு வருவித்து இவர்களைக்கொண்டு அதற்குக்கையோலை செய்விப்பதாக நிர்ப்பந்திக்க, விவர்கள் அதுக்கிசையாமலிருக்க, இவர்களை யாட்டுவாணியனுடைய வங்காடியிலே வளைத்துவைக்க,விவர்கள்மிகவும் க்லிஷ்டராய்ப் பேரருளாளனை நினைத்து, "முற்காலத்திலே திருமங்கையாழ்வார் நடுவழியிலே ச்ராந்தராக வவரை விச்ரமிப்பித்து வேண்டுந்தநங்களை நிக்ஷேப மெடுத்துக்கொடுத்துக் கடாட்சித்தருளி, இப்படி யாழ்வாரை யுபசரித்தும், பின்பு உடையவருக்கு உத்தமாச்ரமத்தையும் ஆறுவார்த்தையையும் ஸாதித்தருளி, ஸ்ரீபாஷ்யத்திற்கு மூலகந்தமாய் நின்றும்,அதற்குப் பின்பு நடாதூர்பெரியவம்மாள் முதலாக ச்ருதப்ரகாசிகையை யவதரிப்பித்தும், பின்னையும் நம்பிள்ளைமுதல் ஓரான்வழியாய்வந்து முப்பத்தாறுயிரப்படியை பகுமுகமாக ப்ரவர்த்திப்பிக்கும்படி திருவடியூன்றிய தேவப்பெருமாளுக்காக ததாசார்யரான பத்மநாபனை நியமித்து உபகரித்தும், பின்பு மணல்பாக்கத்து நம்பியார் முகமாக பிள்ளை லோகாசார்யனை நியமித்து ஸ்ரீவசநபூஷணத்தை யவதரிப்பித்தும்,இப்படி யிந்ததர்சநத்திற்கு ஆமூலசூடம்வேர்ப்பற்றான தேவரீர் இப்போதிந்த காலுஷ்யத்தையுண்டாக்கி இத்தர்சநத்தைத் தடுக்கிறீரோ"வென்று வெறுத்துக்கொண்டிருக்க,வற்றைராத்ரியிலே யந்தவ்யாபாரி வைஷ்ணவனுக்கு ஆலம்பநமான ஒருதுலுஷ்கனை யந்தராஜத்வாரத்திலே மற்றுமம்அதிக்ருதரானவர்கள் கார்யப்பாட்டாலே சூலதண்டமாக வதித்தார்களாய் அதப்போதே யிவர்களுக்குத் தெறிந்து மிகவும் ஸந்துஷ்டராய்பேரருளாளருடைய துயரறுசுடரடியை மிகவும் புகழ்ந்துகொண்டு பொழுது விடிந்தவாறே தத்ரத்யராலே ஸத்க்ருதராய்க் கொண்டு பெருமாள்கோயிலுக்கெழுந்தருளி பேரருளாளரை ஸேவித்து அன்றுமுதல் நிருபத்ரவமாய்க்கொண்டு பெருமாள் கோயிலிலும் அவற்றைச்சேர்ந்த ஆழ்வார்கள் ஸந்நிதிகளிலும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தநியனை நடத்திக்கொண்டு போந்தார்கள் என்று ப்ரஸித்தம். மற்றுமிந்த ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தநியன் விஷயமாக த்ரோஹத்தை நினைத்த கீடங்கள் பகவந்நிக்ரஹமாகிற தாவாக்நியிலே நீஞ்சுபோனவை பலவுமுண்டு. இதி ல் நுகூலித்தவர்கள் ஐஹிகாமுஷ்மிகங்களிலே குறைவற்று வாழ்ந்துபோனவர்கள் அநந்தமாயிருப்பார்கள். இந்தத் தநியனை நம்பெருமாளுடைய வபிப்ராயத்தாலே வாநமாமலைஜீயர் ஆத்யபாதத்தையும் பட்டர்பிரான் ஜீயர் த்விதீயபாதத்தையும் கோயில்க்கந்தாடையண்ணன் உத்தரார்த்தத்தையும் மௌநிச்லோகங்யாயத்தாலே மாஸமாகரசித்துக்கொண்டு நாளைக்கு சாற்

றுமுறையிலே பெரிய திருவோலக்கத்திலே நம்பெருமாள் திருமுன்பே ப்ரகாசமாக பெரியஜீயருக்கு ஸமர்ப்பிப்பாராகவிருக்க, அத்தை மற்றைநாள் சாற்றுமுறையிலே திருவோலக்கத்திலேநம்பெருமாள் ஒரு பாலரூபேணவிந்தத்தநியனை யெல்லாரும் ச்ரம்விக்கும்படி யருளிச்செய்து, அந்தர்த்தாநகதரானார். இப்படி ப்ரதம ப்ரதிஸந்தானத்தையிட்டு இந்தத் தநியனை மூவரருளிச் செய்தாரொன்றவுமாம். ஸர்வலோகச்ராவ்யமாம்படி நம்பெருமாள் பாலரூபேண ப்ரதமோச்சாரணம் பண்ணுகையாலே நம்பெருமா ளருளிச்செய்தாரொன்றவுமாய்த்து. இத்தை இதற்கு பகுநாள்முன்னே பதரிகாச்ரமத்திலே அயோத்யை ராமாநுஜய்யங்காருக்கு ஸ்வப்நமுகேந பதரிநாராயண னுபதேசிக்கையாலே யித்தை பதரிநாராயண னருளிச்செய்தாரொன்றவுமாயிருக்கும். ஆகையா லிந்தத்தநியனுக்குத் தத்தத்க்ரந்தங்களிலே கர்த்ரு நிர்தேசபேதமும் ஸம்ப்ரதியந்நம்.

## இதிஸ்ரீவதூல்ாகுலதிலக ஸ்ரீவீரராகவகுருவிரசிதம த்ரிம்சத்ப்ரச்நோத்தரம்

ஸமாப்தம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

வாதூல வீரராகவ குரவே நம:

ஆசார்யன் திருவடிகளேசரணம்.